# நாட்டரசன் கோட்டை

# அருள்மிகு கரிகால சோழீஸ்வரர் சிவகாமி அம்மன் திருக்கோயில் மகாகும்பாபிஷேக மலர்

26.08.2002



உ

திருச்சிற்றம்பலம்

# அருள்மிகு சிவகாமி அம்மன் உடனுறை
# அருள்மிகு கரிகால சோழீஸ்வரர் திருக்கோயில்
# மகாகும்பாபிஷேக மலர்
## 26. 8. 2002



*மலர்க்குழுத்தலைவர்*

**Y. சத்தியமூர்த்தி**

*மலர் பதிப்பாசிரியர்*

**நா. சே. நாராயணன்**

**நகரத்தார்**

**நாட்டரசன்கோட்டை**

# பொருளடக்கம்

திருச்சிற்றம்பலம்

# சமர்ப்பணம்

கும்பாபிஷேகத்தின் ஒரு அங்கமாக ஆகிவரும் இம்மலரின் சிறப்பியல்புகள் சிலவற்றை முதலில் காண்போம்.

கோயிலில் உள்ள வழிபாட்டுக்குரிய உருவத் திருமேனிகள், உலாவரும் திருமேனிகள், வெள்ளிமர வாகனங்கள், வெள்ளி அங்கிகள், கோபுரங்கள், 2002 கும்பாபிஷேகத்தில் புதிதாகச் செய்த திருப்பணிகள், 1985 கும்பாபிஷேகத்திற்குப் பின் செய்யப்பட்ட திருப்பணிகள், ஆண்டுதோறும் நடக்கும் விழாக்கள், உழவாரத் தொண்டு ஆகியவற்றை நினைவு கூறுவதுதான் ''கோயிற் செய்திகள்''

தேனினும் இனித்து, தெளிந்த சிந்தையைத் தந்து தெளிவின் பயனாகிய சிவத்தையும் நல்க வல்லது விநாயக வணக்கம். அன்பே நிறைந்து, உணரத் தோய்ந்த இன்ப அன்பினைத் தரவல்லது சிவ வணக்கம். புண்ணிய யோகப் பொழிவுடன் திகழச் செய்யும் அம்பிகை வணக்கம். பிறவி வேறினை அறுக்கும் திருமால் வணக்கம். துன்பத்தினை நீக்கக் கூடியது தாயார் வணக்கம். அரன் மகிழ்ந்த மறையின் பொருளையும் தரும் முருக வணக்கம். ஆறு சமயங்களின் அருளார்ந்த மெய்ப்பொருளைத் தரவல்லது ஐயப்ப வணக்கம். இவ் ஏழு தமிழ் அர்ச்சனை மலர்களையும் தினமும் ஓதி உணர்ந்து ஜெபித்தும், மலர்தூவி அர்ச்சித்தும் வழிபடும் அன்பர் என்பவருக்கு நல்லன எல்லாம் தாமே வந்து சேரும்.

தற்போது மக்கள் அதிகம் ஈடுபாடு காட்டும் பிரதோஷ வழிபாட்டின் நாயகராம் சிவனின் இலிங்க மகாத்மியத்தையும், ஊழிக்காலத்தில் தான் மட்டுமே சிவத்துடன் நின்ற இணைநாயகராகிய நந்தியம் பெருமானின் சிறப்புக்களையும், வலம் வர வேண்டிய ''சோம சூக்தப் பிரதட்சிண'' முறையையும் கூறுவது ''பிரதோஷ மகிமை''.

பழம் பெருமையுடைய காளையார்கோயில் யானைமடுவில் தீர்த்தமாடவந்த கரிகால சோழனால் வணங்கப்பட்டதால் காரணப்பெயர் கொண்டிருக்கலாம் என்ற கரிகால சோழீசர் வரலாற்றையும், காளைக்கோலம் காட்டிவா என்றழைத்ததால் திருப்புவனத்தில் இருந்தே சுந்தரர் பாடிய ஏழாம் திருமுறையின் பாடல்களின் இறங்கற் சுவையினையும், சம்பந்தரின் 3ம் திருமுறையின் காளையார் கோயில் பதிகத்தின் பன்நலங்களையும் பக்திச் சுவையுடன் தருவது ''நாட்டரசன் கோட்டை காளீஸ்வரரும், கானப்பேர் - காளீஸ்வரரும்''

பிற சமயம் சார்ந்திருந்தும், சிவன்பால் ஈர்ப்புண்டு, கல்லெறிந்து வழிபட்டே சிவபதம் அடைந்ததை பனிரெண்டாம் திருமுறையின் வழிநின்று, இறைவனின் எளிவரும் தன்மையைக் காட்டுகிறது ''மெய் வழிபாடு''

உருவமில்லா எம்பிரானுக்குக் கற்பிக்கப்பட்டுள்ள பல மூர்த்தங்களில் ஒன்றான நடராஜர் மூர்த்தத்தின் திருநடனத்தாலேதான் இவ்வுலக இயக்கம் நடைபெறுகிறது என்பதனைத் தெளிவுபடுத்துகிறது; பத்தாம் திருமுறையினை ஆய்வு செய்த ''திருமூலர் திருநெறி'' நூலின் ஒரு பகுதியான ''ஆடல்வல்லான்''

சிவச்சின்னங்களில் முதன்மைபெற்ற ருத்திராக்ஷத்தின் தோற்றம், முகங்களின் வகைகள், அணிவதால் ஏற்படும் பலன்களைக் கூறுகிறது ''ருத்திராக்ஷ மகிமை''

கோயில் சென்று வழிபடும் முறையிலும், கும்பாபிஷேக நடைமுறைகளிலும் உள்ளார்ந்த பொருள், இயற்கையை வழிபட நம்முன்னோர்கள் கண்ட வழிமுறைதான் என்கிறது ''பஞ்சபூத வழிபாடு''

இராமனின் வெற்றிக்கு மூலகாரணமான சிறிய திருவடி, நந்தியின் சூழுரையை மண்ணில் நிகழ்த்த வந்த சிவபெருமானின் கூறுதான் என்பதே ''சுந்தர அனுமான்''

திருவிளையாடற் புராணத்தின் ஒரு படலத்தையும், கீதையின் கர்மகாண்டத்தையும் தருகிறது ''இயலாமை கூறேல்''

கண்கொடுத்து உலகைக்காக்கும் அன்னை கண்ணுடையவளுக்கு; உலகம் வியக்கத்தக்க நடை முறை விதிகளுடன் நகரத்தாரால் 12 ஆண்டுக்கொருமுறை எடுக்கப்படும் விழாவின் சிறப்பினைக் காட்டுவது தான் ''களியாட்டத் திருநாள் நடைமுறை நிகழ்ச்சி - ஒரு சிறு குறிப்பு''

அன்னை கண்ணுடையவளுக்கு நகரத்தார் செய்துவரும் திருப்பணிகளுக்கு எல்லாம் சிகரம் வைத்தது போன்ற திருப்பணியினை விளக்குகிறது ''அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் தங்க அங்கி வரலாறு''

சைவ சித்தாந்தத்தின் உண்மை நெறியினை உலகுக்கு விளக்கவந்த பன்னிருதிருமுறைகளின் வரிசையில் கந்தபுராணமும், திருவிளையாடற்புராணமும் அடங்கும். இப்புராணத் திருவிளையாடல்கள் தேவாரத்தில் 17ம், திருவாசகத்தில் 20ம், கல்லாடத்தில் 31ம், சிலப்பதிகாரத்தில் 2ம் இடம்பெற்று நூலின் பழைமைக்கு சான்று கூறுகிறது. சொல்லழகும் பொருள் ஆழமும், இனிய சந்தங்களும், பக்திசுவை நனி சொட்டவும் கூடிய இந்நூல் மக்களால் அதிகம் பயிலப்படுவதில்லை என்ற குறை தற்போது உள்ளதை நீக்கும் முகத்தான், இந்நூலின் சிறப்பியல்புகளை எடுத்துக்காட்டிடச் செய்த ஆராய்ச்சி நூலிலிருந்து தொகுக்கப்பட்டதுதான் ''திருவிளையாடற்புராண வளங்கள்''.

நகரத்தாரின் கொடைத்திறத்தை வியந்தது தான் ''அள்ளிக்கொடுப்போம் அதையும் அளந்து கொடுப்போம்''

சைவ சித்தாந்த சாத்திரங்களின் விளக்கம், பன்னிரு திருமுறைகளின் விளக்கம், சமயக்குரவர்கள் நால்வர், சந்தான குரவர்கள் நால்வர் பற்றிய குறிப்புக்கள், தொகை அடியாரின் விளக்கமும் திருநட்சத்திரங்களும் நாயன்மார் நலன்களும் தேன் துளிகளாகத் தரப்பட்டுள்ளன.

மலர் சிறக்க வாழ்த்திய குருபீடங்களுக்கும்; மலர் வளம் பெற கட்டுரை, கவிதை எழுதிய சான்றோர்க்கும், மலர் மணம் பெற விளம்பரங்கள் தந்த கொடை உள்ளத்தினருக்கும், மலர்க்குழு அமைத்து எங்களை இப்பணியில் ஈடுபடுத்திய நகரத்தார் பெருமக்களுக்கும்; அழைப்பிதல் தொடங்கி இம்மலர் வெளிவரும் வரை துணை நின்ற சிவகாசி முருகன் பேப்பர் ஸ்டோர் உரிமையாளர் திரு.ஆதி.கண. அண்ணாமலை அவர்களுக்கும், இம்மலரை நன்முறையில் வடிவமைத்துத் தந்த சிவகாசி ராம் டைப் செட்டர்ஸ்சாருக்கும், அழகிய முறையில் அச்சிட்டுத்தந்த சிவகாசி சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ் (பி) லிட் உரிமையாளருக்கும் கரிகால சோழீசர் கூட்டுவித்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மக்கள் வாழ்வில் இருக்கும் இருளை அகற்றும் விளக்காகவும், வழிகாட்டும் நூலாகவும், படிப்போர் பயன்பெறும் வகையில் கருத்துக் கருவூலமாகவும், பக்திச்சுவையுடன் ஆன்மீகக் கருத்துக்களைக் கொண்டதுமான, அருள் மணம் கமழும் அற்புதப்படைப்பாம் இம்மலரை, நகரத்தாரின் சார்பாக, அருள்தரு சிவகாமி அம்மன் உடனுறை அருள்தருகரிகால சோழீஸ்வரர் பொற்பாத கமலங்களில் சமர்ப்பிக்கின்றோம்.

நா.சே. நாராயணன்
மலர்பதிப்பாசிரியர்

Y. சத்தியமூர்த்தி
மலர்க்குழுத் தலைவர்

# திருப்பணி பற்றிய செய்தி

வெ.கண. கண்ணப்பன், தலைவர் திருப்பணிக்குழு

1985ல் நடைபெற்ற கும்பாபிஷேகத்திற்குத் தலைவராகச் செயல்பட்ட எனது தந்தையார் வெ.கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள் மறைவுக்குப் பின்; எனது மாமனார் திரு.சுப. ராம. மெ. நடராஜன் செட்டியாரவர்கள் துணைத் தலைவராக இருந்து கும்பாபிஷேகத்தை திறம்பட நடத்தினார்கள். மேலும் அவர்கள் முயற்சி எடுத்து இராஜகோபுரம் கட்டுவதற்காக வசூல் செய்து, அதை முதலீடு செய்து, ஒருதுகை யாக அந்தப் பணத்தை நகரத்தாரிடம் ஒப்படைத்தார்கள். அந்தப் பணத்துடன் நகரத்தாரிடம் வசூல் செய்து ராஜகோபுரம் கட்டும் பணியை என்னைத் தலைவராகக் கொண்ட நகரத்தார் செயற்குழு பார்த்து வருவ தென்று தீர்மானிக்கப் பெற்றது.

இராஜகோபுரம் நிறைவு பெறும் தருவாயில், கூடிய நகரக் கூட்டத்தில் என்னைத் தலைவராகக் கொண்ட குழு என்று அமைத்து, கும்பாபிஷேகம் நடத்த தீர்மானிக்கப்பட்டது. கும்பாபிஷேக வேலைகளும் துரித மாக நடைபெற்றது. 26.8.2002ம் தேதி கும்பாபிஷேகமும் 10.10.2002ல் மண்டலாபிஷேகமும் சிறப்பாக நடைபெற்றது.

இப்பணி சிறப்புடன் நடைபெற, சிவகங்கை சமஸ்தான தேவஸ்தானத்தின் பரம்பரை அறங்காவலர் திருமிகுD.S.K. மதுராந்தக நாச்சியார் அவர்களும்; மேலாளர் பா. இளங்கோ அவர்களும், சரகக் கண்காணிப்பாளர் ஆ. சேவற் கொடியான் அவர்களும் பெரிதும் துணை செய்தார்கள். அவர்களுக்கு நகரத்தார் சார்பில் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இத்திருப்பணியில் என்னுடன் இணைந்து சிறப்புறச் செயல்பட்ட நிர்வாக, செயற்குழு உறுப்பினர் அனைவ ருக்கும் என்னுடைய உளம் நிறைந்த நன்றியினைக் கூறுகின்றேன்.

இப்பணிக்கு பொருள் உதவி செய்தும், வாய்ச் சொல் அருளியும், உழைப்பினை நல்கியும் மேலும் பல்லாற்றா னும் உதவிய இவ்வூர் நகரத்தார்களுக்கும் பொருளுதவி செய்த இவ்வூரில் பிறந்து திருமணமாகி வெளியூரில் வாழும் பெண்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கண்ணைக் கவரும் வண்ணமுடையதாய்க் கவின் பெற உங்கள் கையிலிருக்கும் இம்மலர் வெளிவருவதற்குப் பொருளுதவி செய்தவர்கள், விளம்பர நன்கொடையளித்த பெருமக்களாவர். வேற்றூரைச் சேர்ந்தவளாயினும்; சிவத்தொண்டில் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு, விளம்பரம் கேட்ட போது முகமலர்ந்து மனமுவந்து கொடுத் தார்கள். அப் பெருந்தகையாளர்களுக்கும் இம்மலரைச் சீரிய முறையில் வெளிக்கொணர்ந்த தலைவர் திரு. Y. சத்திய மூர்த்தி அவர்களுக்கும், பதிப்பாசிரியர் திரு.நா.சே. நாராயணன் அவர்களுக்கும், மலர்க்குழு உறுப்பினர்க ளுக்கும் என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

கும்பாபிஷேகத்தில் வைதீகக் காரியங்களைச் சிறப்புறச் செய்து முடித்த சர்வசாதகம் திருவாடானை, சந்திர சேகரச் சிவாச்சாரியார் அவர்களுக்கும், ஏனைய சிவாச்சாரியார்களுக்கும், கோவில் ஸ்தானிகர் காளீஸ்வரக் குருக்களின் குமாரர்கள் சுப்பிரமணிய குருக்கள், மகாதேவ குருக்கள் ஆகியோருக்கும், இராஜகோபுரம் கட்டிய இலவங்கோட்டை வடுகநாத ஸ்பதியாருக்கும் மற்றும் பல்வகையாலும் உதவிய தொழிலாளர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த இராஜகோபுரம் கட்டும் பெரும்பணியிலும் கும்பாபிஷேகம் நடத்தும் பணியிலும் என்னை ஈடுபடுத் திய நகரத்தார் பெருமக்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

வான்மழை தவறாது பெய்யவும், கழனி சிறக்கவும், அரசு செம்மை வழி நடக்கவும், உயிரினங்கள் யாவும் குறைவின்றி வாழவும் சைவநெறி பரவி உலகெல்லாம் நலம் பல பெற்று வாழவும் திருவருள் பாலித்திட வேண்டும் என்று இத்திருப்பணி செம்மையுடன் நடைபெற அருள்பாலித்த அருள்மிகு சிவகாமி அம்மன் உடனாய அருள்மிகு கரிகால சோழீஸ்வரரைப் பிரார்த்திக்கின்றேன்.

உ

சிவமயம்

# திருப்பணிக் குழு

1. தலைவர் : திரு.வெ.கண. கண்ணப்ப செட்டியார் அவர்கள்
2. துணைத்தலைவர் : திரு. சேவு.ராம. ராம. கருப்பையா செட்டியார் அவர்கள்
3. செயலாளர் : திரு. வீர.சுப.லெ. இராமநாதன் செட்டியார் அவர்கள்
4. துணைச் செயலாளர் : திரு.ராம. உ.உ. கருப்பையா செட்டியார் அவர்கள்
5. பொருளாளர் : திரு.லெ. ராம. கி. வள்ளியப்ப செட்டியார் அவர்கள்

| | | | |
|---|---|---|---|
| 6. | திரு. ப.ப. வே. அண்ணாமலை | செட்டியார் | அவர்கள் |
| 7. | '' மெ.ந. லெட்சுமணன் | '' | '' |
| 8. | '' AL. SP. லெட்சுமணன் | '' | '' |
| 9. | '' பெரி. அரு.கண. இராமசாமி | '' | '' |
| 10. | '' கம்பர் இராம. கண்ணப்ப | '' | '' |
| 11. | '' ஆ. ராம.வெ. கண்ணப்ப | '' | '' |
| 12. | '' ஆ. கண. இராதா கிருஷ்ணன் | '' | '' |
| 13. | '' En. இராம. இராம. ஜெகந்நாதன் | '' | '' |
| 14. | '' கண.க. சொ.கோ. லெட்சுமணன் | '' | '' |
| 15. | '' சுப. இராதா கிருஷ்ணன் | '' | '' |
| 16. | '' சுப. ராம. வெள்ளையப்ப | '' | '' |
| 17. | '' சுப. சிவ.லெ. சிவராமன் | '' | '' |
| 18. | '' சுப. ராம.மெ.ராம. முருகப்ப | '' | '' |
| 19. | '' சுப. யெ.லெ.யெ.லெ. ஏகப்ப | '' | '' |
| 20. | '' கண.க. சொ.கண. சொக்கலிங்கம் | '' | '' |
| 21. | '' புலவர் கண. கணேசன் | '' | '' |
| 22. | '' ஆவி.கண.செ. அ.செ. கண்ணப்ப | '' | '' |
| 23. | '' வெ.கண. அய்யப்ப | '' | '' |
| 24. | '' வீர.சுப. இராமசாமி | '' | '' |
| 25. | '' வயி. சோம. கண்ணப்ப | '' | '' |
| 26. | '' நல. கும. ஜோதி | '' | '' |
| 27. | '' லெ.மா. மகாதேவன் | '' | '' |
| 28. | '' குப.அ.நா. மு.ராம. கண்ணப்ப | '' | '' |
| 29. | '' ச.இராம. சிதம்பரம் | '' | '' |
| 30. | '' சேவு. ராம.ராம. ஆவிச்சி | '' | '' |
| 31. | '' ஆதி. கண. அண்ணாமலை | '' | '' |
| 32. | '' ஆரு.நா. லெட்சுமணன் | '' | '' |
| 33. | '' Y. சத்திய மூர்த்தி | '' | '' |
| 34. | '' நா.சே. நாராயணன் | '' | '' |
| 35. | '' அ.கண. மணிவாசகம் | '' | '' |
| 36. | '' அ.மு. பழ.ந. அண்ணாமலை | '' | '' |
| 37. | '' கா. செந்தாமரை | '' | '' |

## மலர்க்குழு

Y. சத்திய மூர்த்தி செட்டியார் அவர்கள்
நா.சே. நாராயணன் செட்டியார் அவர்கள்
ஆதி.கண. அண்ணாமலை செட்டியார் அவர்கள்
அ.மு.பழ.ந. அண்ணாமலை செட்டியார் அவர்கள்
Y.L. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள்
En. இராம. இராம. ஜெகந்நாதன் செட்டியார் அவர்கள்
V.R. கண்ணப்ப செட்டியார் அவர்கள்
கண.க.சொ.கோ. லெட்சுமணன் செட்டியார் அவர்கள்
மெ.ந. லெட்சுமணன் செட்டியார் அவர்கள்
அ.கண. மணிவாசகம் செட்டியார் அவர்கள்
N. பஞ்சாட்சரம் செட்டியார் அவர்கள்
SP. PALVE வீரப்ப செட்டியார் அவர்கள்.

Ph: (04112) 222115 Email: skmkanci @ md3vsnl net in
Fax: 224305

Sri Chandramouleeswaraya Nama

Sri Sankara Bhaghavad padacharya Paramparagatha Moolamnaya Sarvagnapeeta

His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

# Jagadguru Sri Sankaracharya Swamigal

## Srimatam Samsthanam

No.1, Salai Street, Kancheepuram - 631 502

Date 15.8.2002

வே.கண. கண்ணப்ப செட்டியார்
தலைவர் சிவன் கோவில் கும்பாபிஷேக கமிட்டி
நாட்ரஸன் பேட்டை சிவகங்கை மாவட்டம் 630 556

தங்களது 7.8.2002 கடிதமும் அதிலடக்கம் சிவன்கோவில் கும்பாபிஷேக பத்திரிகையும் கிடைத்து பூஜ்ய ஸ்ரீ மஹாஸன்னிதானத்தில் ஸமர்ப்பணம் செய்யப்பட்டது.

அருள் மிகு ''சிவகாமி சுந்தரீஸமேத ஸ்ரீ கரிகால சோழீஸ்வரர் கோயில் மஹாகும்பாபிஷேகம் 26.8.2002ல் சிறப்பாக நடப்பதற்கும் அதனை தொடர்ந்து வெளியிட இருக்கும் சிறப்பு மலரும் மக்களுக்கு பயன்படும்படி நருமணத்துடன் அமைவதற்கும் ஸ்ரீசங்கரா சார்யஸ்வாமிகள் அனுக்ரஹித்து அருள்மிகு சிவகாமி அம்மன் ஸமேத கரிகால சோழீஸ்வரர் அருளால் உலகமனைத்தும் ஸகலமங்களங்களையும் அடைந்து பரமஷேமமாக வாழவேண்டும் என்று ஸ்ரீஸ்வாமிகள் அருள்பாலித்து ஆசீர்வதித்து அருளிய ப்ரஸாதம் இத்துடன் அனுப்பியிருக்கிறது. இணைப்புப்ரஸாதம்

---

PRIVATE SECRETARY
To His Holiness Sri Jagadguru
Shankaracharya, Dakshinamnaya SRI SARADA PEETHAM
SRINGERI 577 139 (Karnataka)

Ref. No. 07/1/1339
Camp: Sringeri

Date: 15.08.02

The President,
Sivan koil, Kumbabhisheka committee, Nattarasankottai.

சார்பாக தாங்கள் அனுப்பிய அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேக பத்திரிகையும் கடிதமும் கிடைக்கப் பெற்று உங்கள் அனைவருடைய நமஸ்காரங்களுடன் ஸ்ரீஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பாத கமலங்களில் சமர்ப்பிக்கப்பட்டது.

மேற்கொண்ட மஹோற்சவம் நிர்விக்னமாகவும் சிறப்பாகவும் நடந்து இந்த விசேஷ வைபவத்தில் பூர்ண சிரத்தையுடன் நடத்தும் பக்தர்களுக்கும், அவர்களுடன் இம்மாதிரி பகவத் கைங்கர்யத்தில் ஒத்துழைக்கும் ஆஸ்திக மஹாஜனங்கள் அனைவரும் சகல சௌபாக்யங்களும் பெற்று க்ஷேமமாகவும் சிரேயஸ்ஸுடன் வாழ்ந்து வர ஸ்ரீசன்னி தானம் அவர்கள் ஆசீர்வதித்தருளிய மந்த்ராக்ஷதையும் ஸ்ரீசாரதா சந்தர மௌளீஸ்வர ப்ரஸாதமும் இத்துடன் அனுப்பியிருக்கிறது.

Encl: Prasadams.

இப்படிக்கு

Phone: 0091 - 080 - 8600888, 8600377
Fax: 0091 - 080 - 8600633

ஸ்ரீ ராஜராஜேஸ்வரி துணை

பரமபூஜ்ய பரமாசார்ய ஜகத்குரு
ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ சிவரத்னபுரி பகவத் பாதாசார்ய
**ஸ்ரீ ஸ்ரீ ஸ்ரீ திருச்சி மஹாசுவாமிகள்**
ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரம மஹா சமஸ்தானம்
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி நகர்
பெங்களூர் - 560 098

Parama Poojya Paramacharya Jagadguru
Sri Sri Sri Shivaratnapuri Bhagavatpadacharya
**SRI SRI SRI TIRUCHI MAHASWÀMIGAL**
Sri Kailash Ashrama Mahasamsthana
Sri Rajarajeshwarinagar
Bangalore - 560 098.

பேரன்புமிக்க தலைவர் அவர்களுக்கும், அருள்மிகு சிவகாமி அம்மன் உடனாய கரிகால சோழீஸ்வரர் அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் கமிட்டி அவர்களுக்கும்.

ஸ்ரீ கைலாஸ ஆஸ்ரமம் மஹா சமஸ்தானம் ஜெகத்குரு ஸ்ரீ ஸ்ரீ திருச்சி மஹாஸ்வாமிகளின் நல்லாசிகள் பல.

உங்கள் ஊரின் சிவன் கோயில் கும்பாபிஷேகமும், கும்பாபிஷேக நினைவாக மலர் வெளியிடும் செய்தி தங்கள் கடிதத்தின் வாயிலாக அறிந்து ஸ்ரீலஸ்ரீ மகாஸ்வாமிகள் மிக்க மகிழ் கொண்டார்கள்.

26.08.02 அன்று நடைப்பெறும் கும்பாபிஷேகம் சீறும் சிறப்புமாக நடைப்பெற ஸ்ரீலஸ்ரீ மகாஸ்வாமிகளின் நல்லாசிகளோடு, அன்னை ஸ்ரீ ஞானாக்ஷி ராஜராஜேஸ்வரியின் அருளாசியும் உங்களுக்கு உண்டு.

சிவபெருமானும், அருள்மிகு சிவகாமி அம்மனும் அருளாட்சி செய்கின்ற இடமாகவும், எல்லார்க்கும் கருணைமழை பொழியும் அன்னை கண்ணாத்தாள் கோயில் கொண்டிருக்கும் சிறப்புமிக்க இடமாகவும், ஸ்ரீராமர் காதை பாடிய செந்தமிழ் புலவர் கவிசக்ரவர்த்தி கம்பனால் பாட்டரசன் கோட்டையாகி பின்பு நாட்டரசன் கோட்டையில் தெய்வ திருப்பணிகள் செய்வதிலேயே தங்கள் வாழ்நாளின் குறிக்கோளாய் கொண்டு, எதையும் சிறப்பாக செய்கின்ற நாட்டுகோட்டை நகரத்தாரின் தெய்வ திருப்பணிகள் நன்கு ஓங்கட்டும், என்று அன்னை திருஞானாக்ஷி ராஜ ராஜேஸ்வரிக்கு அர்ச்சனை செய்து, அந்த அருட் பிசோதத்தை இத்துடன் அனுப்பியுள்ளோம். எல்லோருழ் அதை அணிந்து கொள்ளவும்.

உங்கள் தெய்வப் திருப்பணி சிறப்பாக செய்ய வாழ்த்துகிறேன். கும்பாபிஷேக மலர் சிறப்பாக அமைந்து அனைவரின் வாழ்விலிருக்கும் இருளை அகற்றும் திருவிளக்காகவும், வழிகாட்டும் நன்னூலாகவும் அமையட்டும் என்று வாழ்த்துகிறேன்.

இப்படிக்கு ஸ்ரீலஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பாதசேவகன்
ஸ்ரீ ஜெயேந்திரபுரி சுவாமி

உ சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்
23-வது குரு மகாசந்நிதானம்
சீர் வளர்சீர் சிவப்பிரகாச தேசிக
பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

☎ 04364 - 232021
திருவாவடுதுறை - 609 803
(நாகை மாவட்டம்)
தொலைபேசி எண் : 04364 - 232021
நாள் 14.8.02

''நமச்சிவாய வாழ்க நாதன் தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க
கோகழி ஆண்ட குருமனிதன் தாள்வாழ்க
ஆகமம் ஆகிநின்று அண்ணிப்பான் தாள்வாழ்க
ஏகன் அனேகன் இறைவன் அடிவாழ்க'

அருள்

## "வாழ்த்துரை"

சிவகங்கை சமஸ்தானம், தேவஸ்தானம் பரம்பரை அறங்காவலர் மேதகு ராணி டி.எஸ்.கே. மதுராந்தகி நாச்சியார் அவர்களின் ஆளுகைக்கு உட்பட்ட நாட்டரசன் கோட்டை அருள்தரு சிவகாமியம்மன் உடனாய அருள்தரு கரிகால சோழீஸ்வரர் திருக்கோயில் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் 26.8.02 அன்று நடைபெறு வது அறிந்து மகிழ்ந்தோம்.

நகரத்தார் அன்று முதல் இன்றுவரை பலதிருக்கோயில்களைத் திருப்பணி செய்து பாதுகாத்து வருவதை தமிழக மக்கள் நன்குணர்வர். அந்நகரத்தாரின் குலதெய்வமாம் கண்ணத்தாள் திருக்கோயிலும், கவிச்சக்கர வர்த்தி கம்பன் தெய்வத்தன்மை பெற்றுத் திகழும் இடமாகவும் திகழும் நாட்டரசன் கோட்டையில் கரிகால் சோழனால் வணங்கி போற்றப்பெற்ற அருள்மிகு கரிகால் சோழீச்சரர் திருக்கோயில் குடமுழுக்கு விழா சீரும் சிறப்புமாக நடைபெற நமது ஆன்மார்த்தி மூர்த்தியாகிய அருள்மிகு ஞானப்பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

---

உ
சிவ சிவ

Ph: 56655

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசித்திருமடம்

திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)
தேதி 13.8.2002

## வாழ்த்துரை

சிவகங்கை மாவட்டம் நாட்டரசன்கோட்டை அருள்மிகு சிவகாமி அம்மை உடனாய கரிகால சோழீஸ் வரர் கோயில் அஷ்டபந்தன மகாகும்பாபிஷேகம் எதிர்வரும் 26.8.2002 அன்று நடைபெற விருப்பதறிந்து நாம் மகிழ்கிறோம்.

சோழர்கள் காலத்துக்கு பிறகு விஜயநகர வேந்தர்கள் திருக்கோயில் திருப்பணி செய்து வந்ததாக வரலாறு கூறுகிறது. அதன் பின் திருக்கோயில் திருப்பணிகளை நகரத்தார் முகாப்புடன் செய்து வருவது கண்கூடு 'ஊரானோர் தேவகுலம்' என்ற ஆன்றோர் வாக்கிற்கேற்ப திருக்கோயில் இல்லாத ஊரே இல்லை எனலாம். அப்படிப்பட்ட நிலையில் எழுந்த நாட்டரசன்கோட்டை அருள்மிகு சிவகாமி அம்மை உடனாய கரிகால சோழீஸ்வரர் திருக்கோயில் திருப்பணி முடிந்து நடைபெறவுள்ள கும்பாபிஷேகவிழா சிறப்புற நிகழ்ந்திட வும் தரிசிப்போர் பல வளங்களும் பெற்றுப் பாங்குற வாழ்ந்திடவும், விழாவையொட்டி வெளிவர விருக் கும் சிறப்பு மலர் இதழ் விரித்து பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட ஆன்மீகக் கருத்துக்கள் மிகுந்து விளங்கவும் செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம். சுபம்.

உ
சிவ சிவ
"தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே!"

தவத்திரு.
குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்
☏ : 04577 - 264227 264466

நாள் : 20.08.02

## ஆசியுரை

நாட்டரசன் கோட்டை அருள்தரு சிவகாமி அம்மன் உடனாய அருள்தரு கரிகால சோழீஸ்வரர் திருக்கோவில் குடமுழுக்கு விழா காண்பது அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றோம்.

குடமுழுக்கு விழாவை முன்னிட்டு வெளிவரும் சிறப்புமலர்; படிப்போர் பயன்பெறும் வகையில்; கருத்துக் கருவூலமாகவும்; அருள்மணம் கமழும் அற்புதப் படைப்புகளைத் தாங்கி வரவும் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

'என்றும் வேண்டும் இன்ப அன்பு'

---

உ
வாழ்க தமிழ் சிவமயம் வளர்க சைவம்

HIS HOLINESS
**Sri is Sri Nerambalagiya Desikar @**
**Gnanaprakasa Desika Paramachariya Swamigal**
MADaTHIPATHI - THULAVUR MADAM
KUNNAKKUDI - Via (Sivaganga Dt) Pin : 630 206. Tamilnadu

ஸ்ரீலஸ்ரீ நிரம்ப அழகிய தேசிகராகிய ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்
மடாதிபதி, துலாவூர் மடம்

## வாழ்த்துரை

சிவகங்கை சமஸ்தானம் ஆளுகைக்கு உட்பட்ட, நாட்டரசன் கோட்டையில் வீற்றிருந்து; அருள் பாலித்த வரும், அருள் தரு சிவகாமி அம்மன் உடனாய அருள்மிகு கரிகால சோழீஸ்வரர் திருக்கோவில். இக்கோவிலைத் திருப்பணி செய்து முடித்து 26.8.2002ம் தேதியன்று அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் சிறப்பாக நடைபெறவும். அதன் நினைவாக வெளியிடப் பெறும் மலர் சிறப்பாக அமையவும் வாழ்த்துகிறோம்.

இப்பணியில் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்ட நாட்டரசன் கோட்டை நகரத்தார்களுக்கும் மற்றுமுள்ள மெய்யன்பர்கள் அனைவருக்கும். எல்லாம் வல்ல எம்பெருமான் திருவருளையும், குருமுதல்வர்சற்குரு, ஸ்ரீநிரம்ப அழகிய தேசிக சுவாமிகள் குருவருளையும் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

இங்ஙனம்
ஸ்ரீநி.ஞா. தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்


# கோவிலூர் மடாலயம்

கோவிலூர் - 630 307
(வழி - மானகிரி)
சிவகங்கை மாவட்டம்




Ph: 436846

நாள்: **10.1.03**

அண்மையில் நாட்டரசன் கோட்டையில் மிக்க சிறப்புடன் நிகழ்ந்த அருள்மிகு சிவகாமி உடனாய கரிகால சோழீசுவரர் திருக்குட நீராட்டு விழாவினை ஒட்டி மலர் ஒன்று வெளிவர இருப்பதை அறிந்து மகிழ்ந்தோம்.

அருள்மிகு வாள்நெடுங் கண்ணி என்றழைக்கப்படும் கண்ணாத்தாள்கோயில் கொண்டு கர்த்தருளும் நாட்டரசன்கோட்டை, சிகரத்தில் இருக்கின்ற நகரத்தார் கோட்டையாகும். கோவில் குளம், கோட்டம் என்ற பழங்கால அமைப்பினை உடையது. நடுவில் பரந்த வெளி அதனைச் சுற்றிலும் நகரம், கண்ணுடையநாயகி கோவில், குருநாதன் கோவில், பெருமாள் கோவில் சிவன் கோவில் எனப் பல ஆலயங்கள் மிகச் சிறப்போடு விளங்குகின்றன. இந்நகரத்தார் புள்ளிக் கணக்கை ஆண்டுக்கு ஒருமுறை தவறாமல் அறிந்து கொள்ள உதவுகின்ற செவ்வாய்ப் பொங்கல் மிகவும் புகழ்பெற்றது, கண்ணாத்தாள் களியாட்ட விழா மிகச் சிறப்பான விழாவாகும்.

கண்ணகியே கண்ணாத்தாளாகக் கோவில் கொண்டு அருள் சுரக்கின்றாள் என்பர். கண்ணுடையம்மன் பள்ளு என்ற நூலானது கண்ணாத்தாளின் சிறப்பை உணர்த்தும். இத்தகைய சிறப்புடைய இந்த நகரிலே உள்ள சிவன் கோவில் வரலாற்றுச் சிறப்புடையது. கரிகால் சோழன் இப்பகுதிக்கு வந்தபோது, தான் வழிபாடு செய்திட இக்கோவிலைக் கட்டியமையால் இங்குள்ள மூர்த்தி, அவனுடைய திரு நாமத்தாலேயே கரிகால சோழீசுவரர் என்ற திருப்பெயர் தாங்கி அருள்பாலித்து வருகின்றனர். இத்திருக்கோவிலைப் பெரும் பொருட் செலவில் திருப்பணி செய்து திருக்குட நீரட்டி மகிழ்ந்ததோடு சிறப்பான மலர் ஒன்றினை இங்கு வெளியிடுகின்ற பேறு பெற்ற நகரத்தார் வாழும் நாட்டரசன் கோட்டையில் தான் பாட்டரசன் கம்பனும் கோவில் கொண்டுள்ளான். இத்தகைய பேறு பெற்ற இந்நகர் வாழ் மக்கள் எல்லா நலன்களும் பெற்றுப் பல்லாண்டு வாழ, எம் குரு முதல்வர் கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் வணங்கிய எம்தாய் அருள்மிகு திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் திருவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

ஸ்ரீ சற்குரு நாதன் துணை

# கோயிற் செய்திகள்

தொகுப்பு : - நா.சே. நாராயணன்

## 1. கோயிலில் வழிபாட்டுக்குரிய உருவத் திருமேனிகள்

1. சித்தி விநாயகர்
2. செல்வ விநாயகர்
3. கற்பக விநாயகர்
4. துண்டி விநாயகர்
5. விபூதி விநாயகர்
6. நர்த்தன கணபதி
7. கரிகால சோழீஸ்வரர்
8. அதிகார நந்தி
9. அழங்கார நந்தி
10. துவார பாலகர்கள்
11. சிவகாமி அம்மன்
12. துவார சக்திகள்
13. காசி விசுவேசுவரர்
14. காசி விசுவேசுவரர்
15. விசாலாட்சி
16. சுந்தரேஸ்வரர்
17. மீனாட்சி
18. சுப்பிரமணியர்
19. வள்ளியம்மை
20. தெய்வயானை
21. பாலதண்டாயுதபாணி
22. தெட்சிணாமூர்த்தி
23. லிங்கோத்பவர்
24. பைரவர், வீரபத்திரர்
25. சண்டிகேஸ்வரர்
26. நவக்கிரகம்
27. சூரியன்
28. சந்திரன்
29. அறுபத்து மூவர்
30. தொகை அடியார் 9
31. மாணிக்க வாசகர்
32. சேக்கிழார்
33. திருஞான சம்பந்தர்
34. திருநாவுக்கரசர்
35. சுந்தரர்
36. மாணிக்கவாசகர்
37. சேக்கிழார்
38. மகாவிஷ்ணு
39. ஸ்ரீ தேவி
40. பூதேவி
41. மஹாலெட்சுமி
42. பிர்மா
43. சரஸ்வதி
44. விஷ்ணு துர்க்கை
45. பிரதான பலிபீடம்
46. கொடிமரம்

## 2. உலாவரும் திருமேனிகள்

1. விநாயகர்
2. சுப்பிரமணியர் (புதியது)
3. சுப்பிரமணியர் (பழையது)
4. சோமாஸ் கந்தர்
5. சந்திரசேகரர்
6. பிரதோஷ நாயகர்
7. தனி அம்மன்
8. நடராசர்
9. சிவகாமி
10. மாணிக்கவாசகர்
11. பள்ளி அறை சுவாமி அம்மன்
12. சண்டிகேஸ்வரர்
13. அஸ்த்ர தேவதை
14. நால்வர்

## 3. வெள்ளி வாகனங்களும் செய்து வைத்தவர்களும்

1. பெருச்சாளி - வெ.க.லெ
2. சுவாமி ரிஷபம் - கண.மெ
3. அம்மன் ரிஷபம் - செவு.சித. ஆவி
4. மயில் வாகனம் - சுப.யெ.லெ
5. சிறிய ரிஷபம் - கண.க.லெ
6. கோரதம் - ஆதி. சோம

## 4. வெள்ளி அங்கிகளும் செய்து வைத்தவர்களும்

1. கரிகால சோழீஸ்வரர் : லிங்கம், நாகபந்தம் - நகரத்தார்
2. சிவகாமி அம்மன் : கிரீடம், கைகள், பாவாடை ஒட்டியானம் - நகரத்தார்.
3. தெக்ஷிணாமூர்த்தி : முழு அங்கி - நா.செ.கண.கண. 22.9.38
4. நந்தீஸ்வரர் : முழு அங்கி - சுப.ராம.லெ. ராம கி.லெ.வ
5. பிரதோஷ நாயகர் : முழு அங்கி - 1. சி.குப. கண. ஆ.கண. சின்னராதா, 2. Er. ராம. ராம. ஜெகந்நாதன், 3. ஆதி.கண. அண்ணாமலை 4. ராம. நா.சே. ராம. கருப்பையா 5. சுப.ராம. மெ.ராம. முருகப்பன், 6. (அ) கயி.ஞா. ஆறு கண்ணன் (ஆ) சிவத்திரு. குப. சொக்கலிங்கம்

## 5. மரவாகனங்களும் செய்து வைத்தவர்களும்

1. ரிஷபம் - சேவு.ராம. ராம
2. காமதேனு - நா.பா.ஈ.ச
3. கற்பக விருக்ஷம் - நா.கரு.சிவ
4. கைலாசம் - பெண்கள்
5. நந்தி - சுப.ராம.மெ
6. பூதம் - நகரத்தார்
7. சிம்மம் - ,,
8. யானை - ,,
9. கிளி - ,,
10. குதிரை - ஆவி.சேவு. வகை
11. அன்னம் - சேவு.ராம. உமையாள் ஆச்சி
12. மயில் - மா.கண.மா
13. சூரன் - உ.சொ. மீனாட்சி ஆச்சி
14. ஆட்டுக்கிடா - ,,
15. பல்லக்கு - கண.மெ.நா
16. கோரதம் - ஆதி. சோம
17. கேடகம் - ஆவி.முத்து க.வகை
18. கேடகம் - ,,
19. கேடகம் - ,,
20. தோள்கணி - ஆவி.சேவு. வகை
21. சிறுபல்லக்கு - கடைகார கண்ணப்ப செட்டியார் வகை
22. ரிஷபம் - கண.மெ. (சிவகங்கை கோயிலில் இருக்கிறது)

## 6. கோபுரங்களும் - திருப்பணியாளர்களும் - புதுப்பித்தவர்களும்

| கோபுரம் | திருப்பணியாளர் | புதுப்பித்தவர் |
|---|---|---|
| 1. செல்வ விநாயகர் | வெ.க.சு. வகை | திருப்பணியாளர்கள் |
| 2. கரிகால சோழீஸ்வரர் | ஆண்டப்ப செட்டியார் வகை | ,, |
| 3. சிவகாமி அம்மன் | ஆவி. சேவு. வகை | ,, |
| 4. நடராசர் | ஆவி. முத்து க.வகை | ,, |
| 5. சுப்பிரமணியர் | சக்கந்தி உல.கண. சோம. வகை | ,, |
| 6. பள்ளி அறை | கடைகார கண்ணப்ப செட்டியார் வகை | ,, |
| 7. பைரவர் | ,, ,, ,, | ,, |
| 8. நந்திமண்டபம் | பெ.கண.குப வகை | ,, |
| 9. சண்டிகேஸ்வரர் | குப.அ. வகை | ,, |
| 10. நவக்கிரகம் | கண.செ.அ | AL. SP. லெட்சுமணன் |
| 11. ராஜகோபுரம் | நகரத்தார் | புதிதாகக் கட்டியது |
| 12. தெற்குக் கோபுரம் | ,, | இளைஞர்கள் |
| 13. திருமதில் கோடிப்பூதம் ரிஷபம் | ,, | ஆதி. கண. அண்ணாமலை |

## 7. 2002ல் நடைபெற்ற கும்பாபிஷேகத்தில் புதிதாகச் செய்த திருப்பணிகள்

1. ராஜகோபுரம் புதிதாகக் கட்டியது - நகரத்தார்
2. ராகு, கேது புதிய திருமேனிகள் ஸ்தாபிதம் - நகரத்தார்

3. சூரியன், சந்திரனுக்கு புதிதாக மாடம் கட்டியது - நகரத்தார்
4. மின் விளக்குகள் முழுமையும் புதியதாக வயரிங் செய்தது - நகரத்தார்
5. சரஸ்வதி ஸ்தாபிதம் - கி.நா.கண.நட. குடும்பத்தினர்
6. நந்தீஸ்வரருக்கு முழு வெள்ளி அங்கி - சுப.ராம. லெ.ராம கி.லெ.வ
7. பிரதோஷ நாயகருக்கு முழுவெள்ளி அங்கி - ஏழு பேர் சேர்ந்து
8. நுழைவாயில் முன் தார்சு மண்டபம் - சுப.ராம.மெ.நட.

## 8. 1985 கும்பாபிஷேகத்திற்குப் பின் நடந்த திருப்பணிகள்

1. சுந்தரேஸ்வரர், மீனாட்சி, நந்தி, பலிபீடம் ஸ்தாபிதம் உபயதார் : சேவு. ராம.ராம
2. பிரதோஷ நாயகருக்கு மர ரிஷபம் உபயதார் :- சேவு. ராம.ராம
3. கிணற்றுக்கு பம்பு செட் வைத்து, மேல்நிலைத் தொட்டி கட்டி பைப் மூலம் தண்ணீர் குழாய் அமைத்தது. உபயதார் :- 1. கம்பர் இராம. கண்ணப்பன் 2. ஆதி. சோம. சொ. திருஞானம் 3. சிவத் திரு குப.அ.நா. கரு.குப. சொக்கலிங்கம்
4. பேரூராட்சி குடிதண்ணீர் இணைப்பு வாங்கி தொட்டி கட்டியது : உபயதாரர் திருமதி உமையாள் சின்னராதா கோயிலின் தேவைக்குப் பயன்படுவதால், முன் பணமும் மாதக் கட்டணமும் இல்லாமல் குடிதண்ணீர் இணைப்பு வழங்க பேரூராட்சி மன்றத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டுள்ளது.

## 9. விழாக்களும் உபயதாரர்களும்

| மாதம் | விழா | உபயதாரர் |
|---|---|---|
| சித்திரை | வருடப்பிறப்பு | நகரத்தார் |
| ஆனி | ஆனித் தெரிசனம் | ஆதி.சோம. சொ.திரு |
| ஆவணி | விநாயக சதுர்த்தி | வெ.க.சு.வகை |
| புரட்டாசி | நவராத்திரி - தசமியன்று சுப்பிரமணியர் குதிரை வாகனத்தில் அம்புபோடுதல் | ஆவி. சேவு. வகை |
| ஐப்பசி | 1. தீபாவளிப் பண்டிகை | ஆவி.சேவு. வகை |
| | 2. சஷ்டி அன்று அபிஷேகம் | சுப.ராம. சுப.ராம இராமாயி ஆச்சி |
| கார்த்திகை | மஹாதேவாஷ்டமி | கோயில் குருக்களய்யா |
| மார்கழி | 1. ஆருத்ரா தெரிசனம் | முத்துக. ஆவி.வகை |
| | 2. அஷ்டமி | கண.மெ.வகை |
| தை | சங்கராந்தி | நகரத்தார் |
| மாசி | 1. சிவராத்திரி | வெ.க.சு. கண.வே.ஆறு |
| | 2. மகோத்சவம் | வகைப்படி 10 நாட்கள் |

### மாதக் கார்த்திகை நடத்தும் உபயதாரர்கள்

சித்திரை - நகரத்தார், வைகாசி - ஆதி.சோம. சொ.திரு, ஆனி - மா.கண. மா.வகை, ஆடி - கண.க.சொ. அரு.முரு, ஆவணி - பாகனேரி சீ. சின்னலெ, புரட்டாசி - குப.அ.நா. கரு.குப.சொ, ஐப்பசி கடைகார கண்ணப்ப செட்டியார் வகை, கார்த்திகை - சக்கந்தி உல.க.வகை திருக்கார்த்திகை, மார்கழி - ஆவி. சேவு. வகை தை - ராம.ப.வ.மு, மாசி - மீ. சித.சுப. பங்குனி - குப.அ. வகை

## கார்த்திகை மாதச் சோமவார உபயதாரர்கள்

அபிஷேக ஆராதனை உபயதாரர்கள் :- முதல் சோமவாரம் :- 1. மீ.சித.சுப 2. பெரி. கண.சுப.சி. 3. சுப.சே. இரண்டாவது சோமவாரம் :- கண.வெ.சுயி. கண வகை, மூன்றாவது சோமவாரம் :- ராம. அ.கண.கண. நான்காவது சோம வாரம் :- 1. மு.பழ.அ. நா.சுப. 2. மு.பழ. அ.கண

சன்னதியில் 108 அகல் விளக்கு தீப அலங்கார உபயதாரர்கள் :- முதல் சோமவாரம் :- கி:நா.கண. குடும்பத்தினர் இரண்டாவது சோம வாரம் :- கண.கயி. மூன்றாவது சோமவாரம் :- மீ. ஆவி.கண. ராம. கண. நான்காவது சோமவாரம் :- மு.கண. ராம. நா.லெ.நா.

கடைசி சோம வாரத்தன்று அலவாக் கோட்டை சி.வெ.சி. அரு.108 சங்காபிஷேகம்.

## மாசி மக மகோத்சவம் 10 நாள் திருவிழா - உபயதாரர்கள்

| | |
|---|---|
| 1ம் திருவிழா | ஸ்தானிகாள் (குருக்கள்ளய்யா) |
| 2ம் திருவிழா | கடைகாரக் கண்ணப்ப செட்டியார் வகை |
| 3ம் திருவிழா | ஆவிச்சி செட்டியார் வகை, மீட்டப்ப செட்டியார்வகை, வெ.க.சு. வகை, ஐய்யா கருப்பன் செட்டியார் வகை |
| 4ம் திருவிழா | கொல்லங்குடி பழனியப்ப செட்டியார் வகை 1/4 பங்கு, பட்டண சாமி வகை 1/4 பங்கு, அடைக்கப் செட்டியார் வகை 1/2 பங்கு |
| 5ம் திருவிழா | சூரக்குடி நகரத்தார் |
| 6ம் திருவிழா | மாத்தூர் நகரத்தார் |
| 7ம் திருவிழா | இரணிக்கோயில் நகரத்தார் |
| 8ம் திருவிழா | பிள்ளையார்பட்டி நகரத்தார். குப.அ.நா. வகை 1/2 பங்கு, கண.ராம. வகை 3/8 பங்கு, ஆ.சுப. வகை 1/8 பங்கு. |
| 9ம் திருவிழா | கோளஞ் செட்டியார் வகை |
| 10ம் திருவிழா | காலை கோளஞ் செட்டியார் வகை வீரகண்டானில் தீர்த்தவாரி. இரவு நகரத்தார் பொது. |

குறிப்பு : -9ம் திருநாள் வரை காலையிலும் சுவாமி புறப்பாடு நடைபெறும். மண்டகப்படி ஒன்றுக்கு ரூ60ம் அரிசி படி 25ம் வாங்கப்பட்டுள்ளது. மாசி மகத்திருவிழா ஆரம்பம் 1319ம் பசலி 1910ம் ஆண்டு. இந்த திருவிழாவிற்கு சிவகெங்கை சமஸ்தானமும் நகரத்தார் சார்பில் வகைக்கு ஒருவர் வீதம் 11 பேரும் 14-2-1911ம் ஆண்டு எக்ரிமெண்ட் எழுதி அதை 4-12-1911ல் சப்ரிஸ்தர் ஆபீசில் பதிவு செய்து உள்ளார்கள். மேற்படி எக்ரிமெண்டில் நகரத்தார் சார்பில் கைஎழுத்துப் போட்டவர்கள்.

வகை 1. ஆவி.சேவுகன் செட்டியார் மகன் சிதம்பரம் செட்டி
2. வெ.க.சு. கண. சுப்பிரமணியன் செட்டியார் மகன் கண்ணப்ப செட்டி
3. சி.கயி. கண்ணப்ப செட்டியார் மகன் சிதம்பரம் செட்டி
4. ராம. அடைக்கப்ப செட்டியார் மகன் பெரிய கருப்பன் செட்டி
5. கண.கு. கண்ணப்ப செட்டியார் மகன் சொக்கலிங்கம் செட்டி
6. வெ.கண. மாணிக்கம் செட்டியார் மகன் முத்துராமன் செட்டி
7. ஆ. அங்கப்ப செட்டியார் மகன் பழனியப்ப செட்டி
8. நா.கண. கண்ணப்ப செட்டியார் மகன் லெட்சுமணன் செட்டி
9. குப.அ. நாராயணன் செட்டியார் மகன் முத்தையா செட்டி
10. சித. கண்ணப்ப செட்டியார் மகன் சங்கர நாராயணன் செட்டி
11. சே. நாராய்ணன் செட்டியார் மகன் அருணசலம் செட்டி

தைப்பூசம், பங்குனி உத்தரம் - நகரத்தாரிடமும் பிறரிடமும் வசூல் செய்து நாகசுப்பு முயற்சியால் நடைபெறுகிறது.

### ICICI பேங் - மகளிர் மன்றம் உழவாரப் பணியும், வழிபாடும்

வியாழக்கிழமை : அனைத்துத் தீர்த்தத் தொட்டிகளையும் கழுவுதல், பூஜைக்குரிய சாமான்கள், விளக்கு கள், பாத்திரங்கள் அனைத்தையும் விளக்குதல். கோயில் முழுமையும் கூட்டுதல்.

வெள்ளிக்கிழமை : சரஸ்வதி, இலக்குமி, விஷ்ணு துர்க்கை ஆகிய முப்பெரும் தேவியருக்கும் அபிஷே கம் செய்தல்

சங்கட ஹரசதுர்த்தி : மாதந்தோறும் அனைத்துப் பிள்ளையாருக்கும் அபிஷேகம் செய்தல்

சஷ்டி : மாதந்தோறும் சுப்பிரமணியருக்கு அபிஷேகம் செய்தல்

பௌர்ணமி : மாதந்தோறும் சிவகாமி அம்மனுக்கு அபிஷேகம் செய்து, அன்று இரவு சுவாமி புறப் பட்டு பெரிய வீதி வலம் வருதல்.

ஞாயிற்றுக்கிழமை : கண்ணுடைய நாயகி அம்மன் கோவிலை கூட்டுதல்

சனிக்கிழமை : சக்கரத்தாழ்வார், ஆஞ்சநேயர் இருவருக்கும் அபிஷேகம் செய்தல்.

இவர்களின் உழவாரத் தொண்டினை தம் ஊர்க் கோயில்களிலும் பயன்பெற வேண்டுவோர், நாட்டர சன்கோட்டை ICICI பேங்க் மகளிர் மன்றத்தைத் தொடர்பு கொள்ள வேண்டியது.

### உழவாரத் தொண்டு

மதுரை ஓம் நமச்சிவா உழவாரப் பணிக் குழுவைச் சேர்ந்த 30 பேர் 4.8.2002ல் வருகை தந்து, வெள்ளி அங்கிகள் சாமான்கள், வழிபாட்டிற்குரிய பித்தளைச் சாமான்கள், மணிகள், சரவிளக்குகள், மடப்பள் ளிப் பாத்திரங்கள், கொடிமரம் அனைத்தையும் நன்கு சுத்தம் செய்து மெருகேற்றியும், இரண்டாம் முறை 11.8.2002ல் வருகை தந்து கணபதி, முருகன், பைரவர், சூரியன், சந்திரன், நவக்கிரகங்கள், நந்தி தேவர், துவார பாலகர்கள், துவார சக்திகள், நாயன்மார்கள் ஆகிய சிலைகளுக்கு முன்னரே மரக்காப்பு செய்திருந்ததை நன்கு சுத்தம் செய்தும், கல்தூண்களுக்கு சில வகைத் திரவங்களைப் பயன்படுத்தி சுத்தம் செய்தும், மூன்றாம் முறையாக 25.8.2002ல் வருகை தந்து வெள்ளி வாகனங்கள் அனைத்தையும் நன்கு சுத்தம் செய்து மெருகேற்றியும் பயன் கருதாது இறைத்தொண்டில் ஈடுபடும் இக்குழுவினரின் உழவாரப் பணி மேலும் சிறக்க சிவகாமி அம்மன் உடனுறை கரிகால சோழீஸ்வரர் அருள் என்றும் துணை நிற்கும்.

இவர்களின் உழவாரப் பணியினைத் தம் ஊர்க் கோயில்களிலும் பயன்பெற வேண்டுபவர்கள், C.N. வெள்ளியம்பலம், தலைவர், ஓம் நமச்சிவாய உழவாரப் பணிக்குழு, M 326, எல்லீஸ் நகர், மதுரை 16, என்ற முகவரிக்குத் தொடர்பு கொண்டால் என்றும் தொண்டு செய்யக் காத்திருக்கின்றார்கள்.

### ''திருத்தேர் கொண்டருளவே கூவாய் குயிலே''

1985ம் ஆண்டு கும்பாபிஷேக மலரில் 30 ஆண்டுகளாக நின்று விட்ட மாசி மக மகோத்சவம், புதிய கொடிமரத்தில் கொடி ஏற்றப்பட்டு நடைபெற வேண்டும் என்று பிரார்த்தித்திருந்தோம். ஆனால் இறைவனோ, 1985ம் ஆண்டுக் கும்பாபிஷேகத்தில் பெரும் முயற்சி மேற்கொண்டும் நிறைவு பெறாத, ராஜகோபுரம் கட்டும் திருப்பணியைச் செய்ய அருள்பாலித்தருளியதால் திரு. ER. ராம. ராம. ஜெகந்நா தன் அவர்களின் மேற்பார்வையில், வெ.கண. கண்ணப்ப செட்டியாரைத் தலைவராகக் கொண்ட நகரப் பொதுச் செயற்குழுவினரின் அயராத முயற்ச்சியால், ''ஜெகந்துதிக்குஞ்சிவன் கோயிற் கோபுரமும் குறை முடித்து'' கும்பாபிஷேகமும் போற்றுதற்குரிய சீரிய முறையில் நடைபெற்றுக் கோயிலும் புதுப்பொலிவுடன் திகழ்வது போல, அரை நூற்றாண்டு காலமாக நடைபெறாதிருக்கும் மாசிமக மகோத்சவமும் புதுப்பொலிவுடன் மீண்டும் நடைபெற எல்லாம் வல்ல சிவகாமி அம்மன் உடனாய கரிகால சோழீஸ்வரர் ''திருத்தேர் கொண்டருளவே கூவாய் குயிலே'' என்று உளமாறப் பிரார்த்திப்போமாக.

## புதிதாகக் கட்டிய இராஜகோபுரம்



2002 கும்பாபிஷேகத்தின் சீரார் திருப்பணி

## இராஜகோபுர சுதை சிற்பங்கள்



விநாயகர், சுப்பிரமணியர், துவாரபாலகர்கள்,
கோபுரம் தாங்கிகள் நிறைந்த முன்புறத் தோற்றம்



தென்புறத்தில் தெட்சிணமூர்த்தியின் சிற்பம்

# அட்ட பந்தனம் எனப்படும் மருந்து சாத்துதல்

**Y. சத்திய மூர்த்தி**, நாட்டரசன் கோட்டை

அட்டமா சித்திகளை அடைந்தால் உலகியல் வாழ்வில் நிலை பெற்று வாழலாம் என்ற கருத்துக்கேற்ப, எட்டுச் சக்திகளோடு இறை உருவத்தை பீடத்துடன் இணைப்பது தான் அட்ட பந்தனம் எனப்படும் மருந்து சாத்துதலாகும்.

திருஉருவங்கள் ஆடாது, அசையாது இருக்க வேண்டும் என்பதே கருத்தென்றாலும், அபிஷேகம் செய்யும் பலவித பொருள்களிலிருந்து தங்கிவிடும் துகள்களுடன், அபிஷேக நீரும் சேர்ந்து என்பில்லா உயிரினங்கள் தோன்றி விடக் கூடாது என்பதே உட்கருத்தாகும்.

கொம்பரக்கு, சுக்கான்தூள், குங்குலியம், கற்காவி, செம்பஞ்சு, சாதிலிங்கம், தேன்மெழுகு, எருமை வெண்ணைய் ஆகிய எட்டுப் பொருட்களையும் சேர்த்து இடிக்கச் செய்து உருண்டைகளாக்கி, உறவு சேர்வதற்காகச் சிலகாலம் வைத்திருந்து, கும்பாபிஷேகத்திற்கு குடங்களில் மூர்த்தங்களின் அருட்கலையை எழுந்தருளச் செய்ததன் பின்னர், உடல் உள்ளத் தூய்மை உடையவர்களைக் கொண்டு எருமை வெண்ணெய் சேர்த்து கை தாங்கும் சூடு ஏறும் வரை, சிவ சிவ என்று உச்சரித்தவாறு இடிக்கச் செய்து, சூடு ஆறும் முன்னர் மூர்த்தங்களையும், பீடத்தையும் இணைத்து பந்தனம் செய்வதுதான் மருந்து சாத்துவதாகும்.

மருந்து சாத்தியதன் பின்னர், யாக சாலையிலிருந்து மூர்த்தங்களுக்கு, தர்ப்பைக் கயிறு,தங்கக்கம்பி, வெள்ளிக்கம்பி இவற்றால் இணைப்பு ஏற்படுத்தி, கலசங்களிலிருந்த அருட்கலையை மூர்த்தங்களுக்கு எழுந்தருளச் செய்து, பின்னர் அக்கலச நீரைக் கொண்டு அபிஷேகம் செய்யும் போது, அம்மூர்த்தங்களிலிருந்து பலவித சக்திகள் வெளி வந்து, வழிபடும் மக்களுக்கு பலவகையிலும் அருள்புரிகின்றன.

இறைத்திரு உருவங்களுக்கு எப்போது வேண்டுமானாலும், அபிஷேகம், அலங்காரம், ஆராதனை, யாகங்கள், ஹோமங்கள் செய்யலாம். ஆனால் மருந்து சாத்துதல் அவ்வாறு நினைத்த மாத்திரத்தில் செய்ய முடியாது. யாகசாலையை முறைப்படி அமைத்துக் கொண்டு, கலசங்களில் மூர்த்தத்தின் அருட்கலையை எழுந்தருளச் செய்ததன் பின்னர் தான் மருந்து சாத்த முடியும். மேலும் பாலாலயம் செய்து கொண்டு கோபுரங்கள், மற்றும் மேல்தளங்களைச் சீர் செய்வது போல இதனைச் செய்யவும் முடியாதென்பது சிந்திக்கத் தக்கதாகும். எனவே மருந்து சாத்துதல் என்பது கும்பாபிஷேகத்தில் ஈடுபடும் தொண்டில் எல்லாம் தலையாய தொண்டாகும்.

இத்தொண்டில் ஈடுபடுவோர், மிகவும் உள்ளத்தூய்மையுடன், மருந்து இடிக்கத் துவங்கியதிலிருந்து, எல்லா மூர்த்தங்களுக்கும் மருந்து சாத்தி நிறைவுபெறும் வரை சிவ சிவ என்று உச்சரித்தவாறே ஒருமனத்துடன் இருத்தல் வேண்டும்.

இத்துனை பெருமை சார்ந்த மருந்து சாத்தும் அரிய பொறுப்பினை இக்கும்பாபிஷேகத்தில், நான் எதிர்பார்த்திராத நிலையில் நகரத்தார் என்னிடம் ஒப்படைத்தது கரிகால சொழீசர் எனக்களித்த பெருங்கருணை என எண்ணி நிறைவடைகிறேன்.

# எங்களூர் தெய்வங்கள்

1. மஞ்சணத்தி விநாயகர் கோயில்
2. தேசிக விநாயகர் ,,
3. சித்தி விநாயகர் ,,
4. மாணிக்க விநாயகர் ,,
5. செங்கமலத்தான் மேல்கரை விநாயகர் ,,
6. செங்கமலத்தான் தென்கரை விநாயகர் ,,
7. மடத்தூரணி விநாயகர் ,,
8. மேல ரதவீதி விநாயகர் ,,
9. கண்ணுடைய நாயகி அம்மன் ,,
10. செங்கமலத்தான் காளியம்மன் ,,
11. செங்கமலத்தான் சுடுகாட்டுகாளி ,,
12. கரிகால சோழீஸ்வரர் ,,
13. பெரிய கருப்பண்ண சுவாமி ,,
14. ஆலடிக் கருப்பன் ,,
15. தேரடிக் கருப்பர் ,,
16. சொக்கன்குளம் கருப்பர் ,,
17. குருநாதன் ,,
18. ஊர்காவலன் ,,
19. பஞ்சம் எத்தி சேவுகராய ஐய்யனார் ,,
20. வெய்யில் உகந்த ஐய்யனார் ,,
21. ஐயப்பன் ,,
22. பிரசன்ன வேங்கடாசல்பதிப் பெருமாள் ,,
23. ராமர் ,,
24. அனுமார் ,,
25. கண்ணாத்தாள் சேங்கை வெட்டு முளைக்கொட்டு திண்ணை 1
26. மாரியம்மன் முளைக்கொட்டு திண்ணைகள் 14

(1) வடக்குத்தெரு
(2) தேரடி
(3) கம்பர் கோயில் தெரு
(4) பேருந்து நிலையம்
(5) தெற்கு ரதவீதி
(6) தெற்குத் தெரு
(7) ஆலடியான் கோயில் தெரு
(8) பூத குடித்தெரு
(9) இராதா கிருஷ்ணன் தெரு
(10) மாணிக்க வள்ளித்தெரு
(11) கீரங்குளத் தெரு
(12) காளியம்மன் கோயில் தெரு
(13) செங்கமலத்தான் வளவு
(14) நடராஜபுரம் நெடுஞ்சாலை

27. களியாட்டு வீடுகள் 2, பலிபீடம் 1
28. பள்ளிபடைக் கோயில்கள்
    1. கம்பர் சமாதி
    2. முத்துக் குட்டிப்புலவர் சமாதி
    3. கண்ணா நந்த சுவாமி சமாதி
    4. யாழ்பாணத்துச் சாமி மடம்
    5. அறந்தாங்கிச் சாமி மடம்
29. நகரத்தார் ஐயாக்கள் மடம்

# ஆடல் வல்லான்

சித்தாந்த வித்தகர் நா. கண.நா. சுப்பிரமணியன் செட்டியார் நாட்டரசன் கோட்டை

ஆடல் ஆன்மாக்களின் பொருட்டு சிவபெருமானால் ஓவாமல் நிகழ்த்தப்படுகிறது. அவன் ஆடவில்லையானால் உலகம் இயங்காது. இது ஏனைய கூத்துக்களைப் போன்றதன்று. நாயன்மார்களின் இயல்பு பற்றிப் பேச முற்படும் சேக்கிழார் பெருமான்.

*''ஆதியும் முடிவுமில்லா அற்புதத் தனிக்கூத்தாடும்*
*நாதனார் கழல்கள் வாழ்த்தி வழிபடு நலத்தின்மிக்கார்''*

எனப் பேசுகிறார். ஆம் இது தனிக்கூத்தே. பரதம் ஒரு ஒப்பற்றகலை. ப.பாவம், ர-ராகம், த-தாளம், இது மூன்றும் பொருந்த ஆடுவதல்லவா? பாவம் என்பது உடலும் உள்ளமும் பொருந்துவதால் ஏற்படும் அங்க அசைவுகள். ராகம் உயிரின் இன்பதுன்ப உணர்வுகளை வெளிப்படுத்தும் ஒத்த அசைவுகள், தாளம் அங்க அசைவுகளை நெறிப்படுத்துவது. இதற்குத் தலைவன் ஆடலரசு, திருக்கூத்தன் சிவபெருமான். இதனை அருணகிரியார் ''அன்பர்க் கின்பத்திற முதவும் பரதகுரு'' எனக் குறிப்பிடுகிறார். பரத நூல்கள் நடனம் நூற்றெட்டு என நவில்கின்றன. சிவ ஆகமமும் சிவதாண்டவபேதம் நூற்றெட்டு எனவே குறிக்கின்றன.

புருவ நடுவில் உறைகின்ற முதல்வன் இருதயத்திற் தொழிற்பட்டு உடல் முழுவதும் திருவைந்தெழுத்தின் ஆற்றலைச் செலுத்தி உயிரினை மட்டுமா இயங்கச் செய்கிறான்? உலக மணிமன்றங்கள் அணிபெறத் தணியாப் பெருகூத்தியற்றுகின்றனன் என்பதைத் திருமூலர்.

*''இருதயந்தன்னில் எழுந்த பிராணன்*
*கரசரணாதி கலக்கும் படியே*
*அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்*
*குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே'' - (திரு 2715)*

எனக் குறிப்பிடுவதலால் காணலாம். இதனைக் கீழ்க் கண்டுள்ள பாடல் தெளிவுறுத்துதலைக் காணலாம்.

*''மேலாம் சிவயநம மேவுமணி பொன் வெள்ளி*
*பாலாம் செம்போடு மண்பற்றல் போல் - மேலாம்*
*அவனாடல் செய்வனகம் ஆல் தில்லை கூடல்*
*தல நெல்லை குற்றாலம் தான்''*

தில்லை - பொன்னம்பலம், மதுரை : வெள்ளியம் பலம், திருநெல்வேலி - தாமிசரசபை, திருவாலங்காடு - இரத்தினசபை, குற்றாலம் - சித்ரசபை

சிறப்பாகத் தில்லையிலே பொன்னம் பலத்தின் கண் இடையறாது நிகழும் திருக்கூத்து ஐவகைக் குறிப்பினையுடையது எனவும் அவை அற்புதக் கூத்து, ஆனந்தக் கூத்து, அனவரதக் கூத்து, ஊழிக்கூத்து, பேரொடுக்கக் கூத்து என ஐம்பெருந்தாண்டவங்கள் ஆம்.

*''ஆமே பொன்னம்பலம் அற்புதம் ஆனந்தம்*
*ஆடும் திருக்கூத்து அனவரதத் தாண்டவம்!*
*ஆமே பிரளயமாகும் அத்தாண்டவம்*
*ஆமேசங்காரத் தருந்தாண்டவங்களே'' - திரு. 867*

நாதாந்த நடனம் : ஞானமாத்திரையாய் நிற்கும் பரம சிவன் ஏகமாய், குணாதீதராய், சிதாகா சத்துக்குள் விளங்கும் பரஞ்சோதியாய் உள்ள பொருளாகும். அச்சிவத்தினது தத்துவாதீதமான துரிய நிலையில் எச்செயலும் நிகழ்வதில்லை. அக்காரணத்தினால் அது சுத்த சிவம் என்றும், பரமசிவம் என்றும் பேசும்

அத்தனி நிலை திருக்கோலந்தான் தில்லை ஞான வெளியில் உள்ள நடனவடிவம். மனத்தால் நினைக்க வும், வாக்கினால் பேசவும், கலையினால் அளக்கவும் இயலாதது.

தனிப்பரம் பொருளாகிய அப்பரசிவம் புறப் பொருள்களை அருளுடன் நோக்கும் நிலையில் பராசக்தி எனப்படும். அதனால் சிவத்தின் அருள் நிலையே பராசக்தியாகும். நெருப்பும் சூடும் போல பரசிவமும் பராசக்தியின் அருட்செயல் நிலையும் ஒரே பொருளின் இரு தன்மைகளாகும். இதனால் உயிர்களின் பொருட்டுப் பரசிவம் பராசக்தியை அனுட்டித்துத் தொழிற்படுத்துவதே படைப்பின் தொடக்கம் என்பர். எனவே பரம்பொருளாகிய சிவம் சிதாகாசமாகிய பராசக்தியிடம் எழுப்பப்படு கின்ற முதல் அசைவுதான் படைப்பு என்பது புலப்படும்.

பரசிவம் பராசக்தியினது ஒரு கூறாகிய ஞானசக்தியோடு கூடித்தொழிற்படுவதனால் சிவதத்துவம் தோன்றும். அதிலிருந்து சக்தி தத்துவம் தோன்றும். அச்சத்தியிலிருந்து நாதம் தோன்றும். அந்நாதத்திலி ருந்து விந்துதோன்றும். அவ்விந்துவே அபரவிந்து எனப்படும். இதனை

**''சிந்தையினுள்ளே திரியும் சிவசக்தி**
**விந்துவும் நாதமு மாயே விரிந்தனன்''**

என்ற திருமூலர் திருவாக்கினால் உணரலாம்.

சிவதத்துவத்தில் சத்தி இருக்குமேனும் சிவமாகிய ஞானமே சிறந்து விளங்கா நிற்கும். சத்தி தத்துவத்தில் சிவம் இருக்குமேனும் சத்தியினது இயல்பான கிரியையே முனைந்து விளங்கும். சிவன் தனது சத்தி சங்கற்பத்தால் நாநாவிதமாய் உருவப் பிரபஞ்சத்தை பஞ்சகிருத்தியப் படுத்துவான்.

பரமகாரணமான அதீதநிலையில் பரசிவம் பராச்க்தி யோடுங்கூடி அசைவுறுதலே நாதாந்த நடன மாகும்.

நாதாந்தம் என்பது நாத அந்தம் எனப் பிரியும். எனவே நாததத்துவத்தின் முடிவு எனப் பொருள்ப டும். நாததத்துவம் எல்லாவற்றிலும் தலையாயது என்பது மேலே கூறியவற்றால் அறியலாம். இங்கு நாதம் என்பது பரநாதமாகிய சிவதத்துவமென்பதறிக. ''நாதமும் கடந்த வெளியிலே நீயும் நானுமாய் நிற்கும் நாள் உளதோ'' என்பர் பட்டினத்தடிகள்.

இந்த நாதாந்த நடனத்தினையே சமயா தீதப் பழம் பொருளாகிய ஏகநாதன் தில்லைச் சிற்றம்பலத் துள் தனது நடராஜத் திருவடிவத்தால் வெளியே விளக்கிக் காட்டுகின்றனன். பெருமான் தன் ஆனந்த மேலீட்டினால் ஆன்மாக்களின் மீதுள்ள கருணையினால் எஞ்ஞான்றும் இடையறாது நின்று நிகழ்த்தும் பொற்புறு நடனமே தில்லைத்திரு நடனமாகும். பரமசிவம் பராசக்தியை நோக்குதல் உயிர்கட்கு மல நீக்கம் செய்தற்பொருட்டே என உணர்க. இதனையே.

''மாதொருபாகம் நோக்கி மன்னுசிற்றம் பலத்தே... அற்புதத் தனிக்கூத்தாடும் நாதனார்'' எனத் தெய்வச் சேக்கிழார் பெருமான் கூறுதல் காண்க.

சிதாகாசமாகிய பரவெளியிலே பரம் பொருள் பரநாதத்தை எழுப்பி ஆடும் அவ்வாடலே ஆன்மாக் கட்குத் தனு கரணபுவனங்களைக் கொடுத்தலோடு முத்தி இன்பத்தையும் வழங்குகின்றது. எனவே நாதா தீதமாகிய அருள் நடனம் உலக உயிர்கள் யாவும் உய்வதற்குக் காரணமானது என்பதை யுணர்க.

சிவபரம் பொருள் கேவல நிலையில் இருக்கும் ஆன்மாக்களுக்குத் தனு கரணபுவன போகங்களைக் கொடுத்தல் தூலநடனம் எனப்படும். அது ஆன்மாக்களுக்குப் பெத்த திசை அறிவிக்கும் நிலையில் சூக்கும நடனம் எனப்படும். பந்தத்தினின்று விடுபட்ட முத்த நிலையில் அனுபவப்பேறு பரநடனம் அல்லது ஞானநடனம் எனப்படும்.

எனவே ஆனந்தத் தாண்டவம் பஞ்சகிருத்தியத்தை மட்டும் காட்டுவதன்று. அது நின்மல துரிய நிலையில் உண்டாகும் அருள் விளக்கத்தையும் காட்டி அதற்குப்பின் உண்டாகும் துரியாதீதச்சிவபோக ஆனந்த நிலையையும் காட்டுவதாகும். மெஞ்ஞானமாகிய அருள் விளக்கமே மெய்யுணர்வாகும்.

''ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு - என்பார் திருவள்ளுவர்

இந்த மெஞ்ஞான அருள் விளக்கத்துக்குப் பின் நிகழா நிறகும் திருக்கூத்தே சிவயோகமாகும். இதனைச் சேக்கிழார் பெருமான் சிவயோக சிகாமணியாகிய திருமூல நாயனாரது அனுபவப் பேற்றைக் கூறுமிடத்து

''எவ்வுலகு முய்ய எடுத்தருளிய சேவடியாரைச்
செவ்விய அன்புற வணங்கிச் சிந்தைகளி வரத் திளைத்து
வவ்விய மெய்யுணர்வின்கண் வரும் ஆனந்தக் கூத்தை
அவ்வியல்பிற் கும்பிட்டங் காராமை அயர்ந்திருந்தார்.

எனக் குறிப்பிடுதல் காண்க.

இத்திருக் கூத்தைக் கண்டு களித்த திருமூலர் பெருமான் இத்திருக்கூத்தின் உட்பொருளைச் சிறப்பித்து விளக்கியுள்ளமை காணலாம்.

பரம்பொருளாகிய சிவபெருமான் ஆன்மாக்களின் மீது வைத்திருக்கின்ற கருணையே தனது உருவமாகக் கொண்டு பராபரையின் திருமுன் பேரின்ப நிலையாகிய துரியத்தில் நின்று ஆனந்தக் கூத்தாடுகின்றான் என விளக்கியுள்ளமை அறியத்தக்கது.

பல்வேறு வகையான அமைப்புகளையுடைய நடனங்களையும் சிவபெருமான் ஆடின நிலையினை விளக்கும் திருமூலர் அவன் ஆடலின் நிகழ்ச்சிகளையும் குறிப்பிட்டுள்ளார். அதில் அவன் மட்டும் ஆடவில்லை. இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள்களும் ஆடின எனக் குறிப்பிடுதல் காணலாம்.

''தேவர், சுரர் நரர் சித்தர் வித்தியாதரர்
மூவர்கள் ஆதியான் முப்பத்து மூவர்கள்
தாபதர் சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடலே'' - திரு. 2685

மேலும் சிவபோகமாகிய முத்தி முடிவைக் குறித்த லோடு சிவபரம் பொருளே ஐந்தொழில்களையும் அயன், அரி, உருத்திரன், மகேசன், சதா சிவன் என்னும் ஐவகை மூர்த்திகளின் வழியாகச் செய்கிறான் என்பதைக் காட்டி நிற்கும் தன்மை தன்னிடம் அமைந்துள்ள வடிவம் நடராஜ வடிவமே யாகும். பேரொடுக்கப் பெருமானாகிய சிவபெருமான் ஓங்காரத்தின் உள்நின்று ஆடல் புரிகிறான். ஓங்கார வடிவான திருவாசியின் (பிரபை) மேல் வளைவுப் பகுதியில் சொற்பிரபஞ்ச வர்ணங்கள் (அட்சரங்கள்) ஐம்பத்தொன்றும் சுடராய் நின்று ஒளிவிட, துடியால் படைப்பும், ஊன்றிய திருவடியால் மறைப்பும், தூக்கிய திருவடியால் அருளிப் பாடும் ஆகிய ஐந்தொழில்களையும் நிகழ்த்துகிறான் எனத் திருமூலர் குறித்தல் காணலாம்.

''அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன் அங்கிதனில் அறையில் சங்காரம்
அரனுற்றணைப்பில் அமரும் திரோதாயி
அரனடி என்றும் அனுக்கிரகமே'' - திரு. 2750

இதனையே உண்மை விளக்கம் என்ற சித்தாந்த நூல் இங்ஙனம் குறிக்கின்றது.

''தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமாம்
ஊன்று மலர்ப்பாதத்தில் உள்ள திரோதம் முத்தி
நான்ற மலர்ப் பாதத்தே நாடு''

எனக் குறிப்பிடப்பட்டுள்ளமை காணலாம்.

## தூல சூக்கும பஞ்சாட்சரம்

**"ஆடும்படி கேள் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியிலே நகரம் - கூடும்
மகரம் உதரம் வளர் தோளில் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்'' - என்பது செய்யுள்**

**நின்றபாதத்தில் - ந, திருவுந்தியிலே - ம, திருத்தோளில் - சி, திருமுகத்தில் - வா, திருமுடியில் - ய**

இது தூலபஞ்சாக்ஷரமாகும். சூக்கும பஞ்சாக்ஷரத்தில்

**''சேர்க்கும் துடிசிகரம் சிக்கெனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்'' - எனவும்**

**''மருவும் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையும்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாயநம என ஓதே''**

**எனவும் குறிக்கப்பட்டுள்ளது. ஒலிக்கின்ற உடுக்கை - சி, வீசியகரம் - வ, அமைந்தகரம் - ய, அனலேந்திய கரம் - ந, முயலக னைமிதித்த பதம் - ம**

இத்தகைய அருளானந்த அற்புதத் திருக்கூத்தை உள்முகத்தில் நாடி, அலைகின்ற மனத்தை ஒடுக்கி உள்ளுணர்வு பெற்று உவகையடைய வேண்டுமென்கிறார் திருமூலர்.

## பிரணவ ஒடுக்கம்

பிரணவம் : தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம் என நால்வகைப்படும்.
தூலம் : தூல உடலுக்கு ஆனந்தம் பயக்கும்.
சூக்குமம் : சூக்கும உடலுக்கு (மேலைச் சொரூபம்) ஆனந்தம் பயக்கும்.
காரணம் : திருவருட்சத்தி பதியச் செய்யும்.
மகாகாரணம் : (மேலைப் பிரணவம்) வேதாந்த வீதியில் (திருவடி) சேர்த்தலைச் செய்யும்.

**"தூலப் பிரணவஞ் சொரூ பானந்தப் பேர்
பாவித்த சூக்கும மேலைச் சொரூபப் பெண்
ஆலித் தமுத்திரை யாங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே** **- திரு. 2626**

ஓங்காரத்துள் ஒப்பில் ஒருமொழி தோன்றும் (பெரும் பொருட்கிளவி). இதனை மகாவாக்கியம் எனவும் கூறுவர். இதனின்று பஞ்சபூதங்கள், ஆருயிர் வேறு பாடுகள் உள்ள ஒரு மனமுடையார், இருமலைமுடையார், மும்மலமுடையார் ஆகிய அனைத்து உயிர்த் தொகுதிகளும் தோன்றின எனவும், அகர, உகர, மகரமே பிரணவ மாகின்றன எனவும் குறிப்பிடுகிறார்.

**"ஓங்காரத்துள் ளேயுதித்த ஐம்பூதங்கள்
ஓங்காரத்துள்ளே யுதித்த சராசரம்
ஓங்கார தீதத் உயிர் முற்றும் உற்றன
ஓங்கா, சிவபரசிவ ரூபமே** **- திரு. 2628**

### திருவைந்தெழுந்து

இறைவனையும் அவன்றன் அரும்பெரும் சிறப்புக்களையும் நம்மனோர் நினைவில் எழுப்பி அவனை வழிபடப் பயன்படும் ஆற்றல் மிக்க அரும்பெரும் சொற்றொடர்கள் மந்திரங்கள் எனப் போற்றப் பெறும். அவை மூவகைப்படும் என்பர் திருமூலர்.

**"கூடிய தம்பனம், மாரணம் வசியம்
ஆடியல் பாக அமர்ந்து செறிந்திடும்**

**பாடியுள்ளாகப் பகைவரும் வந்துறார்**
**தேடியுள்ளாகத் தெளிந்து கொள்வார்களே என்பர் - திரு. 1263**

அவற்றுளெல்லாம் தலை சிறந்து திகழ்வது அஞ்செழுத்து மந்திரமேயாகும். எனவே அதனை ''மந்திரராஜம்'' என்பர். ''ஆதிமந்திரம் அஞ்செழுத் தோதுவார் நோக்கும் மாத்திரத்தினும் மற்றைய மந்திர விதிவருமோ'' என ஐந்தெழுத்தின் பெருமையினைச் சேக்கிழார் பெருமான் பறை சாற்றுவார். இத்தகைய மந்திரத்தில் 'சி' சிவத்தையும் 'வ' அருளையும், 'ய' உயிரையும், 'ந' மறைப்பாற்றலையும், 'ம' மலங்களையும் குறிக்கின்றன. இதனை

**''சிவன் சத்தி சீவன் செறு மலமாயை**
**அவஞ்சேர்ந்த பாச மலம் ஐந்தகலச்**
**சிவன் சத்தி தன்னுடன் சிவனார் சேர**
**அவஞ் சேர்ந்தபாசம் அணுக கிலாவே'' - திரு. 2660**

**''சிவன் அருளாய சிவன்திரு நாமம்**
**சிவனருள் ஆன்மா திரோதம் மலமாயை**
**சிவன் முதலாகச் சிறந்து திரோதம்**
**பவமத கன்று பரசிவன் ஆமே'' - திரு. 2661**

என வரும் திருமந்திரப் பாடல்களால் உணரலாம்.

தூல பஞ்சாக்கரம் 'நமசிவாய' என்பது. இதுவே மூலமந்த்ரம். சூக்கும 'பஞ்சாக்கரம் 'சிவயநம' என்பது உடம்பைப் பொன்னாக்குவது. அதிசூக்கும பஞ்சாக்கரம் 'சிவயசிவ' என்பது சிவயோகம் சித்திக்கச் செய்வது.

இது முத்தி பஞ்சாக்கரம் எனவும், காரண பஞ்சாக்கர மெனவும், ஸ்ரீ பஞ்சாக்கரமெனவும் வழங்கு கின்றது. உயிர், பாசத்தை நீக்கிப் பதியை நாடுதல் என்பது இதன் பொருள். ய என்னும் உயிர் பாசத்தை நீக்கி வ என்னும் அருளோடும், சி என்னும் சிவத்தோடும் கூடி நிற்றல். இதனை இருதலைக் கொள்ளி எனவும் குழூஉக் குறியாகக் குறிக்கும் பழக்கமுண்டு.

இம்மந்திரங்களை உச்சரிக்கும் முறை மூன்றாகும். மானதம், மந்தம், உரை என்பன, மானதம் என்பது மனத்தால் பாவிக்கும் அதிசூக்கு நிலை. மந்தம் என்பது சூக்கு வைகரிவாக்கால் தனக்கு மட்டும் கேட்கும்படி உச்சரித்தல். உரை என்பது தூல வைகரி வாக்கால் தனக்கும் பிறருக்கும் கேட்கும் படி உச்சரித்தல். மனத்தால் ஜெபிக்கப்படுவது தியானம் எனப்படும். இவ்வைந் தெழுத்தைத் தியானிக் கத் தியானிக்க, பொடியிட்டு விளக்கிய விளக்கென மாசு நீங்கி ஒளி விடுவது போல சிவம் விளங்கும். அவ்வாறு விளங்கிய யகரமாகிய சிவபேதம் முற்றும் கெட, சிவசிவ என்னும் நாலு எழுத்து மந்திரம் உச்சரிக்கப்படும். இதனை மேலும் நெஞ்சமுத்திக் கணிக்கும் தோறும் மானதமாகக் கணித்தலும் நின்று போகும். அந்நிலையில் உச்சரிக்கப் பெறும் சிவ என்னும் மறைமொழியைப் பேசும் எழுத்துடனே பேசா எழுத்தென்பர். இதில் பேசா எழுத்து ''சி'' அது பெருவெழுத்தெனப்படும். வ பேசும் எழுத்து. இது பிஞ்செழுத்து எனவும்படும். வகரமாகிய திருவருளாலேயே சிகரமாகிய சிவன் உணரப்படுதலின் வகரத்தைப் பிஞ்செழுத்தென்பர். பேசாமந்திரமாகிய அசபா மந்திர மெனப்படும் (செபிக்கப் படாத) இது ஜெபிக்கப் படாமலே பிராணனுடன் சேர்ந்து இயங்குவது. இம்மந்திரத்தைச் சிந்தித்து ஆனந்த மாய் இருப்பதே அஜபா நிலை எனப்படும். அஞ்செழுத்தை விதிப்படி உச்சரித்தல் இன்றியமையாதது. இதனை அருள் நந்தி சிவமும் வற்புறுத்தி இருத்தல் உளங்கொளத்தக்கது.

**''ஓசைதரும் அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க**
**உள்ளத்தே புகுந்தளிப்பன் ஊன மெலா மோட'' எனவும்**

**''அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்க மதியருக்கன்**
**அணையரவம் போல் தோன்றும் ஆன்மாவில் அரனே''**

எனவும் கூறியுள்ளவை உணரத்தக்கது.

ஆடல் வல்லான் உயிர்களின் மாயையை எடுத்து உடுக்கையால் உதறி அழிக்கிறார். வல்வினைக ளைத் திருக்கரத்திலுள்ள நெருப்பினால் சுட்டுச் சாம்பராக்குகிறார். ஆணவமாகிய முயலகனை மேலெழா வண்ணம் கிரியா சத்தியாகிய வலப்பாதத்தினால் மிதித்து அழுத்துகிறார். அந்த அனுப

வத்தை ஞானசத்தியாகிய தூக்கிய திருவடியினால் அருளினான். மாக்களுக்குப் பேரின் பத்தினை அருளித்திளைக்கச் செய்கிறார். இதுவே அவன் செய்யும் பரதத்தின் உட்பொருள் என்று ''உண்மை விளக்கம்'' ஆசிரியர் தெளிவுபடுத்துவது சிந்திக்கத்தக்கது.

''மாயை தனை உதறி வல்வினையைச் சுட்டு மலஞ்
சாய அமுக்கி அருள் தான் எடுத்து - நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தான் எந்தையார் பரதந் தான்''

திருவைந்தெழுத்தை உருவமாக் கொண்ட சிவ பெருமானின் உறுப்புக்களில் அட்சரங்கள் எங் கெங்கு நின்று தொழிற்படுகின்றன என்பதையும் குறிப்பிட்டுள்ளமையும் காணலாம்.

## கூத்து வகைகள்

இக்கூத்துக்களில் சில கூத்துக்களுக்குத் திருமூலர் விளக்கம் தருகிறார்.

**சுந்தாக் கூத்து :** சதா சிவ தத்துவத்தின் மேல் உச்சியில் கண்டங்கரியனாகிய சிவபெருமான் அருளே திருவுருவாய், உமையம்மையார் கண்டுகளிக்க ஆடும் கூத்து இது. எல்லாவற்றையும் அழித்து நின்றா டும் கொடு கொட்டி, முப்புரங்களை எரித்த நீற்றினை அணிந்தாடிய பாண்டுரங்கம், பிரமனது சிரசைக் கையிலேந்தி ஆடிய காபாலக் கூத்து என்னும் கோடு முதலாக இருபத்தி ரெண்டு வகைப்படுமென்பர். இவ் 22ல் தில்லையில் ஆடியது இன்பியல் கூத்தாகும். திருவாலங்காட்டில் ஆடியது அருளியற் கூத்து ஆகும். இவ்விரண்டு கூத்துக்களும் சிறப்புடையன என்பர்.

''அண்டங்கள் ஏழினுக்கப் புறத்தப் பாலும்
உண்டென்ற சத்தி சதாசிவத்துச் சிமேற்
கண்டங் கரியான கருணைத் திருவுருக்
கொண்டங்குமை காணக் கூத்து கந்தானன்றே'' – திரு.2686

**பொற்பதிக்கூத்து :** சிவபெருமான் தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, உச்சி, ஆகிய ஐந்து திக்குகட் கும் ஐந்து முகங்கள் கொண்டு முறையே நடுக்கம், தோற்றுவித்தல், ''விளக்கம்'', ஆட்சி, இயக்கம் (அகோரம், சத்யோசாதம், வாமதேவம், தற்புருடம், ஈசானம்) தோன்றி அருவம், உருவம், அருஉரு வம் என்ற முத்திறப் பாகுபாட்டினின்றும் பேரின்ப வடிவாக, நடமிடுவதைப் பொற்பதி நடன மென்பர். இக்கூத்து பொறிபுலனடக்கி, நன்னெறி செல்லாதாரை 'சிவகுருவாய் எழுந்தருளித் திருவடி சூட்டி ஒடுங்கச் செய்யும் இயல்பினது'' என்பர்.

**பொற்றில்லைக் கூத்து :** இறைவன் ஏழு அண்டங்களையும் பஞ்சபூதங்களிற் கலந்த ஆகாயங்கள் ஐந்தினையும் (மண்ணில் ஆகாயம், நீரில் ஆகாயம், நெருப்பில் ஆகாயம், வாயுவில் ஆகாயம், ஆகாயத்தில் ஆகாயம்) இடமாகக் கொண்டு நடமிடுவது போல ஆன்மாக்களின் நடு நாடியாகிய சுழுமுனையிலே திருவருட்சத்தியைத் திருவம்பலமாகக் கொண்டு திருக் கூத்தாடுவன் எனக் குறிப்பி டுகின்றார்.

**அற்புதக் கூத்து :** உச்சிக்கு மேல் 12 அங்குலம் வரை பிராணவாயு சஞ்சரிக்கும். இவ்வெளியே தில்லைக் கூத்தன் நடனமிடும் சிற்றம்பலமாகும். காற்று, மேகம், மின்னல், வானவில், இடி, இவைகளுக்கு ஆகாயம் இடம் தந்தும், தான் அவைகளில் படியாது நிற்றல் போல ஆதாரங்கள் ஆறினும் தோன்றும் ஒலிகளுடன் கலந்து வேறாயும் இறைவன் நிற்பன். அவன் ஆட அனைத்துல கங்களும் ஆடும் எனப் பல பாடல்களில் விளக்கியுள்ளமை அறியலாம்.

மலத்தில் அழுந்தித் தன்னையும் தலைவனையும் அறியாது தடுமாறி உழலும் உயிர்களின் மலமகற்றி முத்தியளிப்பதற்காகவே இறைவன் தன் ஆடலால் அருள்புரிகிறான் என்பது பெற்றாம்.

# சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம்
# பரம்பரை அறங்காவலர்



மேதகு ராணி

# D.S.K. மதுராந்தகி நாச்சியார் அவர்கள்



பா. இளங்கோ B.Com., B.L.,
மேலாளர்,
சிவகங்கை சமஸ்தானம்,
தேவஸ்தானம்.



A. சேவற்கொடியான் B.A.,
கண்காணிப்பாளர்,
சிவகங்கை சரகம்.
சிவகங்கை தேவஸ்தானம்,



P.P.V. அண்ணாமலை
செட்டியார்
கௌரவ கண்காணிப்பாளர்
நாட்டரசன்கோட்டை.

# திருப்பணிக் குழு



தலைவர்

திரு. வெ. கண. கண்ணப்ப செட்டியார்



துணைத்தலைவர்

திரு. சேவு. ராம. ராம. கருப்பையா செட்டியார்



செயலாளர்

திரு. வீர.சுப.லெ. இராமநாதன் செட்டியார்



துணைச்செயலாளர்

திரு. ராம. உ.உ. கருப்பையா செட்டியார்



பொருளாளர்

திரு. லெ. ராமசி. வள்ளியப்ப செட்டியார்



திரு. ப.ப.வே. அண்ணாமலை செட்டியார்



திரு. மெ. ந. லெட்சுமணன் செட்டியார்



திரு. AL. SP. லெட்சுமணன் செட்டியார்



திரு. பெரி. அரு. கண. இராமசாமி செட்டியார்



திரு. கம்பர் இராம. கண்ணப்ப செட்டியார்



திரு. ஆ. ராம.வெ. கண்ணப்ப செட்டியார்



திரு. ஆ. கண. இராதகிருஷ்ணன் செட்டியார்


திரு. Er. இராம. இராம. ஜெகந்நாதன் செட்டியார்


திரு. கண. க. சொ. கோ. லெட்சுமணன் செட்டியார்


திரு. சுப. இராதாகிருஷ்ணன் செட்டியார்


திரு. சுப. ராம. வெள்ளையப்ப செட்டியார்


திரு. சுப. சிவ.லெ. சிவராமன் செட்டியார்


திரு. சுப. ராம.மெ.ராம. முருகப்ப செட்டியார்


திரு. சுப. யெ.லெ.யெ.லெ. ஏகப்ப செட்டியார்


திரு. கண.க.சொ.கண. சொக்கலிங்கம் செட்டியார்


திரு. புலவர் கண. கணேசன் செட்டியார்


திரு. ஆவி. கண.செ.அ.செ. கண்ணப்ப செட்டியார்


திரு. வெ. கண. அய்யப்ப செட்டியார்


திரு. வீர.சுப.இராமசாமி செட்டியார்



திரு. வலி. சோம. கண்ணப்ப செட்டியார்



திரு.நல. கும. ஜோதி செட்டியார்



திரு. லெ.மா. மகாதேவன் செட்டியார்



திரு. குப.அ.நா.மு.ராம. கண்ணப்ப செட்டியார்



திரு. ச.இராம. சிதம்பரம் செட்டியார்



திரு. சேவு. ராம.ராம. ஆவிச்சி செட்டியார்



திரு. ஆதி. கண. அண்ணாமலை செட்டியார்



திரு. ஆரு. நா. லெட்சுமணன் செட்டியார்



திரு. Y. சத்தியமூர்த்தி செட்டியார்



திரு. நா.சே. நாராயணன் செட்டியார்



திரு. அ.கண. மணிவாசகம் செட்டியார்



திரு. கா. செந்தாமரை செட்டியார்

# மலர்க்குழு


திரு. Y. சத்தியமூர்த்தி
தலைவர்


திரு. நா. சே. நாராயணன்
பதிப்பாசிரியர்


திரு. ஆதி. கண. அண்ணாமலை


திரு. Y.L. லெட்சுமணன்


திரு. Er. ராம. ராம. ஜெகந்நாதன்


திரு. VR. கண்ணப்பன்


திரு. கண.க.சொ.கோ. லெட்சுமணன்


திரு. மெ. ந. லெட்சுமணன்


திரு. அ. கண. மணிவாசகம்


திரு. N. பஞ்சாட்சரம்


திரு. SP. PALVE. வீரப்பன்

## நன்னீராட்டுக் காட்சிகள்



விநாயகர், சோமீசர், நடராஜர்
கோபுரங்கள் நன்னீராட்டு



இராஜகோபுரம் நன்னீராட்டு

# யாகசாலை அலங்காரம்



சுவாமி வேதிகை



அம்மன் வேதிகை

# ஸ்தானிகர் மரியாதை



கோயில் ஸ்தானிகர் சுப்பிரமணியச் சிவாச்சாரியாருக்கு மரியாதை செய்து மனமுவக்கும் நகரத்தார்



சர்வஜாதகம் திருவாடானை க. சந்திரசேகரச் சிவாச்சாரியாருக்கு மரியாதை செய்து மனம் பூரிக்கும் நகரத்தார்



கோயில் ஸ்தானிகர் மகாதேவ சிவாச்சாரியாருக்கு மரியாதை செய்து மனம் மகிழும் நகரத்தார்



திருக்குட நன்னீராட்டுக்கு முன்னர் மூலவருக்கு "லெட்சுமி பூஜை" செய்ய, மாதவ மங்கையர் புடைசூலச் செல்லும் சிவகாமி அம்மையார்



யாகசாலை அலங்காரம்



புதிதாகக் கட்டப்பட்ட இராஜகோபுரத்துடன்
வீரகண்டான் தென்பாலமர்ந்த சோழீசர் திருக்கோயிலின்
பீடுயர் தோற்றம்

## நகரத்தார் திருமண மண்டபம் திறப்புவிழா



கண்ணுடையவளின் ஆசி பெற்று மங்கலப் பொருட்களை
மண்டலத்திற்கு நகரத்தார் எடுத்து வரும் மான்புறு காட்சி



தேவி திருக்குளத்தில் தண்ணீர் எடுத்து மண்டபத்திற்கு
கொண்டுவரும் ஆச்சிமார்களின் அலங்கார காட்சி.

திருச்சிற்றம்பலம்

## விநாயக வணக்கம்

தொகுப்பு : தமிழ்க்கடல் ராய. சொ

மங்கலம் தொடங்க முன் வருபவரும் வெற்றிகளுக்குத் தலைவரும் வல்வினை தீர்ப்பவரும் அவ்வையின் தமிழில் குளித்தவருமான விநாயகப் பெருமானின் வரலாற்றுக் குறிப்புகளையும், கோயில்தோறும் இருந்து அருளாட்சி செய்யும் திறத்னையும் கொண்ட இந்தத் தமிழ் அருச்சனை மலர், தேனினும் இனித்து தெளிந்த சிந்தனையைத் தந்து, தெளிவின் பயனாகிய சிவத்தையும் நல்க வல்லது.

திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்சொற்
பெருவாக்கும் பீடும் பெருக்கும் உருவாக்கும்
ஆதலால் வானோரும் ஆனைமுகத்தானை
காதலால் கூப்புவர் தம்கை
வேழ முகத்து விநாயக போற்றி
பேழை வயிற்றுப் பிள்ளாய் போற்றி
ஏழைக்கு அருள் செய் எம்மான் போற்றி
வாழ வகுக்கும் வள்ளால் போற்றி
சிவனார் பெறுமுதல் செல்வா போற்றி
சேயிழை உமைதரு சிறுவா போற்றி
திருமால் தனக்கு மருகா போற்றி
திருமகள் மகிழுமாப் பிள்ளாய் போற்றி
யானை உரித்தவன் மகனே போற்றி
யானையின் கைபெறு கோனே போற்றி
யானையால் வள்ளியை வென்றாய் போற்றி
யானை மணாளனின் அண்ணா போற்றி
யானை முகத்தனை அழித்தாய் போற்றி
பெருச்சாளி ஏறும் பெரியோய் போற்றி
பேணுவார் பிழைகள் பொறுப்பாய் போற்றி
வள்ளிதெய் வானை மைத்துன போற்றி
வல்லபை மங்கை மணாள போற்றி
கடிமணம் விரும்பாக் கணேச போற்றி
மடியினில் மாதினை வைத்தாய் போற்றி
சித்தி புத்தியின் தெய்வமே போற்றி
முத்தி கொடுக்கும் முதல்வ போற்றி
மூலை முடுக்கெல்லாம் முளைத்தாய் போற்றி
மூவிரு முகத்தோன் முன்னவ போற்றி
சிதறுகாய் சிறுவருக்கு ஈவாய் போற்றி
சிவன்தேர் அச்சினைச் சிதைத்தாய் போற்றி
கொம்பு எழுத்தாணியாக் கொண்டாய் போற்றி
எம்பிரான் பிறையதில் இணைத்தாய் போற்றி
மலையினில் பாரதம் வரைந்தாய் போற்றி
மலைமகள் மகிழுமா மணியே போற்றி
முன்வணக் கங்கொள் முனைவ போற்றி
பன்னிரு தம்பி கண்எண்ணினை போற்றி
பின்னவன் முழமிடப் பிணங்கினை போற்றி
அன்னையின் அணைப்பால் ஆறினை போற்றி
எண்ணுவார் இடரைக்களைவாய் போற்றி
எண்ணார் இடர் உற இழப்பாய் போற்றி
பரமன் மடியுறை பண்ணவ போற்றி
பார்வதி ஈன்ற பாலா போற்றி
அப்பம்அவல் பொறி கப்புவாய் போற்றி
இப்புவி எல்லாம் இருப்பாய் போற்றி
ஓங்காரப் பொருள் உணர்த்துவாய் போற்றி
தீங்கெலாம் அகற்றும் செம்மல் போற்றி
குட்டிக் குனிப்புறக் கொள்வாய் போற்றி
பட்டி தொட்டி எலாம் படர்வாய் போற்றி
குளக்கரை தொறும் குடி கொண்டாய் போற்றி
அளப்பரும் ஆற்றல் கொள் அம்மான் போற்றி
அரசின் நிழல் அமர் அரசே போற்றி
பரசுவார் பவப்பிணி அறுப்பாய் போற்றி
அறுகினை ஆசையோடு அணிவாய் போற்றி
உறுபெரு மோதகம் உவப்பாய் போற்றி
உலகீன்ற கன்னியின் குலமுதல் போற்றி
நலனெலாம் நம்பர்க்கு அருள்வாய் போற்றி
மலைபோல் வருதுயர் மாய்ப்பாய் போற்றி
கலையெலாம் கருத்துள் வளர்ப்பாய் போற்றி
அலகிலா விளையாட்டு அயர்வாய் போற்றி
உலகெலாம் அடக்கிய உந்தியாய் போற்றி
மலைமகள் மடிதவழ் மைந்தா போற்றி
நலம் நுகர் அவர்திறம் நயப்பாய் போற்றி
புலவர்க்கு விருந்தாய் பொலிவாய் போற்றி
கலகலெனச் சிறார்க் கவர்வாய் போற்றி
பேரொளி பரப்பும் பெருமுடி போற்றி
பாரதம் எழுதிய ஓர்பிறை போற்றி
கூருறும் மற்றைக் கொம்பும் போற்றி
கார்என அருள் மொழி கண்இணை போற்றி
நான் மறை பகர்ந்தருள் நால்வாய் போற்றி

வான்குறை கேட்டருள் மாச்செவி போற்றி
மோதக மணநுகர் மூக்குப் போற்றி
போதகப் புண்ணியப் பொலிமுகம் போற்றி
மண்முழுது அடக்கிய வயிறு போற்றி
கண் அகல் உந்திக் கமலம் போற்றி
வாரி வழங்கு, கை ஐந்தும் போற்றி
சீறியோர் முடிபடி திருவடி போற்றி
சிவனார் கோயிலில் திகழ்வாய் போற்றி
தவமாச் செல்வர்சொல் தவமே போற்றி
அம்பிகை கோயிலிலும் அமர்வாய் போற்றி
நம்பினார் துன்பெலாம் நலிவாய் போற்றி
தம்பி கோயிலும் தங்குவாய் போற்றி
உம்பரும் போற்றும் ஒருவ போற்றி
காளி கோயிலும் காப்பாய் போற்றி
ஊழி தோறும் உலவாய் போற்றி
பெருமால் கோயிலிலும் பிறங்குவாய் போற்றி
திருமால் தங்கைநற் செல்வா போற்றி
அடியார் கோயிலிலும் அமர்வாய் போற்றி
கடிசேர் அறுகணி கணபதி போற்றி
தனிப்பெருங் கோயிலிலும் சார்வாய் போற்றி
மனிதரைக் கவர்தரு வள்ளால் போற்றி
எங்கும் இருக்கும் இறைவா போற்றி
மங்கலம் தொடங்க முன்வருவாய் போற்றி
கங்கை அணிந்தவன் கனியே போற்றி
நங்கை உமைதரு புங்கவ போற்றி
எளிமையில் அருள்புரி இறைவ போற்றி
ஏழைகள் பங்கில் இருப்பவ போற்றி
தும்பிக்கை, பெருதோன்றால் போற்றி
தம்பிக்கு வள்ளியைத் தந்தாய் போற்றி
அறிவு மதம் பொழி ஆனையே போற்றி
குறைவிலாப் பெருங்குணக் குன்றே போற்றி
கூத்துடையான் தரு குமரா போற்றி
கூத்து கந்து ஆடும் குறிசில் போற்றி
சந்திதோறு இருக்கும் தத்துவ போற்றி
சிந்தையுட் புகுந்ததேவா போற்றி
கணநாத போற்றி கயமுக போற்றி
விநாயக போற்றி விக்கின போற்றி
எண்ணிய ஈவாய் போற்றி போற்றி
புண்ணியப் பிள்ளையார் போற்றி போற்றி

திருச்சிற்றம்பலம்

## சிவ வணக்கம்

தொகுப்பு : தமிழ்க்கடல் ராய. சொ

அகர முறையில் அமைந்தும், தேவார திருவாசகச் சொற்றொடர்கள் அப்படியே எடுத்தாளப் பெற்றும், சிவனெறி வரலாற்றில் அற்புத நிகழ்ச்சிகளை நினைவூட்டியும், சிவ போதம் இழந்து சிவமெனத் திகழ்ந்து விளங்கிய திருவருட் செல்வர்கள், அடியார்கள், நாயன்மார்கள், பெருமையினை எடுத்துக் காட்டியும் சைவ மரபுக்கேற்ப ''அம்பலத்தில்'' தொடங்கி வையகத்தில் முடிக்கப் பெற்றதுமான இந்த தமிழ் அருச்சனை மலர்; தென்னாடுடைய சிவனை நினைந்து உணர்ந்து நெகிழ்ந்து - அன்பே நிறைந்து உணரத் தோய்ந்த இன்ப அன்பினைத் தரவல்லது.

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவு உலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத்து ஆடுவான்
மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

அம்பலத்து ஆடும் அரனே போற்றி
ஆனைமா முகனை அளித்தவ போற்றி
இளைய முருகனை ஈன்றாய் போற்றி
ஈறிலாப் பெருவாழ்வு ஈவாய் போற்றி
உமைக்கொரு கூறளி உத்தம போற்றி
ஊழி முதல்வ! நின் ஒண்கழல் போற்றி
எந்தையும் யாயுமாய் இயைந்தனை போற்றி
ஏழை பங்க! நின் இணையடி போற்றி
ஐயா! அரசே அமுதே போற்றி
ஒழிவற நிறைந்த ஒருவ போற்றி
ஓசையாய்ப் பொருளாய் ஒன்றினை போற்றி
ஔவிய நெஞ்சினர்க்கு அரியாய் போற்றி
அஃகம் வளர அருள்வாய் போற்றி
கல்ஆல் அமர்ந்த சொற் கடந்தவ போற்றி
''ங''போல் வளைய நவில்வாய் போற்றி
சிடையாய் விடையாய் உடையாய் போற்றி
ஞயமாய் உரைதர நயப்பாய் போற்றி
மடம்படு வாழ்வை மாய்ப்பாய் போற்றி
வணங்கத் தலையை வைத்தாய் போற்றி

தழுவக் குழைந்த தண்ணளி போற்றி
நச்சரவு ஆட்டிய நம்பி போற்றி
பந்தனை விரலாள் பங்க போற்றி
மண்டிய தழல்நிற வண்ணா போற்றி
மயல்கெடுத்து ஆளும் மணாள போற்றி
அரவம் அணிந்த அந்தண போற்றி
நிலம்தீ வான், தால் நீரே போற்றி
வண்கவி வள்ளல்கள் வள்ளால் போற்றி
மழவிடை ஏறும் மன்னா போற்றி
அளவெலாம் கடந்த ஐயா போற்றி
பிறப்பு இறப்பு இல்லாப் பெரும போற்றி
மனமாசு அறுசிவ மணியே போற்றி
கற்றவர் உண்ணும் கனியே போற்றி
காலனை உனத்தருள் கழற்கால் போற்றி
கிழவா இளையாய் குழவி போற்றி
கீழ்மேல் உலகெலாம் கிளர்ந்தாய் போற்றி
குழவி மதியணி குழகா றேறி
கூத்துகந்து ஆடும் கொற்றவ போற்றி
கெடுதல் தவிர்த்துஆள் கேடிலி போற்றி
கேதம் கெடுத்த கிளர்ஒளி போற்றி
கைலைசேர் முழுமுதற் கடவுளே போற்றி
கொல்புலித் தோல்உடைக்கோமான் போற்றி
கோதறு நற்குணக் குன்றே போற்றி
சந்தனச் சாந்தின் சுந்தர போற்றி
சாதிகள் கடந்த தத்துவ போற்றி
சிலையால் எயில்வரி சேவக போற்றி
சீருடைச் சிவபுரத்து அரசே போற்றி
சுந்தரன் தனைத்தடுத்து ஆண்டவ போற்றி
சூது, பொய் களவு தொலைப்பாய் போற்றி
செந்தமிழ் தந்த செம்மலே போற்றி
சேக்கிழார் தீந்தமிழ் திளைப்பாய் போற்றி
சைவம் தழைக்கநில் தவமே போற்றி
சொல்லும் பொருளுமாம் தூமணி போற்றி
சோதியுள் சோதியாய்த் துலங்குவாய் போற்றி
ஞானசம் பந்தனை நயந்தாய் போற்றி
ஞிமிறுசேர் கொன்றை நீள்சடை போற்றி
ஞேயநல் அடியார் நினைவே போற்றி
தண்தமிழ்ச் சங்கத் தலைவா போற்றி
தாயே தாதாய் சங்கரா போற்றி
திருவா சகம்பெறு செல்வா போற்றி
தீஞ்சுவைக் கவிஞர்பாத் தேனே போற்றி
துரியம் கடந்த தொல்லாய் போற்றி
தூக்கிய திருவடிச் சோதி போற்றி
தென்னாடு உடைய சிவனே போற்றி
தேவா ரம்நுகர் செவியாய் போற்றி
தையலைத் தலைக்கொள் சதாசிவ போற்றி
தொண்டர் உளம்அமர் தூயோய் போற்றி
தோலும் துகிலும் புனைவாய் போற்றி
நதிசேர் செஞ்சடை நம்பா போற்றி
நாற்றிசை விளக்காம் நாதா போற்றி
நினைப்பவர் நெஞ்சில் நின்றாய் போற்றி
நீறு, செம் பசுமை நிறத்தாய் போற்றி
நுண்ணியாய் அகன்றாய் ஆழ்ந்தாய் போற்றி
நூபுரச் சீரடி தருவாய் போற்றி
நெற்றிமேல் ஒற்றைக் கண்ணாய் போற்றி
நேயத்தே நில் நிமல போற்றி
நைவளப் பண்பா நாடினை போற்றி
நொந்தவர்த் தாங்கும் நோன்தாள் போற்றி
நோய், பசி தீர்க்கும் தாய் அருள் போற்றி
பன்னிரு திருமுறைப் பாடலாய் போற்றி
பார்த்தனுக்கு அருள்செய் பரம்பொருள்போற்றி
''பித்தன்'' எனப்பெறு வித்தக போற்றி
பீடெலாம் கொண்ட பெம்மான் போற்றி
புத்தேள் போற்றும் பொன்னடி போற்றி
பூவார் சென்னிப் புனிதா போற்றி
பெருநஞ்சு உண்டருள் பெரியோய் போற்றி
பேதமை அகற்றும் பிஞ்ஞக போற்றி
பைஅராப் பூண்ட பரமனே போற்றி
பொய்வளர் நெஞ்சம் புகாதாய் போற்றி
போக்கு வரவிலாப் பொருளே போற்றி
மதன்படத் திறந்த நுதல்விழி போற்றி
மாதவர் மடமா வயங்குவாய் போற்றி
மீண்டு மனத்தரை விடுவாய் போற்றி
மீறிய புலவோர் விருந்தே போற்றி
மும்மலம் அறுக்கும் முக்கணா போற்றி
மூவர் தமிழ்க்கடல் மூழ்குவாய் போற்றி
மெய்கண் டானைஆட் கொண்டனை போற்றி
மேலவர்க்கு எல்லாம் மேலவ போற்றி
மையல் கெடுத்தாள் வரதனே போற்றி
மொழி அரை யன்கவி முதலே போற்றி
மோகித்து அணைவார்க்கு ஏகனே போற்றி
யானை உரிபோர்த்து அருளினை போற்றி
வங்கக் கடல்நஞ்சு உண்டாய் போற்றி
வாதவூர் வள்ளல்பா மாந்தினை போற்றி
வினைகெடுத்து ஆளும் முனைவ போற்றி
வீட்டின்பருள வல் விமலா போற்றி
வெண்ணீறு ஆடிய புண்ணிய போற்றி
வேதமும் அங்கமும் மேயாய் போற்றி
வையகம் வாழவே போற்றி போற்றி

திருச்சிற்றம்பலம்

# அம்பிகை வணக்கம்

தொகுப்பு : தமிழ்க்கடல் ராய. சொ

பராசக்தியாகிய அம்பிகைக்குத் திருத்தலங்கள் பலவற்றிலும் வழங்கப்பெறும் திருப்பெயர்கள் பலவற்றையும், புராண வரலாற்று நிகழ்ச்சிகள் விரவிவரவும் சிவமும் சக்தியும் என்றும் இணைந்தே இருக்கும் என்பதனையும் கூறும் இந்தத் தமிழ் அருட்சனை மலர், புண்ணிய யோகப் பொலிவுடன் திகழச் செய்யவல்லது.

சக்தி மாதங்கி சர்வாபரணத்தி தற்பரத்தி
முத்தி முதலெனும் மூலத்தி அக்கினி முப்புரத்தி
சித்தி வித்தாதி சிவகாமி தில்லை சிதம்பரத்தி
புத்தி திருத்தி யெனையாள் கண்ணுள்ள புராதனியே
சிவனார் மனமகிழ் தேவி போற்றி
செங்கண் மால்பின்வரு செல்வி போற்றி
இமவான் பயந்த இறைவி போற்றி
இறைவன் இடப்புறம் இருந்தாய் போற்றி
உமையே உண்ணா முலையே போற்றி
உலகெலாம் ஈன்றருள் ஒருத்தி போற்றி
தந்தி முகவனின் தாயே போற்றி
கந்தனைப் பெற்றருள் கன்னி போற்றி
ஞானசம் பந்தனை நயப்பாய் போற்றி
ஞானப் பால் கொடுத்து அருளினை போற்றி
ஈசனார் நெருப்புருத் தவிர்ப்பாய் போற்றி
இடப்புறம் குளிர்ச்சியை இடுவாய் போற்றி
காலம் கடந்த கடவுள் போற்றி
கற்பனை தாண்டிய கற்பகம் போற்றி
எழுதாச் சொல்லின் எழிலே போற்றி
இகமும் பரமும் ஈவாய் போற்றி
தோன்றாத் துணைக்கோர் துணையே போற்றி
துவாத சாந்தம் கடந்தாய் போற்றி
மூலத் தலத்து முதலே போற்றி
முக்கட் சுடர்க்கு விருந்தே போற்றி
தண்ணார் தமிழின் சுவையே போற்றி
கண்ணார் அமுதக் கடலே போற்றி
பிறவிப் பிணிக்கு மருந்தே போற்றி
பேசா மறையின் பொருளே போற்றி
அமிழ்தினும் இன்மொழி அருள்வாய் போற்றி
தமிழ்க்கடல் மாந்தும் தலைவி போற்றி
சிவனை ஈன்றருள் செந்திரு போற்றி
சிவனார் தந்தநல் திருவே போற்றி
அன்றிவ் உலகெலாம் அளித்தாய் போற்றி
என்றும் கன்னியாய் இருப்பாய் போற்றி
ஒன்றிய உணர்வோர் உணர்வே போற்றி
ஒன்னார் நெஞ்சில் உறையாய் போற்றி
தெவர் பகை அடு தேவே போற்றி
பவ்வ நெடுங்கடல் படிவே போற்றி
பண்ணார் இன்தமிழ்ப் பாவாய் போற்றி
எண்நான்கு அறமும் வளர்ப்பாய் போற்றி
கண்ணும் கருத்தும் நிறைந்தாய் போற்றி
விண்ணோர் மிளிர்முடி விளக்கே போற்றி
புலவர் நாவில் பொருந்துவாய் போற்றி
புண்ணிய யோகப் போலிவே போற்றி
அகந்தைக் கிழங்கை அகழ்வாய் போற்றி
அற்புதன் ஆகம் ஆண்டாய் போற்றி
மகிடமுகத்தனை மாய்த்தாய் போற்றி
சகடவாழ்வு அடுதையல் நாயகி போற்றி
வினைஎலாம் கெடுக்கும் விமலி போற்றி
நனைமலர்ச் சேவடி நல்குவாய் போற்றி
வேதமுடிமேல் விளங்குவாய் போற்றி
நாதப் பொருளாய் நண்ணுவாய் போற்றி
கற்றவர் சுவைக்கும் கரும்பே போற்றி
அற்றவர்க்கு அருளும் அரசி போற்றி
பார்த்தனுக்கு அருள் செய்ய பணிந்தனை போற்றி
தீர்த்தன் பின் வேட்டுருத்தெரிந்தனை போற்றி
பன்றிபின் பதியொடு வந்தனை போற்றி
குன்றெறி குழவியை ஏந்தினை போற்றி
செழியர் பிரான்திரு மகளே போற்றி
வழுதிநாடு ஆண்டபெண் மணியே போற்றி
உலகினை வெற்றி கொள் ஒண்தொடி போற்றி
கலைபல கற்றுணர் காரிகை போற்றி
சொக்கற்கு மகுடமும் சூட்டினாய் போற்றி
தழைபொருள் தலைவர்கு தந்தனை போற்றி
தமிழ் அவைத் தலைமையும் தந்தாய் போற்றி
முழுமுதல் தொட்டநின் மொய்குழல் போற்றி

விழுமியோர் முடிதவழ் மெல்லடி போற்றி
கருங்குழல் செவ்வாய்க் கார்மயில் போற்றி
ஒருங்கிய சாயல் சுருங்கிடை போற்றி
குவளைக்கண்ணி குரை கழல் போற்றி
தவள வெண்ணகைத் தண்ணளி போற்றி
சுரும்பமர் நறுமலர்ச் சுரிகுழல் போற்றி
துரியம் கடந்த நல்சுடர்முகம் போற்றி
குழவித் திங்கள் சேர் எழில்நுதல் போற்றி
முழுதுலகு அருள்தரு விழிக்கயல் போற்றி
பண்ணமர் மொழிபகர் பவளவாய் போற்றி
புண்ணியப் பேரளி புன்னகை போற்றி
துன்னுபொன் ஆடைத் தொடித்தோள் போற்றி
மின்னிகர் பொன்கொடி நுண்ணிடை போற்றி
வரதமும் அபயமும் வழங்குகை போற்றி
சரதம் வீடருள் தாளினை போற்றி
சிங்கம் ஏறும் சேவகி போற்றி
வங்க நஞ்சு உண்டவன் மணாட்டி போற்றி
மரகதக் கொடிப்பெரு மாட்டி போற்றி
மாணிக்கவல்லி மாதா போற்றி
அபிடேக அபிராம வல்லி போற்றி
அங்கயற் கண்ணுடை அம்மை போற்றி
அல்லியங் கோதை அலங்கலாய் போற்றி
அபிராமித்தாய் அணங்கே போற்றி
ஆவுடை நாயகி அன்னே போற்றி
ஆளுடை அம்பிகை அம்மா போற்றி
ஞானப்பூங் கோதை நங்காய் போற்றி
தேனக்க கொன்றைத் தெரியலாய் போற்றி
பார்வதி! பராபரை! பைரவி! போற்றி
நாரணி! பெரிய நாயகி போற்றி
அன்ன பூரணி! அம்பிகை போற்றி
மன்னுமீ னாட்சி மடப்பிடி போற்றி
விசுவனா தன்மகிழ் விசாலாட்சி போற்றி
பசுபதி பங்குறு பரமேட்டி போற்றி
சக்தி கரும்புவில் தாங்குவாய் போற்றி
பக்தி வலையில் படுபவள் போற்றி
வாமனி நீலி! வராகினி போற்றி
கோமளவல்லி கோமதி போற்றி
மயிலே! அமுதே மானே! போற்றி
குயிலே! தேனே! கொழுந்தே போற்றி
சுந்தரி! சங்கரி! சூலி! போற்றி
அந்தரி! சாமளை அமலை போற்றி
காமாட்சி காந்தி மதித்தாய் போற்றி
கவுரி! சிவ காமி,முக் கண்ணி! போற்றி
அன்பெலாம் ஒருரு ஆனாய் போற்றி
அவனியின் அன்னையே போற்றி போற்றி

ஸ்ரீராமஜெயம்

## திருமால் வணக்கம்

தொகுப்பு : தமிழ்க்கடல் ராய. சொ

அகர முறையில் அமைக்கப்பட்டும் பிரபந்தச் சொற்கள் அப்படியே எடுத்தாளப் பெற்றும், அடியார்கள், ஆழ்வார்கள், ஆச்சாரியர்கள் பெருமையினை விளக்கியும், வரலாற்றுக்குரிய செய்திகளை ஏற்ற வாறு இணைத்தும், கருணையுடன் எடுத்த பத்து அவதாரச் சிறப்பினையும், அரங்கத்தில் பள்ளி கொண்ட அரிதுயிலில் தொடங்கி, வையகம் உண்ட அற்புதத்தில் முடிக்கப் பெற்றதுமான இந்தத் தமிழ் அருச்சனை மலர் பிறவி வேறினை அறுக்கவல்லது.

உலகம் யாவையும் தாம் உளஆக்கலும்
நிலைபெறுத்தலும், நீக்கலும் - நீங்கலா
அலகுஇலா விளையாட்டு உடையார் அவர்
தலைவர் அன்னவர்க்கே சரண் நாங்களே.
அரங்கம் பள்ளிகொல் அரியே போற்றி
ஆழ்வார் அமுதம் அருந்தினை போற்றி
இளையவர் ஏத்தும் இராம! போற்றி
ஈரடி மாருதிக்கு ஈந்தனை போற்றி
உடையவர் போற்றிய ஒருவ போற்றி
ஊழி முதல்வ! நின் ஒண்கழல் போற்றி
எட்டெழுத் தாக இலங்குவாய் போற்றி
ஏனமாய்ப் பாரை இடந்தாய் போற்றி
ஐந்தலைப் பாம்பினில் ஆடினாய் போற்றி
ஒருசிறு குறளாய் உதித்தாய் போற்றி
ஓங்கி உலகம் அளந்தாய் போற்றி
ஔடதம் அகப்பிணிக்கு ஆவாய் போற்றி

'அஃகி அகன்ற அறிவே போற்றி
கல்லுக்கு உயிர்கொடு காகுத்த போற்றி
'ந'ப்போல் அவனியை நயப்போய் போற்றி
சட்டெனக் கல்மழை தடுத்தாய் போற்றி
ஞயம்சேர் மொழியருள் நம்ப போற்றி
மடம்செறி கஞ்சனை மாய்த்தாய் போற்றி
வணங்கான் முடிவிழ வகுத்தாய் போற்றி
தடவரை மார்பனைத் தடிந்தாய் போற்றி
நரனொடு சிங்கமாய் நண்ணினை போற்றி
பரசி ராமனாம் பண்ணவ போற்றி
மழிசைப் பிரான்தமிழ் மாந்தினை போற்றி
உயர்வற உயர்நலம் உடையவ போற்றி
அரவர இல்துயில் அப்பா போற்றி
பலரா மப்பெயர் படைத்தாய் போற்றி
வருபரி யாகும் மாதவ போற்றி
மழவடை அடர்த்த மைந்தா போற்றி
ஆளவந் தார்கருள் அமர போற்றி
பிறவிவேர் அறுக்கும் பெருமாள் போற்றி
மீனமாய் வந்த விண்ணவ போற்றி
கமடமாய்த் தாங்கிய கார்வண போற்றி
கான்கடல் கடந்த கருணையே போற்றி
கிராதனைத் தோழனாக் கிளத்தினை போற்றி
கீதை புகன்றருள் கிருட்டின போற்றி
குலசே கரப்பிரான் குழைதமிழ் போற்றி
கூடார் தமைவெலும் கோவிந்தா போற்றி
கெழுதகை நிலமகள் கேள்வா போற்றி
கேசவ! இருடி கேசா! போற்றி
கைதவர் காணாக் கார்முகில் போற்றி
கொண்டல் நிறத்துக் குரிசில் போற்றி
கோதண்டம் கொண்ட கொண்டலே போற்றி
சங்கு சக்கரம் தாங்கினாய் போற்றி
சார்ங்கம் கதைவாள் தரித்தாய் போற்றி
சிவனை வலத்தினில் சேர்த்தாய் போற்றி
சீதையை மணந்த சீதர போற்றி
சுக்கிரீ வற்கருள் தோன்றாள் போற்றி
சூடிக் கொடுத்தவள் துணைவ போற்றி
செந்தமிழ்ப் பாக்கடல் திளைப்பாய் போற்றி
சேய்பிர கலாதன் செய்தவ போற்றி
சையமால் வரையில்நில் தலைவா போற்றி
சொற்பதம் கடந்த தூமணி போற்றி
சோர்விலாத் தொல்பதம் தருவாய் போற்றி
ஞாலம் போற்றும் நல்லடி போற்றி
ஞியிறுமு துளவணி நெடுமால் போற்றி
ஞேயர்தம் நெஞ்சில் நின்றாய் போற்றி
தயரதன் செய்தமா தவமே போற்றி
தாமோ தர!மது சூதன போற்றி
திருவாழ் மார்புறு செல்வா போற்றி
தீவினை செறுதிரி விக்ரம போற்றி
துரோபதை சோர்வு துடைத்தோய் போற்றி
தூது நடந்தருள் தொல்லடி போற்றி
தெரிவை தேவகி சிறுவா போற்றி
தேசிகர் கவிநுகர் செவியாய் போற்றி
தையல் யசோதை தனையா போற்றி
தொண்டர் அடித்திருத் தொங்கலாய் போற்றி
தோகை உருக்மிணி தோழா போற்றி
நம்மாழ் வார்மொழி நயந்தனை போற்றி
நாரா யண!நின் நல்பதம் போற்றி
நின்றாய் இருந்தாய் கிடந்தாய் போற்றி
நீரிடைத் துயில்கொள் நெடியோய் போற்றி
நுண்இடைப் பாமைதோள் நோக்கினாய் போற்றி
நூற்றுவர் ஆற்றலை மாற்றினாய் போற்றி
நென்னலாய் இன்றாய் நாளையாய் போற்றி
நேயர் தம் நெஞ்சம் நிறைந்தாய் போற்றி
நையார் மனத்தையும் நைப்பாய் போற்றி
நொடியும் மறக்கிலா நோன்தாள் போற்றி
நோயில் வாழ்வுஅருள் நுண்ணியாய் போற்றி
பத்மநா பா! பரந் தாமா! போற்றி
பாணாழ் வாரைஆட் படுத்தினை போற்றி
பிரமனை உந்தியில் பெற்றாய் போற்றி
பீதக ஆடைப் பெம்மான் போற்றி
புள்ளரசு ஊறும் புண்ணிய போற்றி
பூதத் தார்பாப் போற்றினை போற்றி
பெரியாழ் வார்தமிழ் பேணினை போற்றி
பேயார் பாசுரப் பேழையே போற்றி
பைந்தமிழ்ப் பின்செல் பரமனே போற்றி
பொய்கையார் போற்றிய புனிதா போற்றி
போதம் கடந்தநற் பொருளே போற்றி
மங்கைமன் னன்பா மகிழ்ந்தனை போற்றி
மாயவ! வைகுந்த! வாமன! போற்றி
மின்னிகர் பின்னையை வேட்டாய் போற்றி
மீனக் கொடியினை ஈன்றாய் போற்றி
முனிமண வாளர்சொல் முதல்வா போற்றி
மூஉலகு ஆளும் முன்னோய் போற்றி
மெல்லியல் இராதையை மேவினாய் போற்றி
மேல்மது ரக்கவி விழைவாய் போற்றி
மையே மழைமுகில் வடிவே போற்றி
மொழிதமிழ்க் கடவுள் முழுகினாய் போற்றி
மோகனப் பாற்கடல் முகிழ்ந்தாய் போற்றி

யானைக்கு அருளிய வானவ போற்றி
வள்ளல் தமக்கெல்லாம் வள்ளால் போற்றி
வாலிக்கு வீடு வழங்கினை போற்றி
விட்டுணு எனப்பேர் விளங்கினை போற்றி
வீடணற்கு அடைக்கலம் விளம்பினை போற்றி
வெண்ணெய் உண்டசெவ் வாயனே போற்றி
வேய்ங்குழல் இசைத்த வித்தக போற்றி
வையகம் உண்டவா போற்றி போற்றி

ஸ்ரீ ராமஜெயம்

## தாயார் வணக்கம்

தொகுப்பு : தமிழ்க்கடல் ராய. சொ

பெருகிய வெள்ளியிலும் கருகிய இரும்பிலும், தன்னாட்சி செலுத்தும் தாயாரின் தனித் தன்மையையும் அவதாரங்களிலும் பெருமாளைப் பிரியாப் பெருமையினையும் கூறும் இந்தத் தமிழ் அருச்சனை மலர் தரணியில் துன்பத்தினை நீக்கவல்லது.

காடு வெட்டிப் போட்டு கடிய நிலந் திருத்தி
வீடு கட்டிக் கொண்டிருக்கும் வேள்வணிகர் வீடுகட்கு
அன்றைக்கு வந்த எங்கள் அம்மா இலக்குமி நீ
என்றைக்கும் நீங்காதிரு.
திருவெலாம் சுரந்தருள் திருவே போற்றி
திருமால் நெஞ்சமர் திருமகள் போற்றி
கருமால் மார்பகம் கலந்தாய் போற்றி
பெருமாள் பிரியாப் பெருமகள் போற்றி
கருமா மணியின் கண்ணே போற்றி
ஒருமால் உளமகிழ் ஒருத்தி போற்றி
திருமா மகள்நின் செவ்வி போற்றி
ஒருமா மணியா ஒளிர்வாய் போற்றி
பிரியாது அவனுளம் பேணுவாய் போற்றி
வருமாசு அகற்றுசெம் மணியே போற்றி
மருவாது இடரெலாம் மாற்றுவாய் போற்றி
அருமா வினையெலாம் அழிப்பாய் போற்றி
வருமாத் துயர்களை மாதா போற்றி
இருமாப் பிறவிவேர் இறுப்பாய் போற்றி
குருமா மணிநிறக் கொழுந்தே போற்றி
திரையெறி பாற்கடல் செந்திரு போற்றி
விரிகடல் உலகெலாம் விளங்குவாய் போற்றி
பெருமையில் ஈடிலாப் பெண்கொடி போற்றி
அருந்திறல் அறிஞரை ஆண்டாய் போற்றி
சரண்உரு தவாக்கிடர் தருவாய் போற்றி
மருந்தென பிணிகொல் வல்லாய் போற்றி
பொருந்திய புலவர்நாப் புகழோய் போற்றி
கரும்பெனக் கவிஞர்கட்கு இனியாய் போற்றி
நிரம்பிய புலமையோர் நினைவே போற்றி
தருபேர் உலகின் தாயார் போற்றி
அருமையில் அருமையா அமைவாய் போற்றி
பெருமையில் நிகரிலாப் பிடியே போற்றி
வருபொருள் யாவும் வழங்குவாய் போற்றி
பெருகிய அழகுக்கு ஒருமகள் போற்றி
தரித்திரம் அகற்றும் தையலே போற்றி
முரசதிர் வாழ்வினை முழக்குவாய் போற்றி
கரையிலாத் துயர்க்கடல் கடத்துவாய் போற்றி
உரம்கொள உலகை உவப்பாய் போற்றி
எருதூர் சிவனார்க்கு இளையாய் போற்றி
வரைவில் வள்ளலின் தங்காய் போற்றி
கரிமுகன் அத்தைஉன் கலழ்இணை போற்றி
முருகவேள் மாமி, நின் மொய்கழல் போற்றி
செருவார் இராமன் தேவி போற்றி
வருசீர்த் தயரதன் மருகி போற்றி
தருபுகழ்க் கோசலைத் தனமே போற்றி
திருவுறும் அயோத்திச் செல்வமே போற்றி
அருளூறு மிதிலை அணங்கே போற்றி
பெருகொளிச் சனகன் பெண்ணே போற்றி
அருநந்த கோபன் மருமகள் போற்றி
வருவசு தேவன் மகன்துணை போற்றி
திருவார் யசோதையின் சீர்மகள் போற்றி
கருவார் தேவகி கருத்தே போற்றி
மருள்அறு செல்வ மகளே போற்றி
பொருகளத்து அறம்சொனான் பூவையே போற்றி
வருகணன் மகிழ்உறுக் மிணியே போற்றி
தருவை, மண் கொணர் சத்ய பாமா போற்றி
மருவுசீர் இராதை மங்காய் போற்றி
பெரும்புகழ்ப் பின்னைப் பிராட்டி போற்றி
உருகுசீர் அடியார் உணர்வே போற்றி

பொருகடல் துயில்வோன் பொருளே போற்றி
உருஎழில் வேளின் ஒருதாய் போற்றி
மருகியா இரதியை வாய்த்தாய் போற்றி
பிரமனைப் பெற்றவன் பெண்மயில் போற்றி
மருமகள் வாணியை மகழிந்தாய் போற்றி
மருவிய ஆண்டாள் மாற்றவ போற்றி
தருமனின் மைத்துனன் தாரமே போற்றி
அருச்சுனன் வலவனை அனைந்தவள் போற்றி
தரும, மா ருதிக்குநாள் தந்தவள் போற்றி
திரைமீன் வடிவினன் திகழ்பெண் போற்றி
பருங்கம டப்பிரான் பத்தினி போற்றி
மருப்புறு வராகனார் மகிழ்பெண் போற்றி
நரசிங் கப்பிரான் நாயகி போற்றி
ஒருகுறள் ஆனவன் உத்தமி போற்றி
பரசுறும் இராமனின் பாவாய் போற்றி
நிரம்பிய இராமனின் நிழலே போற்றி
பெரும்பல இராமனின் பெண்மகள் போற்றி
பரம்பொருள் கண்ணனின் பாரி போற்றி
வருமா வடிவினன் மாதே போற்றி
பொருளெலாம் பூத்திடு பொன்னே போற்றி
வருதொழில் வளர வளர்ப்பாய் போற்றி
தரைசெழிக் கப்புரி தாயே போற்றி
அரதனக் குவியலில் அண்ணுவாய் போற்றி
விரவிய பொன்மலை மேவுவாய் போற்றி
பெருகிய வெள்ளியில் பிறங்குவாய் போற்றி
கருகிய இரும்பிலும் கலப்பாய் போற்றி
வரும்ஏர் உழவர்கை வாழ்வாய் போற்றி
பெரும் தொழில் வல்லரைப் பிரியாய் போற்றி
தரைமகள் வளமெலாம் தாங்குவாய் போற்றி
திரைவளம் யாவும் செய்வாய் போற்றி
வரைப்பெரு வளம்நனி நிரைப்பாய் போற்றி
மருங்கெலாம் செல்வம் நிரப்புவாய் போற்றி
அரசனோடு ஆண்டியை ஆள்வாய் பேற்றி
பொருளார் அவனி பூப்பாய் போற்றி
மருவார் வாழ்வை மாய்ப்பாய் போற்றி
பெருவாழ்வு உலகுக்கு அருள்வாய் போற்றி
அருள்பொழி கடைக்கண் அம்மா போற்றி
வரம்பில் பேர் அழகின் மாமகள் போற்றி
வரம் தரு பெரும்பொருள் மகிழ்வாய் போற்றி
கருணையார் கடலின் கருமணி போற்றி
பெருமையின் உறையுளாப் பெருகுவாய் போற்றி
அரசொடு பெருவாழ்வு அளிப்பாய் போற்றி
வரையிலாச் செல்வம் வளர்ப்பாய் போற்றி
திருச்செங் கமலத் தெய்வமே போற்றி போற்றி
திருவே போற்றி! செல்வி போற்றி
அருள்வாய் போற்றி! அழகே போற்றி!
வருவாய் போற்றி! வாழ்வே போற்றி
கருணைக் கண்மலர் போற்றி போற்றி

உ

சிவமயம்

## முருக வணக்கம்

தொகுப்பு : தமிழ்க் கடல் ராய.சொ.

108 போற்றிகள் அமையுமாறு திருத்தாண்டக முறையில் அமைந்தும் முதல் பாடலில் ஆறுபடை வீடுகளை சிறப்பித்தும், இறுதிப் பாடலில் உறுப்புகளைச் சிறப்பித்தும், அருணகிரிநாதர் போன்ற சான்றோர்களின் வாக்கினை எடுத்தாண்டு முருகப் பெருமானின் திருவிளையாடல்களைக் கூறுவது மான இந்தத் தமிழ் அருச்சனை மலர் அரன் மகிழ்ந்த மறையின் பொருளையும் தரவல்லது.

அருவமும் உருவும் ஆகி அனாதியாய்ப் பலவாய் ஒன்றாய்ப்
பிரம்மமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி ஆகிக்
கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டே
ஒருதிரு முருகன் வந்தாங்(கு) உதித்தனன் உலகம் உய்ய.

திருப்பரங்குன்று இனிதுறையும் செல்வா போற்றி
திருச்செந்தூர்ச் சீரலை வாய்த்தேவா போற்றி
திருப்பழனி மலையிருக்கும் தேனே போற்றி
திருவேர கச்சாமி நாதா போற்றி
திருத்தணிகை முதல் மலைகள் திகழ்வாய் போற்றி
தீம்பழங்கள் உதிர்சோலை சேர்வாய் போற்றி
திருப்பொலிய உலகாளும் செம்மால் போற்றி
செந்தமிழர் தெய்வமே போற்றி! போற்றி! 9
சொக்கேசர் பெற்ற உயர்தோன்றால் போற்றி
தொல் உமையாள் ஈன்றெடுத்த சோதி போற்றி

சக்கரம் கொள்மால் தங்கைதனையா போற்றி
தத்துவங்கள் கடந்த தனிப்பொருளே போற்றி
நக்கீரர் பழம் பாட்டை நயப்பாய் போற்றி
நாவலர்கள் கவிக்கினிய நம்பா போற்றி
விக்கின விநாயகனுக்கு இளையாய் போற்றி
வேடர்குல மாப்பிள்ளாய் போற்றி! போற்றி! 18
அருணகிரி நாவில் நடம்புரிவாய் போற்றி
அனுபூதி அலங்காரப் புகழாய் போற்றி
கருணைபொழி பன்னிரண்டு கண்ணா போற்றி
கார் அனைய கைசராறு உடையாய் போற்றி
அருள் சுரக்கும் ஆறுமுகத்து அண்ணால் போற்றி
ஆலாலம் உண்டகண்டன் பாலா போற்றி
வெருவுறச்சூர் தடிந்தவடிவேலா போற்றி
மெய்ஞ்ஞானப் பிள்ளையே போற்றி போற்றி 27
வள்ளியெனும் குறக்கொடியை மணந்தாய் போற்றி
மணப்பதற்கு மரம்போல நின்றாய் போற்றி
கொள்ளை கொள்ளும் எழில் அமைந்தகுமரா போற்றி
கும்பிடுவோர் இடர்களையும் குகனே போற்றி
தெள்ளுதமிழ்ப் பெருங்கடலுள் திளைப்பாய் போற்றி
தீந்தமிழால் வைதார்க்கும் அருள்வாய் போற்றி
புள்ளிமயில் ஏறிவரும் புனிதா போற்றி
புண்ணியம் செய் புண்ணியமே போற்றி போற்றி 36
தேவயானையை மணஞ்செய் சிங்கமே போற்றி
தேவசேனாபதியாத் திகழ்வாய் போற்றி
தேவயானைக் கிளைய சிறுவா போற்றி
தேவேந்திரன் மருமகனாம் செம்மல் போற்றி
தேவர் சிறை மீட்டருள்செய் தீரா போற்றி
தேவரெலாம் தொழச்சிறந்த தேவே போற்றி
தேவாரம் பெரும்சிவனார் மைந்தா போற்றி
தேவாதி தேவனே போற்றி! போற்றி! 45
கந்தா! குகா! கடப்பந்தாராய் போற்றி
காதலியர் இருவரையும் பிரியாய் போற்றி
கொந்தாரும் குறிஞ்சிப்பூந் தொடையாய் போற்றி
கோழிஎனும் கொடிகொண்ட குரிசில் போற்றி
செந்தேறல் தினைமாவோடு உண்டாய் போற்றி
தினைகாத்த சிறுமிமயல் சேர்ந்தாய் போற்றி
எந்தாயே எம் அப்பா இறைவா போற்றி
எழுத்தழிக்கும் இனையடிகள் போற்றி போற்றி 54
சரவணத்தில் வந்துதித்த தவமே போற்றி
சரவணபவா! கார்த்திகேயா போற்றி
முருகனெனும் அழகு இளமைமுதலே போற்றி
முனிவர்களும் வணங்குகின்ற மூர்த்தி போற்றி
திருகுகுணத்து அசுரர் விழச்செற்றாய் போற்றி
தேவர்மறைத் தீவளர்த்த சீராய் போற்றி
உருகுமனத்து அடியர் உளத்து உறைவாய் போற்றி
உறுகிரிகள் உறைபவனே போற்றி! போற்றி! 63
மாம்பழத்துக்கு உலகைவலம் வந்தாய் போற்றி
மயில் ஏறிக் கணப்பொழுதில் அடைந்தாய் போற்றி
தீம்பழத்தை அண்ணன் உணக் கண்டாய் போற்றி
தே, முதல்வன் செய் சூழ்ச்சி அறிந்தாய் போற்றி
தேம்பதுமப் பிரமன் அஞ்சச்செய்தாய் போற்றி
சிறையிட்டு பொருள் கூறும் செவ்வாய் போற்றி
காம்பறிதோள் கயற் கண்ணி கண்ணே போற்றி
கட்டழகுக் கடவுளே போற்றி! போற்றி! 72
உலகீன்ற ஒரு கன்னிமகனே போற்றி
ஊழிமுதல் சிவன்தந்த ஒருவ போற்றி
பலகலையும் உணர் அறிவுப் பழமே போற்றி
பன்னிரண்டு கண், கைகள் படைத்தாய் போற்றி
மலர்ஆறு முகங்கொண்ட வள்ளால் போற்றி
வள்ளிமலர் அடிவணங்கும் மணாளா போற்றி
மலைபிளக்க வேல்எறிந்த மன்னா போற்றி
மயில் ஏறும் பெருமானே போற்றி போற்றி 81
கடல்வற்ற வேல்விட்ட கடம்பா போற்றி
கார் அவுணக் கடல் குடித்த காளாய் போற்றி
குடல் சரியச் சூரன் உரம் குடைந்தாய் போற்றி
குன்றமெலாம் குடிகொண்ட குழவி போற்றி
மடவர் மார் வயிற்றில் தீ வைத்தாய் போற்றி
மறை வகுத்த மகத்தீயை வளர்த்தாய் போற்றி
படஅரவில் துயில் மாயோன் மருகா போற்றி
பாம்பணிந்த பரன் மகனே போற்றி! போற்றி 90
மருவினிய மலர் பாதம் போற்றி! போற்றி!
மாவீரச் சிலம்புக்கால் போற்றி போற்றி!
பொருவரிய பொன்னின் இடை போற்றி! போற்றி!
போர் வல்ல, வரை மார்பம் போற்றி! போற்றி!
தருகொடைக்கை பன்னிரண்டும் போற்றி! போற்றி!
தாயெனும் சீர்முகம் போற்றி! போற்றி! போற்றி!
அரன் மகிழ மறை புகல்வாய் போற்றி! போற்றி
அருட்கண்கள் போற்றியோ! போற்றி! போற்றி! 108

பெரியபுராணம் செய்து அருளிய சேக்கிழார் பெருமான் திரு நட்சத்திரம் வைகாசி மாத பூசம்

சைவ சித்தாந்த சாத்திர உபதேசம் செய்து அருளிய திருக்கைலாய பரம்பரை சந்தான குரவர்கள் நால்வர் திருநட்சத்திரம்.

1. மெய்கண்டதேவ நாயனார் புரட்டாசி மாத சுவாதி
2. அருணந்தி சிவாச்சாரியார் புரட்டாசி மாத பூரம்
3. மறை ஞான சம்பந்த சிவாச்சாரியார் ஆவணி மாத உத்திரம்
4. உமாபதி சிவாச்சாரியார் சித்திரை மாத அஸ்தம்

ஓம்
சுவாமியே சரணம் ஐயப்பா

# ஐயப்ப வணக்கம்

தொகுப்பு : நா.சே. நாராயணன், நாட்டரசன் கோட்டை

அகர முறையில் அமைந்து, புராண வரலாற்று நிகழ்ச்சிகளுடன் நடை பாதையில் மலையில் அருளாட்சி செய்யும் இறை, இறைவி, இயற்கை முதலியவற்றையும் காட்டி நிற்கும் இந்தத் தமிழ் அருச்சனை மலர் ஆறு சமயங்களின் அருளார்ந்த மெய்ப்பொருளைத் தரவல்லது.

சரணம் ஸ்ரீ ஐயப்ப சுவாமியே! சரணம்
சரணம் சரணம் எனச்சாற்றி - அருணத்
தருண மலர்ப் பொற்றாள் சரணம் போற்றிச் சார்ந்தோம்
கருணை வைத்தாள் வாய் கனிந்து.

ஓம் ஹரிஹர மோகன சுதனே சரணம் ஐயப்பா
" அச்சங்கோவில் அரசே "
" அப்பாச்சி மேடே "
" அழுதா நதியே "
" அழுதையின் ஏற்ற இறக்கமே "
" அன்னதானப் பிரபுவே "
" ஆரியங்காவு ஐயனே "
" ஆறன்முளை ஆண்டவனே "
" ஆறுதவ வீடு உடையவனே "
" இஞ்சிப் பாறைக்கோட்டையே "
" இடக்கட்டு நாதனே "
" இராமர் பாதமே "
" இருமுடிப் பிரியனே "
" இலவன் தோடே "
" ஈசன் திருமகனே "
" உத்தரத்தில் பிறந்தவனே "
" உமையவள் தன் மகனே "
" உலகளந்த மாயோன் மகனே "
" உறக்குழி தீர்த்தமே "
" ஊமைக்கருள் புரிந்தவனே "
" எரிமேலி தர்ம சாஸ்தாவே "
" ஏகாந்த மூர்த்தியே "
" ஐந்து மலைக்கரசே "
" ஐயப்ப தெய்வமே "
" ஒருமால் நெஞ்சமர் திருமகள் மகனே "
" ஒச்சிறை பர தெய்வமே "
" ஓம குண்டமே "
" ஓம்கார மூர்த்தியின் தம்பியே "
" ஔவைக்கருள் புரிந்தோன்தம்பியே "
" கரிமலை ஏற்ற இறக்கமே "
" கரிமலை பகவதியே "
" கரிவலப் தோடே "
" கருங்கயம் நதியே "

ஓம் கல்லிடும் குன்றே சரணம் ஐயப்பா
" கற்பூர ஆழியே "
" கன்னிகளைக் காப்பவனே "
" கன்னிமூலை மகா கணபதியே "
" காஞ்சிபுரம் குன்றே "
" காந்த மலை வாசனே "
" காவல் கருப்பு தெய்வமே "
" காளைகட்டி நாதனே "
" குடமுருட்டி மலையே "
" கும்பளம் தோடே "
" குரு சரணங்கள் ஏற்பவனே "
" குருதட்சணை கொடுத்தவனே "
" குருவுக்கு குருவே "
" குளத்துப் புழை பாலகனே "
" கொல்லக்குன்று ஏற்றமே "
" கொச்சுக்கடுத்த சுவாமியே "
" கோட்டைப்படியே "
" சபரி பீடமே "
" சபரி மலை சாஸ்தாவே "
" சமாதியோகம் உறைபவனே "
" சரங்குற்றி ஆலே "
" சரண கோஷப் பிரியனே "
" சிங்க வாகனனே "
" சித்திரை விசுவே "
" சிவானந்தம் கொடுப்பவனே "
" சிறியானை வட்டமே "
" சின்முத்திரை கொண்டவனே "
" செஞ்சோற்றுக்கடன் தீர்ப்பவனே "
" செம்பறி வாகனனே "
" தர்ம மேடே "
" திரிவேணி சங்கமமே "
" துளசி மணிமாலை தருபவனே "

ஓம் தென் புலத்தோர் கடன் தீர்ப்பவனே சரணம் ஐயப்பா
'' தேகபலம் தருபவனே ''
'' நாகராஜாவே ''
'' நீலிமலை ஏற்றமே ''
'' நெய் அபிஷேகப் பிரியனே ''
'' பஞ்சலோக மூர்த்தியே ''
'' பஞ்சாட்சரம் அருள்பவனே ''
'' படிக்காய் உடையவனே ''
'' பதினெட்டாம் படியோனே ''
'' பம்பா நதியே ''
'' பம்பையின் சத்யாவே ''
'' பம்பையின் சிசுவே ''
'' பம்பையின் விளக்கே ''
'' பந்தள வேந்தனே ''
'' பலியிடும் புரையே ''
'' பழமையோருக் கருள்வோனே ''
'' பஸ்மக்குளத் தீர்த்தமே ''
'' பாதபலம் தருபவனே ''
'' பானகப் பிரியனே ''
'' பிரம்மச்சர்ய விரதப் பிரியனே ''
'' புலிப்பால் கொணர்ந்தவனே ''
'' பூங்கா வனமே ''

ஓம் பூரனை புஷ்கலை நாதனே சரணம் ஐயப்பா
'' பெரியானை வட்டமே ''
'' பேட்டை நடனமே ''
'' பேரூர் தோடே ''
'' பொன்னம்பல மேடே ''
'' மகர ஜோதியே ''
'' மகிஷி மர்த்தனனே ''
'' மஞ்சன் மாதாவே ''
'' மணி மண்டமே ''
'' மண்டல பூஜையே ''
'' மதகஜ வாகனனே ''
'' மாளிகை புரத்து மாதாவே ''
'' முத்திரைத் தேங்காய் உடையவனே ''
'' முன்முடி வாசனே ''
'' மோகினி சுதனே ''
'' யோக பட்டயம் அணிந்தவனே ''
'' வாபரன் தோழனே ''
'' விரதபலம் தருபவனே ''
'' வில்லாளி வீரனே ''
'' வீரமணி கண்டனே ''
'' வெண்புலி வாகனனே ''

## சந்தான குரவர்கள்

(i) அகச்சந்தானம - நால்வர் : சரித்திர காலத்திற்கு முற்பட்டவர்

1. திருநந்திதேவர் 2. சனற்குமார முனிவர் 3. சத்தியஞான தரிசினிகள் 4. பரஞ்சோதிமுனிவர்

(ii) புறச்சந்தானம் : நால்வர் : பதிமூன்றாம் நூற்றாண்டு

| பெயர் | அவதரித்த நாடு | அவதரித்த தலம் | அவதரித்த குலம் | அருளிய சாத்திர நூல்கள் | சிவமான நாள் |
|---|---|---|---|---|---|
| 1. மெய்கண்ட தேவர் | நடுநாடு (கடலூர் மாவட்டம்) | பெண்ணாகடம் | சைவ வேளாளர் | சிவஞான போதம் | ஐப்பசி, சுவாதி |
| 2. அருணந்தி சிவாச்சாரியார் | ஷெ | திருத் துறையூர் | ஆதிசைவர் | 1. சிவஞான சித்தியார் 2. இருபா இருபஃது | புரட்டாசி பூரம் |
| 3. மறைவான சம்பந்தர் | சோழநாடு (தஞ்சை மாவட்டம்) | மருதூர் | ஷெ | | ஆவணி, உத்திரம் |
| 4. உமாபதி சிவாச்சாரியார் | சோழநாடு (கடலூர் மாவட்டம்) | திருத்தில்லை | தில்லைவாழ் அந்தணர் | 1. சாத்திர நூல்கள் 8 2. பிற நூல்கள் 6 | சித்திரை அஸ்தம் |

1. சிவப்பிரகாசம் 2. திருவருட்பயன் 3. வினாவெண்பா 4. போற்றிபஃறொடை 5. கொடிக்கவி 6. நெஞ்சுவிடு தூது 7. உண்மைநெறி விளக்கம் 8. சங்கற்ப நிராகரணம்

1. திருமுறை கண்ட புராணம் 2. திருத்தொண்டர் புராண சாரம் 3. திருப்பதிகம் கோவை 4. திருப்பதிக்கோவை 5. சேக்கிழார் புராணம் 6. சிவக்ஷேத்திர சிவநாமக் கலிவெண்பா

# பிரதோஷ மகிமை

தொகுப்பு :-நா.சே. நாராயணன் நாட்டரசன் கோட்டை

## லிங்க மகாத்மியம்

சிவபெருமான் உயிர்களின் அறிவு வளர்ச்சியின் பொருட்டு உயிர்களைப் படைக்க எண்ணம் கொள்ளும் போது அக்கருணையே அவர்க்கு சக்தி ஆகிறது. சிவமும் சக்தியும் கூடி மாயையைச் செலுத்தும் போது முதலில் நாதம் என்ற ஒலி வடிவான சிவமும் ஆற்றல் வடிவான சக்தியும் (விந்துவும்) தனித்தனி இயங்கி வருகிறது. இந்த சிவசக்தி சம அளவில் ஒன்றுபட்டு மாயையை இயக்கும் தத்துவம் 'சதாசிவம்' எனப்படும். இத்தத்துவத்தின் வடிவமே சிவலிங்கம் எனப்படும்.

பிரணவத்தின் வடிவமாகவும் ஞானத்தின் சொரூபமாகவும் விளங்கி வரும் பரம்பொருளாகிய சிவபெருமானை லிங்க மூர்த்தியாக வணங்கி வழிபடுவது மிகவும் சிறப்பாகும்.

பெரும்பாலும் சிவாலயங்களில் சிவபெருமான் லிங்க மூர்த்தியாகவே காட்சி தருகிறார். சிவலிங்கமே பின்னால் உள்ள உலக தோற்றத்திற்குக் காரணமாகின்றது. சிவலிங்கத்தை தேவர்களும், முனிவர்களும், அண்டசராசங்களும், வழிபாடு புரிந்தனர். லிங்கத்தின் பீடம் ஆவுடை எனப்படும். அதாவது அம்பாளின் சொரூபம் பீடத்தில் உள்ளது. அதுவே கிரியா சக்தி வடிவம்.

லிங்கத்தின் அடிப்பாகம் பிரம்மரூபம், அதாவது நான்முகனின் சொரூபம் அமைந்துள்ளது.

மத்திய பாகத்தில் மாதவன் சொரூபம், மேலே ஈசனின் சாந்நித்தியம். திருமால், பிரம்மன், இந்திரன் முதலிய தேவாதி தேவர்களும், முனிவர்களும் சிவபெருமானை லிங்க ரூபத்தில் வழிபட்டனர். அவர்கள் பூஜைக்கு ஏற்றபடி விஸ்வகர்மா லிங்கங்களை செய்து கொடுத்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

இந்திரன் - பதுமராக லிங்கம், குபேரன் சொர்ணலிங்கம், எமதர்மராஜன் - கோமதலிங்கம், வருணன் - நீலலிங்கம், விஷ்ணு - இந்திரலிங்கம் பிரம்மன் - சுவர்ணலிங்கம், விசுவ தேவர்களும் அஷ்டவசுக்களும் - வெள்ளிலிங்கம், வாயுதேவன் - பித்தளை லிங்கம், சூரியன் - ஸ்படிகலிங்கம், சந்திரன் - முத்துலிங்கம், நாகர்கள் - பவள லிங்கம், அசுவினி தேவர்கள் - மண்ணாலான லிங்கம், ருத்திரர்கள் - திருவெண்ணீற்று லிங்கம் பெற்றார்கள்.

மகாலஷ்மி நெய்யினால் அமைந்த லிங்கத்தைப் பெற்றாள். ஸரஸ்வதி மாணிக்க லிங்கத்தைப் பெற்றாள். துர்க்கை சொர்ண லிங்கத்தைப் பெற்றாள். மாமறைகளும், சைவமந்திரங்களும், கல்லினால் செய்யப்பட்ட லிங்கத்தைப் பெற்றனர்.

இவ்வாறு லிங்கங்களைப் பெற்றவர்கள் லிங்கத்தைப் பூசித்து ஆனந்தம் கொண்டனர்.

இரத்தினத்தால் செய்யப்பட்ட லிங்கத்தை வழிபட்டால் லஷ்மிகாடாக்ஷம் என்றென்றும் நிலைத்திருக்கும். உலோகங்களாலான லிங்கத்தை அர்ச்சித்து வழிபடுவோர்களைத் தருமங்கள் தாமாகவே வந்தடையும். பவளத்தால் செய்யப்பட்ட லிங்கத்தை பூஜிப்போருக்கு நிலையான செல்வம் வந்து சேரும். மண்ணினால் செய்யப்பட்ட லிங்கத்தை வழிபடுவோர் வேண்டிய வரங்களைப் பெறுவர். கல்லினால் செய்யப்பட்ட சிவலிங்கத்தை ஆராதிப்பவர் நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு அரும்பெரும் சக்திகளைப் பெறுவர்.

சிவலிங்க பூஜையால் கண்ணப்பர் முக்தி அடைந்தார். சிவலிங்க பூஜையால் மார்க்கண்டேயர் நீண்ட ஆயுளைப் பெற்று மாமுனிவராய்ப் போற்றப்பட்டார். சிவலிங்க பூஜையால் வெள்ளையானையும் சிலந்தியும் முக்தி நிலைபெற்றன. வெள்ளை யானைக்கு சிவபாதமும், சிலந்திக்கு அரசாளும் பாக்கியமும் கிட்டியது. பின்னர் அவர்கள் முன்போல் சிவகணத்தலைவர்களாய் எம்பெருமானுக்குத் திருத்தொண்டுகள் புரியலாயினர்.

மயிலாப்பூரில் பார்வதி தேவி மயிலாக எழுந்தருளி கபாலீச்வரரை லிங்க ரூபத்தில் பூஜித்துத் திருமணம் செய்து கொண்டாள்.

காஞ்சியம்பதியில், மண்ணினால் லிங்கத்தை அமைத்து பூஜித்து ஏகாம்பரரேச்வரரைத் திருக்கல்யாணம் செய்து மகிழ்கின்றாள்.

திருவானைக் காவலில் நீரினால் லிங்கத்தை அமைத்து அகிலாண்ட நாயகி ஜம்பகேச்வரரை மணம் புரிந்தாள்.

சுசீந்திரத்தில் இந்திரன் சிவலிங்கத்தில் பூஜை செய்து பாபவிமோசனம் பெற்றார்.

சிவனும் சக்தியும் ஒன்றே. சக்தியில்லாமல் சிவன் இல்லை! சிவன் இல்லாமல் சக்தி இல்லை. உலகம் முழுவதும் சிவசக்திமயம். சிவனும் சக்தியும் இல்லை என்றால் உலகமே இல்லை. சிவனே தந்தை, சக்தியே தாய், சிவனே பரமாத்மா, சக்தியே மனோன்மணி, சிவனே மஹேச்வரன், சக்தியே மஹேசுவரி, இவ்வாறு சக்தி சிவனுள் அடங்க. சிவமும் சக்தியுள் அடங்கி சிவசக்தி சொரூபமாக லிங்க வடிவமாக எழுந்தருளி நம்மை இச்சாசக்தி, ஞானாசக்தி, கிரியாசக்திகளால் காத்தருளுகிறார்.

சிவலிங்கத்தை ஸ்தாபித்து அந்த சொரூபத்தில் ஈசனைத் தியானிப்பவர்களுக்கு சிவலோகப்ராப்தி கண்டிப்பாக சித்தியாகும்.

சிவனை முப்போதும் நினைப்போர் பாவ, கருமங்கள், நீங்கப் பெற்று பலயாகங்கள் செய்த பேறு பெறுவர். முப்போதுமின்றி எப்போதும் சிவபூஜை செய்து வந்தால் முற்பிறப்பு பாவவினைகள் அற்றுப் போகும். இம்மையிலும் நல்லமார்க்கம் கிட்டும்.

உருத்திராக்ஷ மாலைகள் அணிந்து திருவெண்ணீற்றைப் பூசிக்கொண்டு நமச்சிவாய மந்திரத்தைச் சிந்தையிலே இருத்தி த்யானிப்பவர்களுக்கு இம்மையிலும், மறுமையிலும் சகல மேன்மைகளும் கிட்டும்.

நமச்சிவாய மந்திரத்தால் நம்மை நாம் சிவமயமாக்கிக் கொள்ள வேண்டும். இதயத்தில் அவன் சொரூபத்தை நிலை நிறுத்தி தியானிக்க வேண்டும்.

பஞ்சாக்ஷரமே, ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்னும் பஞ்ச பிரம்ம மந்திரங்களாகும். இவை நூற்றிருபத்தைந்து பஞ்சாக்ஷர மந்தரங்களாக விரிந்துள்ளன.

நமச்சிவாய மந்திரத்தைச் சொல்லி வில்வதளமும், தும்பை மலரும் சாத்தி ஏகமனத்துடன் ஆலயத்துள் சென்று சிவனைத் தொழுது வணங்குபவர் பெறுதர்க்கரிய பல பேறுகளை பெறுவர்.

சிவ க்ஷேத்திரத்திலுள்ள புண்ணிய தீர்த்தங்களில் நீராடுவோர்க்கு ப்ரம்ம ஹத்தி தோஷம் விலகும். இகபர சௌபாக்யங்கள் கிட்டும்.

சிவாலயத்தைப் ப்ரதக்ஷிணம் செய்வோர் அசுவமேத யாகம் செய்தப் பலனைப் பெறுவர்.

அமாவாசை, பௌர்ணமி ஆகிய நாட்களில் சிவதரிசனம் மிக விசேஷம். மாதப் பிறப்பன்றும், உத்ராயண தக்ஷிணாயணத் தொடக்கக் காலங்களிலும் சிவனைத் தரிசிப்போர் சிவபதவியைப் பெறுவர்.

நமச்சிவாய என்பது தூல பஞ்சாச்சரம், சிவாய நம : என்பது சூட்சும பஞ்சாச்சரம். தூல பஞ்சாச்சரத்தை நாவாலும் சூச்சும பஞ்சாச்சரத்தை உள்ளத்திலும் ஜெபிக்க வேண்டும். பிரதோஷ காலத்தில் சிவலிங்கத்திற்கும், நந்தி தேவனுக்கும் நடக்கும் பூஜையைக் கண்டு களித்து, ரிஷபாரூட மூர்த்தியாக ஈசனை சேவிப்போர் அஷ்ட ஐசுவர்யங்களையும் பெற்று வாழ்வர்.

திரிசூலம் தாங்கி நான்கு கைகளுடனும் மூன்று கண்களுடனும் ஏகபாதத்துடனும் விளங்கும் ஈசனை ஏகபாத மூர்த்தியாக வழிபடுவோர் முக்தி பெறுவர்.

இரு முகமும் ஏழு தோள்களும் மூன்று பாதங்களும் உடைய வேள்வித் தேவனாக விளங்கும் ஈசனை ஆராதிப்போர், வானுலகப் பேறு அடைவர்.

நந்தியுடன் சிவ கணங்கள் ஈசனைப் பணிந்து வணங்கும் உருவிலே ஆராதிப்பவர் கணங்களுக்குத் தலைவனாக விளங்குவர்.

காளை வாகனத்தில் மதிசூடிய பெருமானாக தேவியுடன் பிரதோஷ காலத்தில் வழிபடுவோர் ஆயிரம் அசுவமேத யாகங்களைச் செய்த பலனைப் பெறுவர்.

மானிடப்பிறவி எடுத்த பயன் வீணாகாமல் இருப்பதற்கு இப்பிரதோஷ விரதத்தை நமது நித்ய கர்மங்களைப் போல் அவசியம் மேற்கொள்ள வேண்டும்.

# நந்தியெம் பெருமான்

**வரலாறு :**

பாரத நாட்டு வரலாற்றுப் பழமையான சான்றாக விளங்குவது ஹரப்பா, மொகஞ்சதாரோ அகழ்வா ராய்ச்சிகள்.

அங்குக் கண்டெடுக்கப்பட்ட முத்திரை, வழிபாட்டுப் பொருள்கள் இவற்றுள் முக்கியமானது காளை. (நந்தி)

யோகிக்கு முன் நந்தி நிற்பது போலவும், படுத்திருப்பது போலவும் திருவுருவங்கள் காணப்படுகின் றன.

மொகஞ்சதாரோ காலம் கி.மு. 5000 என்பது அறிஞர் கருத்து. எனவே நந்தியெம் பெருமான் வழிபாடு பாரதத்தில் கி.மு. ஐயாயிரத்திற்கு முற்பட்ட சமய வழிபாடாக இருந்ததென்று தெரிகிறது.

சங்க இலக்கியங்களில் நந்தி, சிவபெருமானுக்கு வாகனமாகவும், கொடியாகவும் திகழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

சங்க காலத்திற்குப் பின் தமிழகத்தை ஆண்ட பல்லவர்கள் தங்கள் அரச முத்திரையாக நந்தியைக் கொண்டிருந்தனர்.

சைவ சமயம் தம் முதல் குருவாக நந்தியெம் பெருமானைக் குறிப்பிடுகிறது.

சைவ சமய சாத்திர தோத்திர நூல்கள் நந்தியெம் பெருமானைப் பலவாறு போற்றுகின்றன.

**நந்தியின் பெயர் பொருள் :**

நந்தி என்ற சொல்லுக்கு மகிழச் செய்பவன் என்று பொருள். சிவ என்று சொல்லுக்கு இன்பம் தருபவன் என்று பொருள். எனவே நந்தி நாமம் சிவநாமமாயிற்று.

ஆகவே தேவாரம் நந்தியை நந்தி நாமம் நமச்சிவாயவே எனப்பாடிற்று.

நந்தியெம்பெருமான் சிலாதல முனிவரது மகனாக வளர்ந்ததாகப் புராணங்கள் கூறுவதால் அவர் சயிலாதி மரபுடையோன் எனப்படுகிறார்.

நந்தி சைவ சமயத்தின் முதல் குரு ஆவர். அவர் வழிவந்த ஞானப்பரம்பரையாகிய திருவாவடு துறை தருமபுரம் திருமடங்கள் திருக்கயிலாய திருப்பரம்பரை எனப்படுகிறது.

அபிதான சிந்தாமணி என்ற அகராதி நூலில் நந்தி என்பதன் பொருள் பின்வருமாறு கூறப்படுகிறது. சிவபிரானைப் போன்ற செம்மேனி, முக்கண், இடது கையில் சூலம், வலது கையில் செபமாலையுடை யவர். அபயவரத கைகளோடு கொண்டு சதுர்புஜமாயிருப்பவர், சர்வ சம்கார காலத்தில் சிவமூர்த்தியை அடைக்கலம் புகுந்து வாகனமானவர். கருடனைக் கர்வ பங்கம் செய்ததால் பூமியில் பசவேசராகப் பிறந்து சிவபூசை செய்து கயிலை அடைந்தவர். சிவாக்கினையால் பிரமனுடைய யாக சாலைக்குச் சென்று அவ்விடத்துச் சிவமூர்த்தியை நிந்தை கூறிய தக்ஷனைத் தலையறவும், சிவ நிந்தனையைக் கேட்டிருந்த தேவர்கள் பிறந்திறந்து சூரபதுமனால் துன்புறத்தப் பெறவும் சாபமிட்டுத் திருக்கயி லையை அடைந்தவர் சிவபெருமான் பிராட்டிக்கு ஞானோப தேசம் செய்தக் காலத்தில் குமாரக் கடவுளை அவர்களிடம் கட்டளையின்றி விட்டதனால் சுறாமீனாகச் சாபமடைந்து வலையராய் வந்த சிவமூர்த்தியால் பிடியுண்டு சாப நீக்கமடைந்தவர், இவர் தவமியற்றிப் பருவத வடிவம் பெற்று ஸ்ரீபர்வதமாய்ச் சிவமூர்த்தியைத் தாங்கியவர். (ஸ்ரீ சைலத்தில் நிருதி மூலையில் நந்திதேவர் தவம்

செய்த இடம் நந்தி மண்டபம் எனப்படும்). விஷ்ணு மூர்த்திக்கு சிவமான்மியம் கூறியவர். (காசியில் உள்ள நந்திநாதோத்பவம் என்ற இடம் நந்திதேவர் செய்த நாத ஒலியால் உண்டானது என்பர்) இராவணனைக் குரங்கால் உன் பட்டணம் அழிக எனச் சபித்தவர்.

மேலே காட்டியவற்றால் நந்தி என்னும் பெயர் சிவபெருமானுக்கும் கயிலைத் திருமலையில் சிவபெருமானுக்குக் காவல் தொழில் செய்யும் அதிகாரம் உடையவருக்கும், சிவபெருமானுடைய வாகனத்துக்கும் வழங்கி வருகின்ற பெயர் என்பது புலனாகின்றது.

நந்திதேவர் மூன்று நிலைகளில் கூறப்படுகிறார்.

### 1. அதிகார நந்தி :

சிவன் கோயில் கோபுர வாசலில் பொற்பிரம்புடன் நின்று காவல் செய்பவர். இவரை வணங்கித் தான் உட்செல்ல வேண்டும்.

### 2. விசுவ ரூப நந்தி :

சிவன் கோவிலின் கொடிமரத்தை அடுத்து பெரிய வடிவில் இருப்பவர். இது திருமால் இடபமதாக தாங்கிய வரலாற்றினைக் குறிக்கும்.

### 3. யோக நந்தி :

இனி உலகமனைத்தும் நிறைந்த தருமத்தின் வடிவமானவர். இவர் மீது எழுந்தருளித்தான் அறக்கடவுளராகிய சிவபெருமான் அடியார்க்கு அருள் செய்துவருகிறார். இவர் சிவசந்நிதியில் படுத்திருந்து தியானத்தில் இருப்பார். பிரதோஷ காலத்தில் அக் கடவுளாகிய நந்திக்குத் தான் அபிஷேக ஆராதனைகள் நடைபெறும். சில இடங்களில் விசுவ ரூப நந்திக்கு நடைபெறுவதும் உண்டு.

### பிரதோஷ காலத்தில் நந்திதேவர் பூஜை :

பிரதோஷ காலத்தில் நந்தி தேவருக்கு நெய் விளக்கேற்றி வெல்லம் கலந்த அரிசியை நிவேதிப்பர். உழுந்து நைவேத்யம் செய்வதுமுண்டு. அருகம்புல் ஆராதனையும் நடைபெறும். வில்வ தளத்தால் அர்ச்சனையும் அலங்காரமும் செய்வர்.

திருக்கயிலை மாமலையில் சிவபெருமான் உமையம்மையுடன் நவரத்தினமணி பதித்த மரகத ஊஞ்சலில் எழுந்தருளுவார். அது சமயம் எதிரே காட்சி தரும் ரிஷப தேவரின் மூச்சுக் காற்று பட்டு ஊஞ்சல் மிக அழகாக ஆடும். இக்காரணம் பற்றியே சிவ சன்னதிக்கு முன்னால் நந்தி தேவர் திருத் தோற்றமளிக்கிறார்.

ஊழிக் காலத்தில், ஏழு கடலும் ஒரு கடலாகி பிரபஞ்சமே ஒன்றினுள் ஒன்று அடங்கி, இறுதியிலே அனைத்துமே சிவனுள் அடக்கம் என்னும் நிலையில் பிரம்மாதி தேவர்கள், முனிவர்கள் கூட சிவசக்தியினுள் அடங்கி ஒடுங்கி விடுகின்றனர்.

அது சமயம் நந்தி தேவர் மட்டும் எம்பெருமான் திருக்கருணையால், சிவனுள் ஒடுங்காமல் சிவனின் வாகனமாய் விளங்குகிறார்.

எனவேதான் பிரதோஷ காலதில் நந்திதேவருக்கும் எம்பெருமானுக்கும் சேர்ந்து அபிஷேக ஆராதனைகள் அற்புதமாகக் கொண்டாடப்படுகின்றன.

## சோம சூக்தப் பிரதட்சிணம்

சோம சூக்தப் பிரதட்சிணம் என்பது பிரதோஷ காலத்தில் பிரைச் சந்திர வடிவத்தில் சிவபெருமானை வலம் வருதல் ஆகும். மற்ற நாட்களில் ஆலயத்தில் வலம் வருவதற்கு மாறாக பிரதோஷ நாளில் சோமசூக்தப் பிரததட்சிணம் செய்தல் வேண்டும்.

ஆலகாலவிஷம் தேவர்களை முன்னும் பின்னும், வலமும், இடமுமாகத் துரத்தியது. தேவர்கள் அஞ்சி நடுங்கி ஒடுங்கி கயிலை மலையை நோக்கி ஓடினார்கள். இறைவனை வலமாக வந்து உள்ளே சென்று பரமனைச் சரணடையலாம் என்று எண்ணிய தேவர்களை ஆலகால விஷம் அப்பிரதட்சிணமாகச் சென்று எதிர்த்தது. இதைக்கண்டு அஞ்சிய தேவர்கள் வந்த வழியே திரும்பிவர ஆலகால விஷம் அந்தப் பக்கத்திலும் எதிர்த்துச் சென்று பயமுறுத்தியது. இவ்வாறு தேவர்கள் வலமும் இடமுமாக வந்த அந்த நிகழ்ச்சிதான் சோமசூக்தப் பிரதட்சிணம் எனப் பெயர் பெற்றது.

### பிரதோஷம் அன்று வலம் வரும் முறை :

முதலில் சிவலிங்கத் திருமேனியையும், ரிஷப தேவரையும் வணங்கிக் கொண்டு அப்பிரதட்சிணமாகச் சண்டேசுவரர் சந்நிதிவரைச் சென்று அவரை வணங்கிக் கொண்டு அப்படியே திருப்பி வந்து முன்போல சிவலிங்கத் திருமேனியையும், ரிஷப தேவரையும் வணங்கிக் கொண்டு வழக்கம் போல் பிரதட்சிணமாக வந்து சுவாமி அபிஷேகத் தீர்த்தம் விழும் நிர்மாலியத் தொட்டி (கோமுகி) அருகே வந்து மேலே விமான தரிசனம் செய்து (மூலஸ்தானத்திற்கு மேலே) பிரதோஷ லிங்கத்தை வணங்கி தொட்டியைக் கடக்காமல் அப்படியே வந்த வழியே திரும்பி அப்பிரதட்சிணமாக சந்நிதிக்கு வந்து சிவலிங்கத்தையும், ரிஷப தேவரையும் வணங்கி சண்டிகேஸ்வரர் சன்னதி வரை சென்று திரும்பி வந்து ரிஷப தேவரை தரிசியாது வலமாகச் சென்று கோமுகியைச் சேர்ந்து அங்கு நின்றும் திரும்பி வந்து ரிஷப தேவரை தரிசித்து இடமாகச் சென்று சண்டிகேஸ்வரரை தரிசித்து திரும்பி வந்து ரிஷப தேவரை தரிசித்து அவருடைய இரு கொம்புகளுக்கு இடையே சிவ லிங்கத்தை வணங்குதல் வேண்டும். இது ஒரு பிரதட்சிணம் ஆகும். இதுபோல் மூன்றுமுறை பிரதட்சிணம் செய்தல் வேண்டும். ஒரு பிரதட்சிணம் போது மூன்றுமுறை சண்டிகேஸ்வரர் சன்னதியையும், இருமுறை கோமுகி வரை செல்வோம். இவ்வாறு செய்தால் அசுவமேதயாகம் செய்த பலன் கிடைக்குமென்று சாத்திரங்கள் கூறுகின்றன.

## பன்னிரு திருமுறைகளின் விளக்கம்

| திருமுறை | ஆசிரியர் | திருமுறை | பாடல் |
|---|---|---|---|
| *1-3* | திருஞான சம்பந்த சுவாமிகள் | திருக்கடைக் காப்பு | *4158* |
| *4-6* | திருநாவுக்கரசு (அப்பர்) சுவாமிகள் | தேவாரம் | *3067* |
| *7* | சுந்தர மூர்த்தி சுவாமிகள் | திருப்பாட்டு | *1026* |
| *8* | மாணிக்கவாசக சுவாமிகள் | திருவாசகம் | *658* |
| | | திருக்கோவையார் | *400* |
| *9* | திருமாளிகைத் தேவர் உள்ளிட்ட ஒன்பதின்மர் | திருவிசைப்பா | *288* |
| ,, | சேந்தனார் | திருப்பல்லாண்டு | *13* |
| *10* | திருமூலர் | திருமந்திரம் | *3047* |
| *11* | திருவாலவாயுடையார் உள்ளிட்ட பன்னிருவர் | பதினோராந் திருமுறை | *1406* |
| *12* | சேக்கிழார் | பெரியபுராணம் | *4286* |
| | மொத்தம் 27 | | *18349* |

உ
சிவமயம்

# ருத்ராக்ஷ மகிமை

தொகுப்பு : நா.சே. நாராயணன்

**தோற்றம் :**

திரிபுரத்து அசுரர்கள் வரபலத்தால் பொன் வெள்ளி இரும்பு என்பனவற்றால் மூன்று கோட்டைகளைக் கட்டிக் கொண்டார்கள். அக்கோட்டைகளோடு ஆகாய மார்க்கமாகப் பறந்து சென்று நினைத்த இடங்களில் எல்லாம் இறங்கிப் பூவுலகத்தாரையும் தேவலோகத்தாரையும் துன்புறுத்தினார்கள். துன்பம் தாங்காத தேவர்கள் திருக்கைலாய மலைக்குச் சென்றார்கள். அங்கே பரமேஸ்வரனாய ருத்ர மூர்த்தி கண்மூடித் தியானத்திலிருந்தார். தேவர்கள் நெடுங்காலம் காத்திருந்து ருத்ர மூர்த்தியோகம் கலைந்ததும் தமது துயரத்தை எடுத்துரைத்து முறையிட்டார்கள். தேவர்களின் முறையீடு கேட்டு ருத்ரமூர்த்தி இரக்கமுற்றுத் தமது திருக்கண்களிலிருந்து நீர்த்துளிகளைச் சிந்தினார். அந்த நீர்த்துளிகள் பூமியில் சிந்தி மரமாக முளைத்தன. அந்த மரங்களே ருத்ராக்ஷ மரம் என்றும் அந்த மரத்தின் வித்துக்களே ருத்ராக்ஷ மணி என்றும் அழைக்கப்பட்டு வருகின்றன.

**பெயர்க்காரணம் :**

ருத்ரமூர்த்தியின் கண்ணிலிருந்து தோன்றியதால் ருத்ராக்ஷம் என்று கூறப்படும். (ருத்திரருத்திர மூர்த்தி; அக்ஷம் கண்) கண்ணில் தோன்றியதால் கண்மணி என்றும் அக்குமணி என்றும் கூறப்படுகிறது. (அக்கு-அக்ஷம்-கண்) சில ருத்ராக்ஷம் இரட்டையாக ஒட்டிக் கொண்டிருக்கும். அர்த்த நாரிசுவரரின் வடிவில் வலப்பாகத்தில் சங்கரனும் இடப்பாகத்தில் கௌரியும் இணைந்து இருப்பதுபோல இந்த மணியும் இரட்டையாக ஒட்டிக் கொண்டிருப்பதால் இதனைக் கௌரிசங்கர் என்று கூறுவர். இந்த மணியில் இரண்டு துளையிருக்கும். விபூதி, ருத்ராக்ஷம் முதலியன சைவ சமய சாதனமாக இருந்தாலும், ருத்ராக்ஷத்தை மட்டும் சாதனம் என்று கூறும் வழக்கு இருக்கிறது. இந்த வழக்கை ''எவரேனும் தாமாக இலாடத் திட்ட திருநீறும் சாதனமும் கண்டால்'' என்ற அப்பர் சுவாமிகளின் வாக்கால் அறியலாம். கண்டத்தில் அணிவதால் கண்டிகை என்று கூறப்படுகிறது.

**அளவும் அமைப்பும் :**

நெல்லிக்காய் அளவுள்ள ருத்திராக்ஷம் சிறந்த பலனைத் தரும் என்றும் எலந்தைப் பழ அளவுள்ள ருத்திராக்ஷம் நடுத்தரமான பலனைத் தரும் என்றும் கடலை அளவுள்ள ருத்திராக்ஷம் குறைவான பலனைத் தரும் என்றும் ருத்ராக்ஷ ஜாபாலோபநிஷத் கூறுகிறது. ருத்ராக்ஷத்தின் துளை பிரம்ம விஷ்ணு ருத்திர்களின் சொரூபம் என்றும், மேலே உள்ள புள்ளிகள் (கரடுகள்) சர்வதேவர்களின் சொரூபம் என்றும் மேற்படி உபநிஷத் கூறுகிறது. இயற்கையிலேயே துளையைப் பெற்ற மணி மிகவும் சிறந்ததாகும். செயற்கையாகத் துளையிடப் பெற்ற மணி மத்திமமாகும். இரட்டையாக ஒட்டியிருக்கும் கௌரி சங்கர் மணி அளவற்ற சிறப்புடையதாகும்.

**முகங்கள் :**

உருத்திராக்க மணியில் நீளவாட்டில் சில வரைகள் (அதாவது கோடுகள் அல்லது பள்ளங்கள்) இருக்கும். ஒரு கோட்டுக்கும் அடுத்த கோட்டுக்கும் இடையே உள்ள பாகம் முகம் என்று கூறப்படும். ஒரு மணியில் எத்தனை வரைகள் அல்லது கோடுகள் உள்ளனவோ அத்தனை முகங்கள் அந்த மணியில்

இருக்கும். எனவே கோடுகளை எண்ணிமுகத்தைக் கணக்கிடுவார்கள். பெரும்பாலான மணிகளில் 5 முகங்கள் இருக்கின்றன. ஒன்று முதல் பதினான்கு முகம் வரை இருப்பதாக ருத்ராக்ஷ ஜாபாலோபநிஷத் கூறுகிறது. ஒன்று முதல் பதினாறு முகம்வரை இருப்பதாக ஆறுமுக நாவலர் சைவ வினாவிடையில் எழுதி இருக்கிறார். ஒன்று இரண்டு மூன்று முகமணிகள் கிடைப்பது மிக மிக அரிது. பன்னிரண்டுக்கு மேற்பட்ட முகமுள்ள மணிகள் கிடைப்பதும் அரிது.

**முகங்களின் சிறப்பு :**

ஒருமுக மணி பரப்பிரம்ம சொரூபமாகும் இதை அணிந்தால் இந்திரிய ஜயம் கிட்டும்; இறுதியில் பரப்பிரம்மத்தோடு ஐக்கியம் ஏற்படும். இரண்டு முகமணி அர்த்த நாரீஸ்வர சொரூபமாகும். இதை அணிந்தால் பரமேஸ்வரனும், பரமேஸ்வரியும் திருப்தி அடைவார்கள். மூன்றுமுக மணி மூன்று வகை யாகாக்கினி சொரூபமாகும். இதை அணிந்தால் அக்னிபகவான் திருப்தி அடைவார். நான்கு முகமணி பிரம்மாவின் சொரூபமாகும். இதை யணிந்தால் பிரம்மா திருப்தி அடைவார். ஐந்து முகமணி சதாசிவ மூர்த்தியான ஸ்ரீபரமேஸ்வரரின் சொரூபமாகும். இதை அணிந்தால் பிரம்மஹத்தி முதலிய பாபங்கள் நிவர்த்தியாகும். ஆறுமுகமணி சுப்ரமணிய சொரூபமாகும். இதை அணிந்தால் அஷ்ட ஐசுவரியமும் தேக ஆரோக்கியமும் ஏற்படும், மேலும் புத்திக் கலக்கம் நீங்கித் தெளிந்த ஞானமுண்டாகும். மகான்களில் சிலர் ஆறுமுக மணியைக் கணபதி சொரூபம் என்று கூறுகிறார்கள். ஏழுமுக மணி சப்த மாதர்களின் சொரூபமாகும். இதைத் தரித்தால் ஐசுவரியமும் ஆரோக்கியமும் உண்டாகும். எட்டுமுகமணி அஷ்ட வசுக்கள், அஷ்ட லக்ஷிமிகள் ஆகியோரின் சொரூபமாகும். இதை அணிந்தால் அஷ்டவசுக்களும் கங்காதேவியும் திருப்தி அடைவார்கள், லக்ஷிமி கடாட்சம் உண்டாகும். ஒன்பது முகமணி நவசக்திகளின் சொரூபமாகும் இதை அணிந்தால் நவசக்திகள் திருப்தி அடைவார்கள். சகலகாரிய சித்தி உண்டாகும். பத்துமுகமணி யமதர்ம சொரூபமாகும். இதை அணிந்தால் தசாபுத்தி தோஷங்கள் நீங்கும் பதினோரு முகமணி ஏகாதச ருத்ர சொரூபமாகும். இதை அணிந்தால் எப்போதும் சௌபாக்கியம் பெருகும். பன்னிரண்டு முகமணி மகாவிஷ்ணு துவாதச ஆதித்தர் ஆகியோர்களின் சொரூபமாகும். இதை அணிந்தால் மகாவிஷ்ணு சூரியர்கள் அனுக்கிரகம் ஏற்படும். பதின்மூன்று முகமணி சகல தேவ சொரூபமாகும். இதை அணிந்தால் சகல காரிய சித்தி உண்டாகும். பதினான்கு முகமணி ருத்ர நேத்ர சொரூபமாகும். இதைத் தரித்தால் சகல வியாதிகளும் நீங்கி ஆரோக்யம் ஏற்படும் இவ்வாறு ருத்ராக்ஷ ஜாபா லோப நிஷத்து விவரிக்கிறது.

**செபமாலை :**

பஞ்சாட்சரம் முதலிய மந்திரங்களைச் செபிக்கும் போது உருக்களைக் கணக்கிடுவதற்காகக் கோக்கப்பட்ட மாலையானது செபமாலை எனப்படும். இல்லறத்தார் இருபத்தேழு மணிகளாலும் துறவறத்தார் இருபத்தைந்து மணிகளாலும் செபமாலை தயாரித்து கொள்ள வேண்டும். இனி இல்லறத்தார் ஐம்பத்து நான்கு மணிகளாலும் நூற்றெட்டு மணிகளாலும் செபமாலை செய்து கொள்ளலாம். செப மாலைக்கு இரண்டு முகம், பன்னிரண்டு முகம் ஏற்ற முகங்கள் ஆகும். ஒரு செபமாலையில் கோக்கும் மணிகள் யாவும் ஒரே விதமான முகங்களை உடையதாக இருக்க வேண்டும். வெவ்வேறு வித முகங்களை உடையதாக இருக்கக் கூடாது. வெண்பட்டு பருத்தி என்றவற்றில் இருபத்தேழு இழையால் திரித்த கயிற்றில் நுனியோடு நுனியும் அடியோடு மற்றும் மணிகள் ஒன்றை ஒன்று தொடாதபடி இடை இடையே நாக பாசம் பிரம்மகிரந்தி சாவித்திரி என்பவைகளில் ஏதாவதொரு வகை முடிச்சை இட்டுக் கோக்க வேண்டும். பிறகு கோக்கப்பட்ட கயிற்றின் இரண்டு நுனிகளையும் ஒன்று சேர்த்து அதில் நாயக மணி ஒன்றைக்கோத்து முடிச்சிட்டுக் கொள்ள வேண்டும் நாயக மணிக்கு மேரு என்ற வேறு பெயரும் உண்டு. செம்பு வெள்ளி, பொன் கம்பிகளாலும் செபமாலை கட்டலாம்.

**அணியத்தக்க காலம் :**

சந்தியாவந்தனம், சிவபூசை, செபம், தியானம், ஆலயதரிசனம், புராணம் படித்தல் புராணம் கேட்டல், சிரார்த்தம் முதலானவற்றைச் செய்யும்போது கட்டாயம் உருத்திராக்கம் அணிந்து கொள்ள வேண்டும். சயனத்திலும் மலசலமோசனத்திலும் வியாதியிலும் ஆசௌசங்களிலும் உருத்திராக்கம் அணியக் கூடாது.

**அணிவதன் பலன் :**

நல்லகாரியம் செய்யும் போது ருத்ராக்ஷத்தை தரிசிக்க நேர்ந்தால் அந்தக் காரியத்தின் புண்ணியம் லக்ஷம் மடங்காகப் பெருகும். உருத்திராக்க மணியைக் கைகால் தொட்டவாறு நல்ல காரியம் செய்தால் அந்தக் காரியத்தின் புண்ணியம் கோடி மடங்காகப் பெருகும். உருத்திராக்கத்தை அணிந்து கொண்டு அக்குமாலை கொண்டு பஞ்சாட்சர செபம் செய்தால் அதன் புண்ணியம் ஆயிரம் கோடி மடங்காகப் பெருகும் இவ்வாறு ருத்ராக்ஷ ஜாபாலோபநிஷத் கூறுகிறது. உருத்திராக்கத்தை கழுத்தில் அணிந்து கொண்டால் 2000 கோதான பலனும், காதுகளில் அணிய முயற்சித்தால் 16000 கோதான பலனும், சிகையில் அணிந்து கொண்டால் ஒரு கோடி கோதான கைகளில் அணிந்து கொண்டால் அளவற்ற கோதான பலனும் கிடைக்கும் என்று கலாக்னிருத்திரர் கூறியதாக மேற்கண்ட உபநிஷத் கூறுகிறது. பக்தி இல்லாதவன் ஆனாலும் மூடனாக இருந்தாலும் எவன் ஒருவன் உருத்திராக்கத்தை அணிகிறானோ அவன் எல்லா விதமான பாதகங்களிலிருந்தும் விடுபடுகிறான் என்றும், உருத்திராக்கம் அணிவதை மகாவிரதமாக முனிவர்கள் கருதுகிறார்கள் என்றும், எவன் 1000 கண்மணிகளை அணிகிறானோ அவன் எல்லாத் தேவர்களாலும் வணங்கப்படுகிறான் என்றும் 1000 கண்மணிகள் கிடைக்காவிட்டால் சிகையில் ஒன்று காதுகளில் அவ்வாறும் தோள்களில் பதினாறு காதுகளில் அவ்வாறும் தோள்களில் பதினாறு பதினாறும் முன்கைகளில் பன்னிரண்டு பன்னிரண்டும் கழுத்தில் முப்பத்திரண்டுமாக அணிந்து கொண்டால் அவன் ஸ்ரீ ருத்ரனுக்குச் சமம் ஆவான் என்றும் வடமொழி ஸ்காந்தம் கூறுகிறது. நீராடும்போது உருத்திராக்க மணியில் பட்டு வழியும் நீர் கங்கை நீருக்குச் சமம் என்று ஆறுமுக நாவலர் குறித்துள்ளார். உருத்திராக்கம் அணிந்தவரைப் பேய் பூதங்கள் நெருங்க மாட்டா என்று புராணங்கள் கூறுகின்றன.

**உபயோகம் :**

உருத்திராக்க மணிகள் அணிந்து கொள்ளப்படுவதோடு வேறு சில வகைகளிலும் பயன்படுகிறது, சிவபூசை செய்கிறவர்கள் புற்றுமண் சந்தனம் முதலியவற்றுள் உருத்திராக்கத்தையும் க்ஷணிகலிங்கமாக வைத்துப் பூசிக்கிறார்கள். திருக்கோயில்கள் சிலவற்றில் கருப்பக்கிருகத்தில் சிவலிங்கத்துக்கு மேலே உருத்திராக்கத்தால் பந்தல் இட்டிருக்கிறார்கள். மருத்துவர்கள் உருத்திராக்கத்தை உரைத்து மருந்தோடு கலந்து கொடுக்கிறார்கள்.

''புரிநூலும் கண்டிகையும் பூம்பட் டுடையும்
அரைஞாணும் கச்சை அழகும்.''

என்று கந்தர் கலிவெண்பாவில் முருகனது வடிவத்தைக் கே தி பாதமாக வருணிக்கும் போது ''முருகன் தனது மார்பில் முப்புரிநூலும் உருத்திராக்கக் கண்டிகையும் அணிந்திருக்கிறான்'' என்று குமரகுருபரர் குறிப்பிட்டுள்ளார்.

முன்னொரு காலத்தில் சார்வாங்கன் என்பவன் தன் கடமைகளை மறந்து, வியாபாரத்தில் தவறுகள் புரிந்து, வாழ்ந்து வந்தான். ஒரு கட்டத்தில் குடும்பத்தைத் துறந்து பின் களவு செய்து இறுதியில் விந்திய மலைச்சாரலில் உயிர் துறந்தான். அவனை எமகிங்கரர்கள் பாசக்கயிற்றால் இழுக்க, சிவகணங்கள் எமகிங்கரர்களைத் தடுத்து, இவ்வுயிரைக் கைலாயத்துக்கு எடுத்துச் செல்லப் போகிறோம் என்றனர்.

சிங்கரர்கள் ''இவன் மகாபாவி'' என்றன. அதற்கு சிவகணங்கள், இவன் இறந்த இடத்திலிருந்து பத்துமுழ தூரத்தில் ருத்திராட்ச மரம் உள்ளது. எனவே, இவனுக்குச் சிவலோகப் பதவி கிட்டியது என்றனர். ருத்திராட்சத்திற்கு அவ்வளவு உயர்வு!

ருத்திராட்சம் என்ற பெயரே ருத்திரன் என்ற பெயரில் இருந்து வந்தது ஆகும். சிவபெருமானின் மூன்று கண்களில் இருந்து விழுந்த ஆனந்தக் கண்ணீரில் இருந்து முப்பத்தெட்டு விதமான ருத்திராட்சம் தோன்றியது. வலது கண்ணில் இருந்து மஞ்சள் நிறத்துடன் பன்னிரெண்டு விதமான ருத்திராட்சமும் இடது கண்ணில் இருந்து வெண்ணிறத்தோடு பதினாறு விதமான ருத்திராட்சமும், நெற்றிக் கண்ணில் இருந்து பத்துவிதமான கருப்பு நிற ருத்திராட்சமும் தோன்றின.

சானைக்கல்லில் உரைத்தால் மஞ்சளாக தங்கம் போல் பிரகாசிப்பதும், நல்வர்ணமுள்ளதுமான ருத்திராட்சத்தை அவற்றிற்கு குறிப்பிட்டுள்ள இடங்களில் தரிசிக்க வேண்டும். தண்ணீரில் போட்டால் மூழ்குவதும், இரு செப்புத் தகட்டுக்கு இடையில் வைத்து சோதனை செய்தால் சுற்றக் கூடியதுமான ருத்திராட்சம் மிகவும் விசேஷமானதாகும். பூச்சிகளால் அரிக்கப்பட்டிருந்தாலோ, விரிசல் உண்டாகியிருந்தாலோ, உளுத்துப் போய் இருந்தாலோ, முட்கள் போன்று மேல் பாகத்தில் மிகக் கூர்மையாக இருந்தாலோ அதை அணிந்து கொள்ளக்கூடாது.

**முடிவுரை :**

பூசிய திருநீறு கூட வியர்வையில் ஒரோ வழி அழியக்கூடும். உருத்திராக்கம் எந்நேரமும் அழியாச் சின்னமாக விளங்கும். எனவே மக்கள் யாவரும் தத்தம் குழந்தைகளுக்கு தீட்சை செய்வித்து கழுத்தில் ஆறுமுகம் கொண்ட ஒரு உருத்திராக்கத்தை சிகப்புபட்டு நூலில் கோர்த்து நிலை பேறாகத் தரிக்கச் செய்ய வேண்டும்.

## சமயக் குரவர்கள் நால்வரைப் பற்றிய குறிப்புகள்

| எண் | குறிப்புகளின் வகை | திருஞானசம்பந்த சுவாமிகள் | திருநாவுக்கரசு சுவாமிகள் | சுந்தர மூர்த்தி சுவாமிகள் | மாணிக்கவாசக சுவாமிகள் |
|---|---|---|---|---|---|
| 1. | அவதரித்த நாடு | சோழநாடு (தஞ்சை மாவட்டம்) | நடுநாடு (கடலூர் மாவட்டம்) | நடுநாடு (கடலூர் மாவட்டம்) | பாண்டி நாடு (மதுரை மாவட்டம்) |
| 2. | அவதரித்த தலம் | சீர்காழி | திருவாமூர் | திருநாவலூர் | திருவாதவூர் |
| 3. | அவதரித்த குலம் | வைதீக அந்தணர் | வேளாளர் | ஆதிசைவர் | அமாத்திய அந்தணர் |
| 4. | வாழ்ந்த வயது | 16 | 81 | 18 | 32 |
| 5. | வாழ்ந்த காலம் | ஏழாம் நூற்றாண்டு | ஏழாம் நூற்றாண்டு | ஒன்பதாம் நூற்றாண்டு | நான்காம் நூற்றாண்டு |
| 6. | அருளிய திருமுறைகள் | திருக்கடைக் காப்பு 1,2-3 | தேவாரம் 4,5,-6 | திருப்பாட்டு 7 | திருவாசகம் திருக் கோவையார் 8 |
| 7. | வழிபாட்டு முறை | கிரியை | சரியை | யோகம் | ஞானம் |
| 8. | சிவமான நாள் | வைகாசி மூலம் | சித்திரைச் சதயம் | ஆடிச்சுவாதி | ஆனி மகம் |

உ

# பஞ்சபூத வழிபாடு

வி.க. மணிமுரசு, நாட்டரசன் கோட்டை

நமது தெய்வ வழிபாடு தொன்மை மிக்கது. இன்ன காலத்தில் துவங்கியது என்று எவரும் உறுதியாகச் சொல்ல இயலவில்லை சுருக்கமாகச் சொன்னால் மனிதன் தோன்றிய போதே தோன்றியது. ஆறு அறிவு வெளிப்பட்டவுடன் வழிபாடும் தொடங்கப் பட்டது. வழிபாடு தொடங்கி அது படிப்படியாக வளர்ந்து சீர்பட்டு இன்றைய நிலைக்கு வந்துள்ளது.

இப்பூவுலகம் இயங்குவது பஞ்சபூதங்களால் என்று நம் முன்னோர்கள் அறிந்து உலகுக்குச் சொல்லி வழிகாட்டினர். இன்று விஞ்ஞானம் அதை ஏற்கிறது.

எம் பெருமான் சிவனை திருவண்ணாமலையில் நெருப்பாகவும் திருவானைக்காவில் தண்ணீராகவும் திருசிற்றம்பலத்திலே வெளியாகவும், திருக்காலத்தியிலே காற்றாகவும் திருவாரூரில் நிலமாகவும் கண்டு பஞ்சலிங்க வழிபாடு செய்து வருகிறோம்.

நமது உடல் பஞ்சபூதங்களால் ஆனது பஞ்சபூதங்களால் இயக்கப்படுகிறது என்பதால் நமது உடலையே பூத உடல் என்று விளம்பினர். சொல்லின் பொருள் உணர்ந்து சொல்லுவோர் சிலர். பொருள் அறியாது சொல்லுவோர் மிகப்பலர். நல்ல தேவாரங்களை, திருவாசகங்களை தேர்ந்த ஞான கோர்வைகளை நம்மில் பலரும் பாடுகிறோம். அவற்றின் பொருள் தெரிந்து உணர்ந்து பாடுவோர் மிகச்சிலரே.

தொண்டர்தம் பெருமை சொல்லவும் எளிதோ என்பர். அதற்கு உதாரணம் நமது கரிகால சோழீசராகும். கரிகால சோழன் சொர்ண காளீஸ்வரை வழிபட கானப்பேரெயில் என்னும் காளையார் கோவிலுக்கு செல்லும் காலை நாட்டரசன் கோட்டை எனும் தென்பனசையில் தங்கிட நேர்கிறது. அப்போது சிவபூஜை செய்யும் வேளை வரவே நமது ஊரிலுள்ள இந்த சிவலிங்கத்தை கண்டு வழிபட்டு முறைப்படி பூஜை செய்து பிறகு தனது காளீஸ்வரர் யாத்திரையைத் தொடர்ந்தான். கரிகாலன் என்னும் சிவத்தொண்டன் வணங்கியதால் தொண்டன் பெயரையே முன் வைத்து விலாசமாக்கி நமது ஈசன் கரிகால சோழீஸ்வரன் என்று தன்னை ஆக்கிக் கொண்டான் எனும் போது தொண்டனுக்கு பெருமை சேர்த்த கரிகாலயீஸ்வரனை நாம் காண்கிறோம்.

இப்போது ஈசனை வணங்க ஆயத்தமாகிறோம். கரு உருவாகும் காட்சியை கருவறையிலிருந்து கருத்து லிங்கமாகப் பார்க்கிறோம். வேதியர் உள்ளிருந்து மணி ஓசை எழுப்புகிறார். உருவிலான் உருவை உவந்து வணங்க இருக்கிறோம். வேதியர் கையிலே நீரை அள்ளி நீர் விளாவுகிறார் நாம் வணங்குகிறோம். நீரைக்கண் பார்க்கிறது. நிலைத்தவனை நினைக்கிறது நெஞ்சம். நிலைத்தவனை வணங்கும் போது நீரையும் வணங்குகிறோம். காற்று நம் கண்ணுக்கு தெரியவில்லை வேதியர் தனலில் சாம்ராணியைப் போட காற்று நிரம் பெற்று நம் கண்ணுக்கு தெரிகிறது வணங்குகிறோம். சூடத்தில் நெருப்பேற்றி காட்டுகிறார் ஜோதியாய் வணங்குகிறோம். நீரை, காற்றை நெருப்பை வணங்கிய நாம் நெடிது உடலை நிலத்தே கிடத்தி வணங்கி நிமிர்கிறோம். பின்கோபுரம் கண்டு கும்பிடும் போது கோல வானம் கும்பிடப்படுகிறது. ஆக ஐந்தும் வழிபடல் அறிந்தறியாமலோ, அறியாதறிந்தோ நடந்து வருகிறது.

நம் முன்னோர் மரத்துள் மறைத்து மாமத யானையை வைத்துளர். ''மறையும் மந்திரமும் மத்திமர்க்கே'' என்பர். மத்திமராகிய நமக்கு ஐம்பூதங்களை வழிபட வழிகண்டு இவ்வாறு ஏற்பாடுகளை நியதிகளை உண்டு செய்துள்ளனர்.

வெல்லத்தில் மருந்துவைத்து பிள்ளைக்கு பிணி தீர்க்கும் தாய் போல் நமக்கு பஞ்சபூத வழிபாட்டை பக்குவமாய் நம் மூதாதையர் பழக்கப்படுத்தியுள்ளனர்.

அருள்மிகு சிவகாமி உடனுறை கரிகால சோளீசருடைய குடமுழுக்கை கண்டுகளிக்கும் நாம் குண்டங்களில் நெருப்பை, குடங்களிலே நீரை, மந்திரத்தில் காற்றை மண்ணை சிலையுருவில் கோபுர கலசத்தின் வழியாக கண்குளிர வானத்தை இப்படியாக காண்கிறோம் பஞ்ச பூதங்களை. பஞ்சபூத வழிபாடு ஒரு விஞ்ஞான விளக்கமே.

வாழட்டும் வளரட்டும் வற்றாத சைவம். உலகுக்கு என்றும் வழிகாட்டும் சைவம்.

## சுந்தர அனுமன் அல்லது சிறிய திருவடி

இராவணன் கயிலை பெயர்க்க காவலன் நந்தி தடுக்க
சீசீ குரங்கென் றேச சீரரெலாம் குரக்கினால் போமென்ற
சூழுரை மண்ணில் நிகழ மனமது கொண்ட சிவனார்
தானொரு கூறு பூதகணஞ் சூழ்தர புவியில் வந்தே

காற்றின் மகனாய்ப் பிறந்து காகுத்தற் கன்பனாய்ச் சிறந்து
சீதையைத் தேடும் பணியைத் திருப்பணி யென்றே கொண்டு
நாடெலாம் சுற்றிச் சோர்ந்து ஆழநீர்க் கடலைத் தாண்டி
ஆழிசூழ் இலங்கை தன்னில் வானுயர் வனத்தில் புக்கு

பூமகள் தோற்றம் கண்டு இராகவன் நாமம் செப்பி
நீள்கரம் கூப்பித் தொழுது பதமலர் போற்றிப் பணிந்து
மோதிரம் சான்று தந்து தூயவள் துயரம் நீக்கி
மாதவள் பதிலுரை கேட்டு சூழா மணிதரப் பெற்று

தாயவள் வாழ்த்தும் பெற்று துண்ணென விண்ணில் தாவி
கோனகர் சேதம் ஆக்கி துரத்தினார் கரத்தில் சேர்ந்து
இராக்கத வேந்தைக் கண்டு தூதனாய்த் தன்னை ஆக்கி
நீதிகள் முறையாய்ச் சாற்றி பாவிதான் திருந்தா னாகி

வாலினில் இட்ட தீயால் மாநகர் சாம்ப ராக்கி
இராகவன் திருமுன் மீண்டு சானகி சபதம் உரைத்து
தேவிதன் அணியும் தந்து தூயவன் துயரம் தீர்த்த
சூரனே! சுந்தரப் பெயரனே! நினக்கு நேர்யா ருளார்

மாசிலா மணியே போற்றி சீரெலாம் தருவாய் போற்றி
ஆஞ்சனை மைந்தா போற்றி ஆண்டகை அனுமா போற்றி
பாரெலாம் புகழும் உந்தன் பாத பங்கயமே போற்றி
சேவகா சீலனே சிறிய திருவடியே போற்றி போற்றி

கண. சுப்பையா
நாட்டரசன் கோட்டை

# இயலாமை கூறேல்

புலவர் கண. கணேசன்,
நாட்டரசன் கோட்டை, இருப்பு : திருச்சுழி.

உடலுக்குத்தான் முதுமைப் பருவம். உள்ளத்திற்கு அது இல்லை. உள்ளத்தில் நல்ல உள்ளம் உறங்காத உள்ளம் என்பர். அந்த உறங்காத உள்ளத்தில் சோர்வும், தளர்வும் என்றும் வருதல் கூடாது எதையும் நல்லதாய்ச் செய்ய என்னால் இயலும் என்ற துணிவுப் பண்பு வேண்டும் என்பதை விளக்க எடுத்துக்கொண்ட தலைப்புதான் இயலாமை கூறேல். இந்தக் கருத்தை விளக்குவதுதான் அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும் பெருமை முயற்சி தரும். என்னும் திருக்குறள் பாடல்.

சோம்பலை நீக்கி, முயற்சியைக் கைக்கொண்டு, உள்ளத்திலே ஊக்கத்தைத் தேக்கி, உற்சாகத்தோடும் உவகையோடும் செயல்களைச் செய்யப் புகுந்தால் இயலாமை என்று இயம்புகின்ற இச்சொல் இருக்கும் இடம் தெரியாமல் ஓடிவிடாதோ?

போருக்குச் செல்கின்ற வீரர்கள் இயலாமையைக் காரணம் காட்டி நின்றால் எதிரிகளின் தாக்குதலுக்கு ஆளாகி மடியத்தானே வேண்டும். இயலாமையைத் தூர எறிந்து, இரும்பு நெஞ்சங்கொண்டு, காக்கும் கரங்களாக கார்க்கில் பகுதியிலே போர்புரிந்ததால் தானே பெரும் வெற்றியைப் பெற்று மகிழ்ந்தோம்.

வெற்றியைத் தந்த வீரர்களைக் குறித்து வெளிவந்த கவிதை ஒன்று என் உள்ளத்தை ஈர்த்தது.

இதோ அந்தக் கவிதை

ஊரைக்காக்கும் சாமிகளுக்கு கோயில்கள் எல்லையிலே எல்லையைக் காக்கும் வீரர்களுக்கு கோயில்கள் நம் இதயங்களிலே

வீரர்களுக்கு இதயங்களிலே கோயில்களை எழுப்புவதோடு நின்றுவிடாமல் இயலாமை இல்லாமல் போவதற்குரிய முயற்சிப் பாதைகளை அமைத்துக் கொள்ளல் வேண்டும்.

'முயன்றால் முடியாதது இல்லை', முயற்சி திருவினை ஆக்கும். என்னும் வாசகங்களை தாரக மந்திரமாகக் கொண்டு செயலாற்றத் தொடங்கினால் பட்டை தீட்டத்தீட்ட வைரம் ஒளிவிடுவது போல நம் வாழ்வு ஒளிமயமாய்த் திகழாதோ?

பாண்டியமன்னரின் அவைக்களத்திலே ஒரு சமயம் இசைப் புலவர் கேமநாதன் என்பவர் வருகை புரிந்தார். மன்னன் அவரை வரவேற்று அவருடைய விருப்பத்தைக் கேட்டான். புலவரோ தங்கள் நாட்டில் இசையிலே என்னை வெல்லக் கூடியவர் யாராவது இருந்தால் அவருக்கு நான் அடிமை. போட்டியை நாளைக்கே ஆரம்பிப்போம். அப்போட்டியிலே என்னோடு வாதிட வந்தவர் தோற்றால் உமது நாடே எனக்கு அடிமை என்றார். இதனைக் கேட்ட மன்னர் மனம் தளராமல் நாள்தோறும் சோமசுந்தரப் பெருமானுக்கு வழிபாடு செய்யும் பாணபத்திரரை அழைத்துவரச் செய்து நாளைக்குப் போட்டிக்குத் தயாராக வரவேண்டுமென ஆணையும் இட்டுவிட்டார். கவலையோடு வீட்டுக்கு வந்த பாணபத்திரர் செய்தியைத் தம்மனைவியிடம் கூறியதோடு நில்லாமல் போட்டி போட என்னால் இயலாதே இயலாதே எனப்புலம்பலானார். அவரின் மனைவி அவரைப் பார்த்து இயலாது என்று சொல்கின்ற எதிர்மறையான வார்த்தையை முதலில் எடுத்து எறிந்து விட்டு இயலும் என்ற முயற்சியோடும், நம்பிக்கையோடும் ஆண்டவனை வேண்டிக் கொள்ளுங்கள் என்றார். அந்த ஆண்டவனே வந்து அவருக்கு வெற்றியைத் தரவில்லையா?

'துணிந்தவனுக்குச் சமுத்திரம் முழங்கால் அளவு' என்னும் பழமொழியைக் கைக்கொண்டு, துணிவுடன் இயலும் என்ற நம்பிக்கையை உள்ளத்தில் கொண்டதால் தானே குற்றாலீஸ்வரன் இளமைப்

பருவத்திலேயே உலகம் புகழும் வண்ணம் கடலில் எத்தனையோ கிலோமீட்டர் நீந்திச் சென்று வெற்றி வாகை சூடினான்.

வறுமைக் குடும்பத்திலே இருக்கின்ற தாய் கூட வறுமைத் துன்பத்தை அனுபவித்தாலும் என்பிள்ளைகளை வளர்க்க இயலவில்லையே என்று ஒருபோதும் கூற மாட்டாள்.

மகாபாரதத்தில் போர்க்களத்தில் அருச்சுனன் தனக்கு எதிரிலே போர் செய்வதற்காக நின்று கொண்டிருக்கும் கௌரவர்களை பகைவர்களாகக் கருதாமல் சொந்தக்காரர்களாக இருக்கிறார்களே என்று நினைத்ததால் அவனுடைய உள்ளத்தில் பாச உணர்வு பொங்கிப் பெருகியது. அப்போது அவன் கண்ணனைப் பார்த்து கண்ணா! பாச உணர்வு என் கண்ணை மறைக்கிறது. அதனால் என்னால் போரிட இயலாது எனக்கூறி மனங்கலங்கி நிற்கின்றான். கண்ணபெருமான் அவனைப் பார்த்து வீரர்கள் வாயிலிருந்து ஒருபோதும் இயலாது என்னும் வார்த்தை வருதல் கூடாது என்றும் போருக்கென்று வந்துவிட்டால் சொந்தபந்தம் பார்க்கக்கூடாது என்றும், கடமையிலிருந்து ஒருபோதும் தவறக்கூடா தென்றும் கூறி பலதத்துவங்களைச் சொல்லத் தொடங்கினார். அவர் அன்று சொல்லிய தத்துவம் தான், இன்று நம்மால் போற்றப்படும் பகவத்கிதை. அதிலிருக்கும் 18 அத்தியாயங்களுள் ஒன்றான கர்மயோகத்தைச் செய்ய விழைபவன் இயலாமை என்பதைக் கைக்கொள்வானேயானால் ஒருபோதும் வெற்றி பெறான். எனவே இயலாமை இல்லாமல் போகட்டும் எல்லாச் செயல்களிலும் இயலும் என்னும் தன்மை பரவட்டும்.

உ

சிவமயம்

# நாட்டரசன் கோட்டை அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் களியாட்டத் திருநாளில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள்

1. சித்திரை மாதம் 5 ஆம் தேதி முதல் 22 நாட்களிலும் சைவ உணவே மேற்கொள்வது.
2. மேற்கண்ட 22 நாட்களிலும் எண்ணெய், நெய், பச்சரிசிப் பலகாரங்கள் செய்வதில்லை.
3. எல்லாரும் சுத்தமாக இருக்க வேண்டும்.
4. பயறுவகைகள் வறுக்கக் கூடாது.
5. நெல் அவித்தல் கூடாது.
6. மாவு இடித்தல் கூடாது.
7. மாமிசம் உபயோகிக்கக் கூடாது.
8. வீட்டுக்கு விலக்கானவர்கட்குச் சாப்பாடு பரிமாறக் கூடாது. தனியே எடுத்துக் கொடுத்துவிட வேண்டும்.
9. தேரோடும் வீதியில் வீட்டுக்கு விலக்கானவர்கள் நடமாடக் கூடாது.
10. சடங்கு, பிள்ளை பிறந்த வீடுகட்குப் போகக் கூடாது.
11. மேற்படி சடங்குகளைக் களியாட்டம் முடிந்த மேல் தான் செய்ய வேண்டும்.
12. துஷ்டிகளுக்குப் போகக் கூடாது.

மேற்கண்ட விதிமுறைகளை நாட்டரசன் கோட்டை நகரத்தார்கள்
வெளியூரில் இருந்தாலும் பின்பற்ற வேண்டும்.

# களியாட்டத் திருநாள் நடைமுறை நிகழ்ச்சிகள் - ஒரு சிறு குறிப்பு

களியாட்டம் எனும் 'கவின்மிகு திருவிழா' அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மனுக்கு மிகவும் பிடித்தமான திருவிழா ஆகும். முத்துக்குட்டிப் புலவர் எழுதிய கண்ணுடையம்மன் பள்ளில், ''செல்லத் துரைச்சி கண்ணாத்தாளுக்குத் தேட்டமெல்லாம் களியாட்டமடி'' என்கிறார். இக்களியாட்டம் பன்னிரு ஆண்டுகட்கு ஒருமுறை நிகழ்வது நியதி. இதனையும் முத்துக்குட்டிப் புலவர் மேற்படி பள்ளுநூலில், ''நிரைத்து வரும் விப வருஷம் நிறைந்த களியாட்டத்திற்கு விருதுரைக்கும் பதின்மூன்றாம் விக்கிரம வருடமதில்'' என்று 12 ஆண்டு இடைவெளியையும் ''வருஷ முதல் திங்களென வந்த சித்திரை மாதம் திருவளர் ஏழாம் தேதி சேரும் முதல் செவ்வாயில்'' என்று சித்திரை மாதம் முதல் செவ்வாயில் தொடங்கி, ''இனியதொரு சுபதினத்தில் இருபத்திரண்டாம் நாள் நறுமணங்கள் கமகமென நாலாம் செவ்வாய்தனில்'' என்று இத்திருவிழா 22 நாட்கள் நடைபெறும் விவரத்தையும் கூறுகிறார். திருக்கோயில்களில் நடக்கும் திருக்குட நன்னீராட்டு, கும்பகோணம் மகாமகம் போலக் களியாட்டம் 12 ஆண்டுகட்கு ஒருமுறை நடைபெற்று வந்திருக்கிறது. 1908இல் சிவகங்கை மன்னரும், 1920 இல் சோழபுரம் சுப.க.அ. அண்ணாமலை செட்டியாரும் நடத்திய களியாட்டங்கள் 12 ஆண்டு இடைவெளியைப் புலப்படுத்துகிறது. பிறகு காலப்போக்கில் அங்ஙனம் நடைபெறாமல் 34 ஆண்டுகள் கழித்து 1954இல் நாட்டரசன் கோட்டை கம்பர் ஆவி. அரு. இராமநாதன் செட்டியார் களியாட்டம் கூட்டி இருக்கிறார்கள். 41 ஆண்டுகள் கழித்து நீண்ட இடைவெளிக்குப் பின்னர் இப்பொழுது நாட்டரசன் கோட்டை நகரத்தார் 1995இல் இக்களியாட்டத் திருநாளைக் கூட்டி இருக்கிறார்கள். 18.4.95 சித்திரை முதல் செவ்வாய் முதலாக 9.5.95 சித்திரை நாலாம் செவ்வாய் ஈறாக 22 நாட்கள் இக்களியாட்ட விழாவினைச் சிறப்புறக் கொண்டாடி இருக்கிறார்கள். அவ்விழா நடைமுறை நிகழ்ச்சிகளின் ஒரு சிறுகுறிப்பே இக்கட்டுரை.

நாட்டரசன் கோட்டைப் பழைய வளவில் களியாட்டக் கண்ணாத்தாள் தெருவில் களியாட்ட வீடுகள் இரண்டு உள்ளன. அவை கள்ள வீட்டுக் களியாட்ட வீடு. கணக்க வீட்டுக் களியாட்ட வீடு எனப்பெயர் பெறும். காரணக்காரர்களாகிய கள்ளரையும், கணக்கரையும் கொண்டு, நகரத்தார் இவ்விழாவை நடத்துகின்றனர். கள்ளரில் ஐந்து பிரிவினர் இருப்பதால் அவர்கள் ஐந்து காரணக்காரர்கள் எனப் பெறுவர். இவர்களது களியாட்ட வீடு 'பெண்வீடு' என்றும்; கணக்கரது களியாட்ட வீடு 'மாப்பிள்ளை வீடு' என்றும் செல்லப் பெயரிட்டு அழைக்கப் பெறுகின்றன. களியாட்ட வீடுகள் இரண்டும் அஸ்திவாரம் சுட்ட செங்கல்லாலும், அதன் மேல் பச்சைச் செங்கல்லாலும், அதற்கப்பால் இருவரிசை சுட்ட செங்கல்லாலும் புதிதாகக் கட்டப்பெற்றுக் கைமரம் போட்டு ஓடுகள் போடப்பெற்றவை. அதன் உட்புறம் அம்மனும், இருபுறம் பூசாரிகளும், விநாயகர், வீரபத்திரர், பைரவர் ஆகிய பரிவார மூர்த்திகளும், மதுக்காரியும், அடுத்துத் தூவாரசக்திகள் இருபுறமும் நான்கு சுவர்களிலும் வரையப் பெற்றும், வெளிப்பக்கம் முகப்பின் இருபுறமும் பூதங்கள் இரண்டும் வரையப்பெற்றும் இருக்கும்.

ஒவ்வொரு முறையும் களியாட்டம் கூட்டும் போது, களியாட்ட வீடுகள் தரைமட்டம் செய்யப் பெற்றுப் புதிதாக மேற்கூறியபடி களியாட்ட வீடுகள் கட்டிச் சித்திரங்களும் புதிதாக வரையப் பெறும். தச்சு செய்தல், நிலை வைத்தல், கை மரம் போடுதல், ஓடுபோடுதல், உருஎழுதுதல் என்று ஒவ்வொரு நிகழ்ச்சியும் சித்திரை முதல் செவ்வாய்க்கு முன் அதாவது களியாட்டவிழாத் தொடங்கும் முன்னரே, நல்லநாள் பார்த்து நடைபெறும்.

சித்திரைத் திங்கள் முதல் செவ்வாயன்று காலையில் கண் திறக்கும் நிகழ்ச்சி கோலாகலமாகச் செய்யப் பெறும். இது முதலாக இத்திருநாள் தொடங்கி 22 நாட்கள் தொடர்ந்து நடைபெறுகிறது. இன்று முதல் அம்மனுக்கு விஷேஷ அபிஷேக ஆராதனைகள், காலசந்தி, மற்றும் சாயரட்சை பூசை சிறப்புற நடைபெறும். முதல் நாள் கோயிலில் காலசந்தியை முடித்துக் கொண்டு நகரத்தார் மற்றும்

எல்லாரும் களியாட்ட வீடுகளில் வைப்பதற்காக இருகரகக் குடங்களைப் பூசாரிகளைச் சுமந்து வரச் செய்து களியாட்ட வீடுகளில் வைக்கிறார்கள். 22 நாட்களும் இரவில் முளைக்கொட்டிப் பாட்டுக்களைப் பாடி வழிபடுகிறார்கள். நகரத்தார் முதலில் கள்ளவீட்டுக் களியாட்ட வீட்டில் முளைக்கொட்டும் ஐந்து காரணக்காரர்கட்கு வெற்றிலை, பாக்கு, சந்தனம், பூ முதலியன கொடுத்து முளைக் கொட்டச் செய்கிறார்கள். இங்கு முளைக்கொட்டி முடிந்ததும், கணக்க் வீட்டுக் களியாட்ட வீட்டிற்கு நகரத்தார் சென்று மேற்கூறியன கொடுத்து அவர்களையும் முளைக்கொட்டச் செய்கிறார்கள். காலை மாலை பூசைகளின் போது நாயன்மார் குளத்தில் இருக்கும் பலி பீடத்திற்கும் பூசை நடத்தப் பெறுகின்றது.

நாட்டரசன் கோட்டை நகரத்தார் யாவரும் புள்ளி வரி கொடுத்தும் நன்கொடைகள் வழங்கியும் இத்திருவிழா நடத்தப் பெறுகின்றது. நாட்டரசன் கோட்டையில் பிறந்து வேற்று ஊர்களில் திருமணமாகிய நகரத்தார் பெண்மக்கள் விரும்பிக் கொடுக்கும் நன்கொடைகள் தாராளமாக ஏற்றுக் கொள்ளப் பெறுகின்றன. அயலூர் நகரத்தார்களிடம் பணம் கேட்பதில்லை. அவர்களாக விரும்பிக் கொடுத்தால் அந்நன்கொடைகள் ஏற்றுக்கொள்ளப் பெறுகின்றன.

கள்ளர்கள் ஆகிய ஐந்து காரணக்காரர், கணக்கர், பூசாரிகள், சலவையாளர்கள், சேரி மக்கள் மற்றும் ஏனையப் பணியாளர்களுக்கு முந்திய முறைப்படி 'படி' கொடுக்கப் பெறுகின்றது. கள்ளவீடு, கணக்க வீட்டுக் காரர்களைச் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் மாலைவேளைகளில் எண்ணெய்க் குளியல் செய்யச் செங்கமலத்தான் ஊருணிக்கு மேளதாளத்தோடு அழைத்துச் செல்வது வழக்கம். அக்கிழமைகளில் அவர்கட்குக் குறித்த அளவு புலால் வழங்கப் பெறுகின்றது. தொடக்க நாளாகிய முதற் செவ்வாயில் காரணக்காரர் குளித்து வந்த பிறகு அன்னை ஆலயத்தில் பதினொரு கடகத்தில் நெல் அளந்து, கோவில் மேல் மாடத்தில் விரித்து வைக்கிறார்கள். நாலாம் நாளாகிய வெள்ளியன்று மேல்தளத்தில் காய்ந்த நெல்லை அள்ளி வந்து 16 கோட்டைகளாகக் கட்டித் தெப்பக் குளத்தில் ஊற வைக்கிறார்கள். 8 ஆம் நாளாகிய இரண்டாம் செவ்வாயன்று ஊறிய அக்கோட்டை விதைகள். கோவிலுக்குள் நாச்சியார் மண்டபத்தில் (அலங்கார மண்டபத்திற்கும் வீரபத்திரர் சந்நிதிக்கும் இடையில்) தென்னங் கிடுகு மறைவினுள் மணல் புங்கக் குழை பரப்பியிருப்பதின் மீது காரணக்காரர் பெண்களால் தூவப் பெறும். விதைகள் முளைப்பதற்குத் தினமும் தண்ணீர் தெளிக்கப் பெறும்.

15ஆம் நாள் கரகப் பொருள் மாற்றிப் புதிதாக வைக்கப் பெறும். முளைத்தநெல் முளை கோவிலின் மேல்தளத்தில் காயப்போடப்படும். அந்த நெல்முளைகளை 18ஆம் நாள் கடகங்களில் அள்ளிக் களியாட்ட வீட்டிற்குக் கொண்டு செல்வார்கள். 19ஆம் நாள் திரை மறைவிற்குள் முளை நெல்லை இடித்து, இடித்த மாவைக் களியாட்ட வீட்டிற்குள் வைப்பார்கள். 20ஆம் நாள் பச்சை நெல் குத்தி அரிசி எடுக்கப் பெறும்.

21ஆம் நாள் விநாயகப் பானையுடன் சேர்த்து 16 பானைகளில் அரிசி களைந்த கழுநீர், மற்றும் முறை நெல்லை இடித்துச் சலித்த மாவைக் கரைத்த மதுவை ஊற்றிப் பொங்கல் வைப்பார்கள். இடித்த மாவில் அலையா மதுவிற்கெனக் கொஞ்சம் ஒதுக்கி வைக்கப் பெறும். பால் பொங்கியதும் அரிசி இடப்படுகிறது. தீப தரிசனம் செய்து சாப்பிடச் செல்கிறார்கள். திரும்ப மாலை 3 மணிக்கு வந்து மேற்படி பானைகளை வடித்து அந்த நீரில் தேன், பொடி செய்த சுக்கு, ஏலம், கிராம்பு ஆகியன கலந்து வடிகட்டி வைக்கிறார்கள்.

**களியாட்ட மலர் :**

22ஆம் நாள் எண்ணெய்க் குளியலுக்குப் பிறகு கலந்த மதுவை முதல் மதுக்குடமாகிய வெள்ளிக்குடத்திலும் மண்பானை மதுக்குடங்களிலும் ஊற்றித் தென்னம்பாளைகளை உள்ளிட்டு மலர்மாலைகளால் அலங்காரம் செய்கிறார்கள். களியாட்ட வீடுகளில் பலி கொடுக்கப்படுகிறது. மதுக்குடங்கள் புறப்படுகின்றன. பலி பீடத்திற்கு மதுக்குடங்கள் வந்ததும் தென்னந்தட்டி மறைப்பில் வெள்ளை ஆற்று மணல் பரப்பி அதன் மீது விரித்திருந்த வெள்ளைத் துகிலின் மீது, ஆட்டின் தலையை வெள்ளைப் பிடி கயிற்றால் கட்டி ஒருவர் முன்னே இழுத்துக் கொள்ள, பின்னங்கால்களை அம்மாதிரிக்

கயிற்றால் கட்டி ஒருவர் பின்னே இழுத்துக் கொள்ள, அவ்வாடு ஒரே நேர்கோடு போல அமைய, பலியீட்டில் வல்ல பூசாரி ஒரே வெட்டாகக் கழுத்தில் வெட்டத் துளியத்தனை இரத்தமும் துகில் மாத்தில் சிந்தாமல் தலை, உடல் ஆகிய இருபகுதிகளையும் மாத்திற்கு அப்பால் இழுத்து அப்புறப்ப டுத்தி விட வேண்டும் என்பது நியதி. சென்ற களியாட்டத்தைப் போல, இக்களியாட்டத்திலும் அம்மன் திருப்தி அடைந்துவிட்டதால், ஒரே பலியீட்டில் இரத்தம் மாத்தில் சிந்திவிட்டது. இப்பலியீடு முடிந்த தும் மதுக்குடங்கள் பலிபீடத்தை விட்டுப் புறப்படுகின்றன.

ஆறுவீதி நகரத்தார் அவரவர்க்கு அமைக்கப் பெற்றிருந்த முளைத்திண்ணைகளில், தம்வீதியைச் சார்ந்த நகரத்தார் பெண்டிர், உற்றார் உறவினர்களோடு மதுக்குடங்களின் வருகையை எதிர்பார்த்திருக் கின்றனர். அவ்வம்முனைத் திண்ணைகளில் ஏற்கனவே நகரத்தார் தேர்ந்தெடுத்திருந்த வயது முதிர்ந்த தம்பதியர் மதுக்குடங்களை வரவேற்க, அம்முதியவரின் துணைவியார் மதுக்குடங்கள் தூக்கிவரும் மங்கையர் அனைவர்க்கும் மஞ்சணை பூசுகிறார். முளைத்திண்ணைகள் ஒவ்வொன்றிலும் பலியிடப் பெற்று, தேங்காய்பழ அர்ச்சனை அம்முதிய தம்பதியர்க்குச் செய்து கொடுக்கப் பெறுகின்றது. இதே போல் பூதகுடி வளைவு முளைத்திண்ணைக்குப் பக்கத்தில், களியாட்ட வேண்டுதல் பிரார்த்னை உடைய பூதகுடி வளைவைச் சார்ந்த ஆவி.கண.செ.அ. செல்லப்ப செட்டியாரும் அவர் துணைவியா ரும், தங்கட்கென அமைக்கப் பெற்றிருந்த முளைத்திண்ணையில், ஆறுவீதி நகரத்தார் முளைத் திண்ணை நிகழ்ச்சிகள் போல் நிகழத் தாமும் அன்னையின் அருளைப் பெறுகின்றனர். இச்சுமங்கலியர் எழுவரும் 'கழுத்துரு' என்னும் நகரத்தார் சமூகப் பெரியதாலி அணிந்து வந்து இருந்தனர். கொல்லங் குடி அம்பலகாரச் செட்டியார் குடும்பத்தினர் தேரோடும் வடக்கு வீதியில் தெப்பக்குளத்திற்கு அதா வது சன்னிதிக்கு எதிரே பலியீடு செய்கிறார்கள். மற்ற பிரிவு மக்களும் அவரவர்க்கு உரிய இடங்களில் பலி கொடுக்கிறார்கள்.

23ஆம் நாள் காலை மதுக்குடங்கள் ஆலயத்திற்கு வந்து சேர்கின்றன. சூலாட்டுப் பூசை கொடுக்கப் பெறுகின்றது. அப்பொழுது காரணக்காரர் தம்பதியர் மட்டும் உள்ளே இருக்க அனுமதிக்கப் பெறுவர். பின்னர் பெரிய படையலுக்குப் பிறகு மதுக்குடங்களை எடுத்துக் கொண்டு காரணக்காரர் களியாட்ட வீடுகட்குச் செல்கின்றனர்.

24ஆம் நாள் முதல் 29ஆம் நாள் வரை பூசாரி மட்டும் மேளதாளத்தோடு களியாட்ட வீடுகட்கும், பலிபீடத்திற்கும் பூசை வைக்கச் செல்கிறார். 29ஆம் நாள் மாலை செங்கமலத்தான் ஊருணியில், எண்ணெய்க் குளியலுக்குப் பிறகு ஐந்து காரணக்காரர்களைச் சேர்ந்த கள்ளர்களின் ருது ஆகாத சின்னஞ் சிறு பெண்கள் 'அலையா மது' எடுத்து வருவர். முன் கூறியது போல மதுக்குடங்கள் அலங்காரம் செய்யப்பெறும். களியாட்ட வீடு, ஊர்காவலன் கோவில், கருப்பணசாமி கோவில், பலிபீடம் ஆகிய இடங்களில் பலிகள் கொடுக்கப் பெறும். 'அலையா மது' அம்மன் ஆலயம் வந்து சேர, அம்மன் சந்நிதியிலும் வைரவர் சந்நிதியிலும் பலிகள் இடப்பெறும்.

கரகக் குடங்களையும் முன்னர்க் களியாட்ட வீடுகளில் மணலில் தெளிந்திருந்த தட்டைப்பயறு, மொச்சைப் பயறு, பாசிப் பயறு, உழுந்தம் பயறு ஆகிய முளைகளையும் களியாட்ட வீடுகளிலிருந்து இரு பூசாரிகள் மேளதாளத்தோடு எடுத்துக் கொண்டு வந்து அன்னையின் திருக்குளத்தில் சேர்ப்பிக்கி றார்கள். பின்னர் மேற்படி இரு பூசாரிகளும் ஆலய வழிபாட்டிற்கு பிறகு தாங்களாகக் களியாட்ட வீடு செல்கிறார்கள்.

இதுகாறும் கூறிய கருத்துக்கள் அன்னை களியாட்ட நிகழ்ச்சிகளை அறிந்து கொள்ள பெரிதும் துணைபயக்கும். அன்னை திருவருளால் அனைவரும் பேரின்பப் பெருவாழ்வு பெற்று உய்வோமாக.

சிவத்திரு. குப. சொக்கலிங்கம், நாட்டரசன் கோட்டை

நன்றி : களியாட்ட மலர்

உ
சிவமயம்

# அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் தங்க அங்கி வரலாறு

வெ.க.சு.ந.சுப. குமரப்ப செட்டியார்
நாட்டரசன்கோட்டை.

சிவகெங்கை சமஸ்தானம் தேவஸ்தானத்தைச் சேர்ந்த நாட்டரசன் கோட்டை என்ற தென்பனசைப் பதியில் அருளாட்சி செய்யும் அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மனுக்கு உள்ளூர் நகரத்தார் பலவித மான தங்க நகைகள் உபயமாகச் செய்து வைத்திருக்கும் செய்தி சிவகெங்கை சமஸ்தான வித்வான் முத்துக்குட்டிப் புலவர் பாடிய ''கண்ணுடையம்மன் பள்ளு'' என்னும் நூலில் பல இடங்களில் காணக் கிடக்கிறது. உள்ளூர் நகரத்தார் அம்மனிடத்தில் அதிக ஈடுபாடு உடையவர்கள் என்பதை இதே பள்ளு பல இடங்களில் எடுத்துக் கூறுகிறது.

இத்திருக்கோயிலில் ஆரம்பத்தில் மூலஸ்தானம், அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகியவைகள் அரச பரம்பரையினரால் கட்டப்பட்டிருந்தன. அதையடுத்து நாட்டரசன்கோட்டை நகரத்தார் அம்ம னுக்கு அலங்கார மண்டபம், அபூர்வ சிற்ப வேலைப்பாடுடன் கூடிய வெகு உயரமான இராஜகோபுரம் ஆகியவற்றை அமைத்தார்கள். இராஜகோபுரத்தை அடுத்து சொக்காட்டாஞ்சாரி என்ற கர்ணக்கால் மண்டபம் அபூர்வ வேலைப்பாடுகளுடனும் பொறியியல் நுணுக்கத்துடனும் நகரத்தார்களால் எழுப் பப் பெற்றது.

அம்மன் கோயிலிற்கு முன்னுள்ள தேவி திருக்குளத்தை வெ.க.சு. குடும்பத்தார் வெட்டச் செய்து கட்டினார்கள். நகரத்தார்கள் அம்மனுக்கு மர வாகனங்களையும், வெள்ளிக்கேடயம், வெள்ளிக்கு திரை, வெள்ளிரதம் ஆகியவற்றையும் செய்து வைத்துள்ளனர். மூலஸ்தான அம்மனுக்கு வெள்ளி அங்கி, பரிவார தேவதைகளுக்கு வெள்ளி அங்கி, வைகாசித் திருவிழாத் திருத்தேர் ஆகியவற்றையும் நகரத்தார்கள் செய்து வைத்துள்ளனர்.

கல்லல் ஆ.மு. குடும்பத்தார் அம்மனுக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரை வெள்ளி அங்கி செய்து தங்கத்தில் கழுத்துரு செய்து வைத்திருக்கிறார்கள். உள்ளூரில் குப.அ.க. கரு. மக்கள் இராமநாதன் செட்டியார், சண்முகநாதன் செட்டியார் ஆகியோர் தங்கக்கிரீடம் (விரிசடை) செய்து வைத்திருக்கிறார் கள். இதுபோல் பலரும் செய்து வைத்த தங்க, வைர நகைகள் இன்றளவும் உபயோகத்தில் இருந்து வருகின்றன.

தேவஸ்தானம் நாள் வழிபாடு, கோயிற் பணியாளர் நிர்வாகம், கோவில் காவல் முதலியவற்றைச் செவ்வனே நடத்தி வருகிறது. பொதுவாகச் சொல்லப்போனால் தேவஸ்தானமும், நகரத்தாரும் ஒரு குடும்பத்தார் போல நெருங்கிப் பழகி அம்மன் தொண்டினைச் சிறப்பாக நடத்தி வருகிறார்கள்.

அம்மனுக்கு தங்க அங்கி செய்ய வேண்டும் என்று நாட்டரசன் கோட்டை நகரத்தார் சிலருக்கு நெடு நாளைய விருப்பமாக இருந்து வந்தது. நாட்டரசன் கோட்டையைச் சுற்றி உள்ள அயலூர் நகரத்தார்க ளும் தங்க அங்கியில் கருத்துச் செலுத்தினார்கள்.

நாட்டரசன்கோட்டை அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் கோவிலில் கௌரவ கண்காணிப் பாளராக இருந்த காலஞ்சென்ற மதிப்பிற்குரிய முத்து.க.ஆவி.சித. ஆவிச்சி செட்டியார் அவர்கள் அம்மனுக்குத் தங்க அங்கி செய்யத் தேவஸ்தானத்திற்கு மனுக்கொடுத்தார்கள். அதற்கு மறுமொழி யாக, 17.7.1967ல், மொத்தத்தில் 100 தோலா சுத்தத்தங்கம் அங்கி செய்ய வேண்டியிருக்குமென்றும், தங்கள் கைவசம் 35 தோலா இருப்பதாகவும், சொல்லிப் பாக்கி 65 தோலா சுத்தத் தங்கம் நகரத்தார்கள் மூலம் சேகரிக்கக் கூடிய வாய்ப்பு இருக்குமா என்றும் தேவஸ்தானம் கேட்டார்கள்.

தங்க அங்கி செய்வதற்கு சென்னை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் உத்தரவு எண் 69289/72 நாள் 30.12.1972ன்படி தங்கம் 10,971 கிராம்கள் அனுமதிக்கப்பட்டது. பின் முத்து.க.ஆவி. சித.ஆவிச்சி செட்டியார் அவர்கள் செய்தித் தாள்கள், துண்டு வெளியீடுகள் மூலமும், நேரிலும் தங்க அங்கி செய்யத் தங்களால் இயன்ற தங்க நன்கொடை தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். அவர் நகரத்தார் பெருமக்கள் பலரை நேரிற் பார்த்துத் தங்க அங்கிக்கு முகூர்த்தம் செய்ய வரவேண்டும் என்று அழைத்தார்கள். 10.3.1968ல் சென்னை Official Trusty அவர்கள் முன்னிலையில் ஞாயிற்றுக்கி ழமை காலை 10.30 மணி அளவில் முகூர்த்தம் நடைபெற்றது. அம்மன் திருமுன்னர் நகரத்தாரும், பொதுமக்கள் சுமார் 70 பேர்களும் கலந்து கொண்டார்கள். 837.500 கிராம் எடையுள்ள பலமாத்துள்ள தங்க நகைகளை அங்கி வேலை செய்வதற்கு அந்த இடத்திலேயே அன்புக் காணிக்கையாகக் கொடுத் தார்கள். அன்று தினமே தேவஸ்தான மேலாளர் திரு. ஜெயராம் அய்யர் அவர்கள் முன்னிலையில் நாட்டரசன்கோட்டை நகரத்தார் பெருமக்கள் கொண்ட தங்கஅங்கிக் குழு அமைக்கப்பட்டது.

இந்தக் குழு HRECE Order No. D.Ds. 21861/70 நாள் 31.12.70ல் அங்கீகரிக்கப்பட்டது. இந்தக் குழு உறுப்பினர்கள் தங்கம் சேகரிப்பதற்குத் தெற்கு வட்டகையில் உள்ள ஒரு சில ஊர்களுக்குச் சென்று அந்த ஊரில் உள்ள நகரத்தார் பெருமக்களைச் சந்தித்துக் கணிசமான தங்கம் சேகரித்தார்கள். இப்படியா கச் சேர்ந்த தங்க நகைகளும், தேவஸ்தானம் தந்த தங்க நகைகளும் மதுரையில் உள்ள நகை சரிபார்க்கும் அதிகாரி (இந்துசமய அறநிலையத்துறை) தேவஸ்தான மேலாளர், ஆகியோர் முன்னிலையில், நாட்டர சன் கோட்டைக் கோயில் விடுதியில் வைத்துச் சுத்திகரிக்கப்பட்டன. இதிற் கிடைத்த சுத்தத் தங்கத்து டன் 100க்கு 8 என்ற விகிதத்தில் செம்பு சேர்த்துத் தகடு அடிக்கப்பெற்றது. தேவஸ்தானத்தால் அங்கிகரிக் கப்பட்ட தேவகோட்டை கணபதி சுப்பு ஸ்தபதியால் நகரத்தார் பிரதிநிதி கரு.சிவ.க. சுப்பிரமணியன் செட்டியார் கண்காணிப்பில் 30.8.1974ல் வேலை ஆரம்பமாகியது.

மத்திய அரசிலிருந்து முறையான அனுமதி பெறப்படவில்லை என்று காரணம் காட்டி எண் 14/9/76 நாள் 5.8.76 என்ற தங்கக் கட்டுப்பாட்டு அதிகாரியின் உத்தரவு வந்தது. அந்தக் கடிதப்படி தங்க அங்கி வேலை நிறுத்தப்பட்டது. அந்த நாள் வரை செய்யப்பெற்றிருந்த விரிசடை, அஸ்தங்கள், வெட்டுத்தங் கம் முதலியவைகள் கோவில் கருவூலத்தில் வைத்துப் பூட்டப்பட்டு தேவஸ்தானமும் நகரத்தாரும், ஆளுக்கொரு சாவியாக வைத்திருந்தார்கள்.

1.5.89ல் அன்று அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மனுக்கு நடைபெற்ற திருக்குட நன்னீராட்டுக் குப் பின் நகரக்கூட்டம் நடந்தது. அதில் தங்கக் கட்டுப்பாடு எடுபட்டுள்ளது. அதனால் தங்க அங்கி வேலையைத் தொடர்ந்து நடத்துவதென்று தீர்மானிக்கப்பட்டது. தங்க அங்கிக் குழுத் தலைவராக இருந்த ஆவிச்சி செட்டியாரும், உறுப்பினர்கள் பலரும் காலமாகிப் போய்விட்டார்கள். ஆகையால் அந்தக் கூட்டத்தில் 18 பேர் அடங்கிய மற்றொரு குழு நியமிக்கப்பட்டது.

1968ல் தங்கம் தருவதாக எழுதிக் கொடுத்து வரவேண்டிய தங்கம் கிடைக்கும் வாய்ப்புக் குறைவாக

இருந்தது. அதனால் சிவகங்கை சமஸ்தானம், தேவஸ்தானம் இளைய பரம்பரை அறங்காவலர் அவர்களின் காப்பாளர் மேதகு இராஜகுமாரி ராஜலெட்சுமி ரெகுராஜ் அவர்களிடம் 19.2.90ல் தங்க அங்கிக் குழுவினர் தங்கம் பற்றாக்குறையாக இருப்பதைப் பற்றிச் சொன்னார்கள். இராஜகுமாரி ரெகுராஜ் அவர்கள் அருள்கூர்ந்து அருள்மிகு கண்ணுடைய நாயகி அம்மன் கோவிலில் இருக்கும் பழுதான, உபயோகத்தில் இல்லாத நகைகளையும் உண்டியலில் வந்த தங்கத்தையும் கொடுத்து உதவ முன்வந்தார்கள். நகத்தாரும் மேலே கண்ட அங்கியில் திருமார்பு, வஜ்ஜிரக்கட்டு, வலதுகால் இவைகள் செய்வதற்கு ஆகும் கூலி, சேதாரத்தை நகரத்தார் கொடுப்பதாக மனுச்செய்து கொண்டார்கள். இராஜகுமாரி அவர்களும் பெருந்தன்மையுடன் இசைவு தெரிவித்து, உடனே உடன் இருந்த தேவஸ்தான மேலாளர் திரு. இரத்னாகரனுக்கு அங்கி வேலைக்குத் தேவையான தங்கத்தைக் கொடுத்து உதவும்படி ஆணையிட்டார்கள். இராஜகுமாரி ரெகுராஜ் அவர்கள் அருள்மிகு கண்ணுடையம்மன் பால் கொண்டுள்ள பேரன்புதான் இதற்குக் காரணம். அவர்களுக்கு எல்லா நலன்களும் கிடைக்க அருள்புரிய அம்பாளை வேண்டுகிறோம்.

ஏற்கனவே செய்த மாற்றுக்குறைவாக உள்ள விரிசடை, வெட்டுத் தங்கம் ஆகியவற்றையும் தேவஸ்தானம் மேற்கண்ட விபரப்படி புதிதாகத் தந்த பலமாற்றுத் தங்கத்தையும் சேர்த்து மொத்தம் கிராம் 3522.600 கிடைத்தது. சென்னைக்குத் தலைவர் ஆறுமுகம் செட்டியார் அவர்களும், தேவஸ்தானம் மேலாளர் திரு. இரத்னாகரன் அவர்களும், திரு. முத்துசுவாமி அவர்களும், அ.சுப.கண. அண்ணாமலை செட்டியார் அவர்களும் சென்று அரசாங்கத் தங்கசாலையில் நம்முடைய பலமாற்றுத் தங்க நகை உருப்படிகளை உருக்கி சுத்தம் செய்தார்கள். அதிற்கிடைத்த தங்கம் 3086.600 கிராம் ஆகும். அதைத் தகடுகளாக அடித்தார்கள். காரைக்குடியில் தற்சமயம் அங்கி நகாஸ் வேலையில் நம் வட்டாரத்தில் கைதேர்ந்த வேலைக்காரராக விளங்கும் வீ. நாச்சியப்ப ஆசாரியை நாட்டரசன்கோட்டைக்கு வரவழைத்து கண்ணுடைய நாயகி அம்மன் கோவில் உள்பிரகாரம் மேல்புறத்தில் வேலை செய்வதற்குத் தோதான இடம் அமைத்துக் கொடுத்து 18.11.91ல் அங்கி வேலையைத் தொடங்கினார்கள். இந்த வேலையும் அ.சுப.கண. அண்ணாமலை செட்டியார் மேற்பார்வையில் நடந்தது.

ஏற்கனவே நகரத்தார்களால் கணபதிசுப்பு ஸ்தபதியை கொண்டு அறைகுறையாய்ச் செய்து வைத்திருந்த மாற்றுக் குறைவான விரிசடையை அழித்துத் திருமார்பு, வஸ்திரக்கட்டு செய்யும் தங்கத்தோடு சேர்த்து கொள்வது என்று முடிவு செய்யப்பெற்றது.

குப.அ.க.கரு. மக்கள் இராமநாதன் செட்டியார், சண்முகநாதன் செட்டியார் ஆகியோரால் 1930ல் உபயமாகத் தரப்பட்டதும், இப்போது ஷி இராமநாதன் செட்டியார் பெயரன் இராமநாதன், சண்முகநாதன் செட்டியார் மக்கள் இராமநாதன் நாராயணன் லெட்சுமணன் ஆகியோரால் புதுப்பிக்கப்பட்டதுமான விரிசடையினை இப்பொழுது புதிதாகச் செய்துள்ள அங்கியுடன் அம்மனுக்குச் சாத்துவது என்று தீர்மானிக்கப் பெற்றது. சென்னையில் இருந்து வந்த நகை சரிபார்க்கும் அதிகாரிகளால் இது பரிசீலிக்கப்பட்டு இதனைச் சாத்துவதற்கு அனுமதி வழங்கப்பட்டது.

இந்த 7 உருப்படிகள் போக இன்னும் சண்டாசுர வதத்துடன் கூடிய இடதுகால் பாக்கி இருந்தது. இது 4 அடி நீளம் 2 1/2 உயர பீடத்தில் அமைக்கப்பட்டது. இதை சுத்தத் தங்கத்தில் செய்ய இன்னும் சுமார் 3500 கிராம் தங்கம் தேவைப்பட்டது. இனிமேல் சுத்தத் தங்கம் சேகரிப்பதற்குக் காலதாமதம் ஆகும். கிடைப்பதும் அரிது. இவைகளை உத்தேசித்து சண்டாசுர பீடத்தை 9.5 கிலோ செம்பில் செய்து நகரத்தார் அன்புக்காணிக்கையாகக் கொடுத்த 300 கிராம் பசும்பொன்னில் 8 கோட்டிங் ரேக் ஒட்டுகிறது என்று முடிவு செய்யப்பட்டது. காரைக்குடி வீ. நாச்சியப்ப ஆசாரியால் அழகான நகாஸ் வேலைப்பாடு

களுடன் கூடிய செம்புப்பீடம், தங்க முலாம் போடத் தயாரானது. அதை மதுரை கிருஷ்ண ஆசாரி, அவர் உதவியாளர்களுடன் அம்மன் கோயில் பிரகாரத்தில் வைத்து 6 நாள் வேலை செய்து பழைய் முறைப்படி எட்டுத்தடவை பசும்பொன் தங்கத் தகடு ஒட்டி மெருகேற்றிப் பல ஆண்டுகள் நன்றாக இருக்கும்படி அமைத்துள்ளார்.

முதலில் ஆவிச்சி செட்டியாருடன் உள்ளூரில் நகரத்தார் பெருமக்கள் கூடித் துவங்கிய முதல் குழு ஆர்வத்துடன் தங்கம் சேர்க்க நல்ல முயற்சி எடுத்துக் கொண்டது. இரண்டாவது குழுவின் தலைவர் ஜி. ஆறுமுகம் செட்டியார் அவர்கள் தகப்பனார் முதியவராய் இருந்தும் அங்கி வேலையில் ஈடுபாடு காட்டியதுபோல் மகனும் காட்டினார். அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டு சென்னை அறநிலையத் துறை அலுவலகத்திற்குப் பலமுறை சென்று வேண்டிய வேலைகளை முடித்து அங்கி வேலைகள் தடை இன்றி நடக்கச் சலியாது உழைத்தார்கள்.

சுப.குமரப்ப செட்டியாராகிய நான் 10.3.68ல் முகூர்த்தம் செய்த நாள் முதல் வேலை செய்ய ஆரம்பித்தவுடன், உள்ளூரிலும் அயலூரிலும் பல நகரத்தார் பெருமக்களிடம் தங்க ஆபரணங்கள் வசூல் செய்து உதவினேன். அதைச் சுத்தத் தங்கமாக மாற்றித் தகடு பிடித்து தங்க அங்கியின் 5 பாகங்கள் செய்தபின் அதைக்கோவில் கருவூலத்தில் பத்திரப்படுத்தி, அவ்வப்போது வரும் நகை சரிபார்க்கும் அதிகாரிகளுக்கு எடுத்துக்காட்டி அங்கி செய்து முடிக்கும் வரை அங்கியினைக் கடைசிவரை இருந்து முடிக்க எனக்கு அம்மன் அருள் செய்தாள்.

அ.சுப.கண. அண்ணாமலை செட்டியார் தங்க அங்கி வேலைகளுக்கு உருப்படிகளை சலியாது எடுத்துக் கொடுத்து அவ்வப்போது எடை சரிபார்த்து வாங்கினார்கள். காரைக்குடி நாச்சியப்ப ஆசாரியுடன் வேலைகளில் உடன் இருந்து மேற்பார்வை செய்தது அவர்களது பொறுமைக்குச் சான்றாகும்.

ஷெ கண. அண்ணாமலை செட்டியார் அவர்களுடைய பாட்டனார் வெ.க.சு.அ. சுப்பிரமணியன் செட்டியார் நாட்டரசன்கோட்டை அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் கோவிலுக்கு சிவகெங்கை தேவஸ்தானத்தாரால் 1930ல் கௌரவக் கண்காணிப்பாளராக நியமிக்கப்பட்டுச் சிறப்பாகப் பணியாற்றினார்கள். அம்மன் திரு முன்னர் உள்ள சொக்கட்டான் சாரி மண்டபம் முன்பு தொடங்கப் பெற்றது இவர்கள் காலத்தில் கட்டி முடிக்கப் பெற்றது. இந்த சுப்பிரமணியன் செட்டியாரின் தகப்பனார் அண்ணமாலை செட்டியார் சொக்கட்டான் சாரி மண்டபம் கட்டுவதற்கு மதுரையிலிருந்து கைதேர்ந்த ஸ்தபதிகளை வரவழைத்து வரைபடம் அமைத்து மண்டபத்துக்கு அடிகோலியது கருணைக்கால் மண்டபம் ஒயில் கும்மியில் காணப்படுகிறது. பரம்பரை பரம்பரையாக அம்மனுக்கு தொண்டு செய்த குடும்பத்தைச் சேர்ந்தவர் மேற்குறிப்பிடப் பெற்ற அண்ணாமலை செட்டியார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது.

இந்த அதிகவிலை மதிப்பிற்குரிய சித்திர வேலைப்பாடுடன் கூடிய தங்க அங்கி உருவத்திலும் அழகிலும் தோற்றத்திலும் பெரிதும் கவர்ச்சியுடையது. நகரத்தார் பெருமக்கள் செய்த திருப்பணிகள், வாகனங்கள், திருக்குட நன்னீராட்டுக்கள், நகைகள் ஆகிய திருப்பணிகளில் இந்த அங்கி சிகரம் வைத்தது போலாகும். இந்த அங்கியைச் சாத்தி அனைவரும் பெருமகிழ்ச்சி நிறைந்த உள்ளத்தோடு அம்மனை வழிபட்டு அவளுடைய அருளாசியினைப் பெற அவள் பொன்னார் திருவடிகளை வணங்குகின்றேன்.

*நன்றி : தங்க அங்கி மலர்*

நாட்டரசன்கோட்டை அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் தங்க அங்கி எடை, வரவு செலவு கணக்கு (கிராம் அளவில்) (நல.சுப.குமரப்ப செட்டியார் கொடுத்தது)

| | | |
|---|---|---|
| நகரத்தார் வரவு | 5338.100 | |
| பசும்பொன் ஆக்கியதில் குறைவு | 1719.950 | |
| | | 3618.150 |
| மூவஸ்தானம் வரவு | 4767.660 | |
| பசும்பொன் ஆக்கியதில் குறைவு | 1880.860 | |
| | | 2886.800 |
| | | 6504.950 |
| செம்பு சேர்த்தது | 278.2 | |
| நகரத்தார் தேவஸ்தானம் | 233.1 | |
| | 511.3. | 511.300 |
| | | 7016.250 |
| ஆசாரி சேதாரம் கொடுத்தது | | 163 |
| | | 6853.250 |
| கூலிக்குக் கொடுத்தது | | 11.400 |
| தங்க அங்கிக்கு உபயோகப்படுத்தப்பட்ட தங்கம் | | 6841.850 |

| உருப்படி | மொத்தம் எடை (1) | வெள்ளி.கல், முதலிய எடை (2) | நிகர தங்கம் எடை (1)-(2) |
|---|---|---|---|
| 1) திருமார்பு | 3277 | 762.050 | 2514.950 |

| | |
|---|---|
| வெள்ளி ஓரக்கரை (பீடிங்) | 369.000 |
| தொடை பிடிப்பு | 328.000 |
| (கிளாம்பு) | 37.200 |
| சடை ஆணி (ரிவிட்) | 13.800 |
| சிவப்பு கல் 2 | 6.850 |
| வெள்ளி ஆணி | 7.200 |
| | 762.050 |

| உருப்படி | மொத்தம் எடை (1) | வெள்ளி.கல், முதலிய எடை (2) | நிகர தங்கம் எடை (1)-(2) |
|---|---|---|---|
| 2) வலது கால் | 921 | 138.00 | 783.000 |
| 3) கபால அஸ்தம் | 385 | - | 385.000 |
| 4) சூல அஸ்தம் | 576 | - | 576.000 |
| 5) இடது அஸ்தம் | 1340 | - | 1340.000 |
| 6) வலது அஸ்தம் | 897 | - | 897.000 |
| 7) பீடம் பசும் பொன் தங்கம் | 280 | - | 280.000 |
| 8) நெற்றிப்பட்டை | 67.500 | 10.000 | 57.500 |
| 9) பல் 2க்கு | 8.400 | - | 8.400 |
| | | | 6841.850 |

**தனியார் உபயம்**

| உருப்படி | மொத்தம் எடை (1) | வெள்ளி.கல், முதலிய எடை (2) | நிகர தங்கம் எடை (1)-(2) |
|---|---|---|---|
| 10) ஏற்கனவே உள்ள கிரீடம் (விரிசடை) | 2203.000 | 1107.800 | 1095.200 |
| 11) கண்மலர் | 29.500 | 1.500 | 28.000 |
| | 9984.400 | 2019.350 | 7965.050 |

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற் புராண வளங்கள்

தொகுப்பு : நா.சே. நாராயணன், நாட்டரசன் கோட்டை.

''காத்தும், படைத்தும், கரந்தும், விளையாடி'' என்ற மாணிக்கவாசகப் பெருமானின் கூற்றிற்கு இணங்க முழுமுதற் கடவுளாகிய சோமசுந்தரப் பெருமான் செய்தருளிய செயற்கரும் செயல்களை 'விளையாட்டு' என்று கூறி வருவது பண்டைக்காலம் தொட்டு வழங்கி வரும் ஒரு மரபாகும். இதே கருத்தை உமாபதி சிவாசாரியரும் ''ஏற்ற இவை அரன் அருளின் திருவிளையாட்டாக இயம்புவார்கள்'' என்று கூறுகின்றார். எளிதிற் செய்தருளும் ஆற்றலுடைய இறைவன் செயலாதல் பற்றி இச்செயல்களை எல்லாம் 'திருவிளையாடல்' என்றே வழங்கப்பட்டு வருகின்றன.

இத்திருவிளையாடற் புராணத்தில் சோமசுந்தரப் பெருமானின் செயற்கரும் செயல்கள், வியத்தகு நிகழ்ச்சிகள், மதுரைப் பெருமானோடு தொடர்புடைய அரசர்கள், அடியார்கள், பறவைகள், விலங்குகள் உள்ளிட்ட அருட்செயல்களை உட்படுத்திப் பழம் கதையோடு புதுமெருகேற்றி இப்புராணத்தைப் பாடியுள்ளார் பரஞ்சோதி முனிவர். நூலின் முடிவில் அமைந்துள்ள அருச்சனைச் சிறப்பு என்ற பகுதி, இறைவனின் பெருமையோடு பல தலங்களின் பெருமையையும் பேசுகின்றது.

கருணைக் கடலாகிய சோமசுந்தரப் பெருமான் 64 திருவிளையாடல்களை நடத்திய இடம்; அரசராயும் புலவராயும் வீற்றிருந்த மேன்மை மிக்கது; செந்தமிழ் வளர்க்க நல்லிசைப் புலவர் ஒருங்கிருந்து சங்கம் நடத்திய சிறப்புடையது; படைப்புக் காலம் தொடங்கிப் பல பாண்டிய மன்னர்கள் ஆட்சி செய்த இடம்; முருகப் பெருமானும் இங்கிருந்து தமிழ் ஆய்ந்தார் எனின் இதன் சிறப்பிற்கு வேறெதனைக் கூறமுடியும்?

இத்தலத்திற்கு மதுரை, நான் மாடக் கூடல், திருஆலவாய், கடம்பவனம், துவாதசாந்தபுரம், பூலோக கைலாயம் சிவராஜதானி, கன்னி புரீசம், ஜீவன் முக்திபுரம், சிவநகரம் என்று இப்புராணம் பெயர் குறிப்பிட்டுக் காட்டுகின்றது.

## பரஞ்சோதியாரின் திருவிளையாடற் புராணம் :

சைவத் திருமுறைகள் சைவ சித்தாந்தத்தின் உண்மை நெறியினை உலகிற்கு எடுத்துக்காட்டு முகத்தான் எழுந்தவை. புராணங்களும் அத்தன்மையவே, அப்புராணங்களில் இறைவனின் முச்சுடர் போன்று பிரகாசிப்பது பெரிய புராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் என்ற மூன்றுமே எனலாம்.

மதுரைக் காண்டம், கூடற் காண்டம், திரு ஆலவாய்க் காண்டம் என்னும் மூன்று காண்டங்களையும் 3363 பாடல்களையும் உடையது. இதில் சைவத் திருமுறைகள், வைச சித்தாந்த சாஸ்திரங்கள், சங்க இலக்கியங்கள் ஆகியவற்றின் கருத்துகள் இடை இடையே இடம் பெற்றுள்ளன. இது பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிப் பரவசப்படுத்தும் தன்மையுடையது. சொல்லழகும் கவிநயமும், பொருள் ஆழமும் உடையது. இனிய சந்தங்கள் பல இதில் இடம் பெற்றுள்ளன. சைவப் பெருமக்களால் தினம் பாராயணம் செய்யப்பட்டு வந்த உயர்ந்த தன்மையுடையது இது. இந்நூல் கயிறு சாத்தி உண்மை காணும் வழக்கத்தையும் கொண்டிருக்கும் சிறப்புடையது; சைவ விரதங்களின் பெருமையை எடுத்துரைப்பது.

**பாடல்களின் யாப்பு :**

*1. அறுசீர் விருத்தம் 1776 2. எழுசீர் விருத்தம் 266 3. எண்சீர் விருத்தம் 13 4. கலிவிருத்தம் 353 5. கல்வி நிலைத்துறை என்னும் கலித்துறை 782 6. கொச்சகக் கலிப்பா 140 7. தாழிசை ஒரு போகு கொச்சகம் 22 8. வஞ்சி விருத்தம் 11. ஆக மொத்தம் 3363 பாடல்களள் இடம் பெற்றுள்ளன.*

புராண இலக்கியங்களுள் பெருங்காப்பிய இலக்கணம் பொருந்தியிருக்கும். நாட்டு, நகர, ஆறு, மலை வர்ணனைகள் இடம் பெற்றிருக்கும். மூர்த்தி, தலம், தீர்த்தம் போன்றவற்றின் பெருமையோடு விழா, வேள்வி, வழிபட்டோர் வரலாறு, அவர் அடைந்த நற்பயன்கள் ஆகியவை இடம் பெற்றிருக்கும் இவை அனைத்தையும் இத்திருவிளையாடல் உள்ளடக்கி உள்ளது.

**நூலாசிரியர் :**

திருவிளையாடற் புராணத்தின் ஆசிரியர் பரஞ்சோதி முனிவர் ஆவார். இவர் வாழ்ந்த காலம் பற்றிய கருத்துகளைப் பின்னர் காண்போம். இவர் வேதாரண்யம் என்று அழைக்கப்படும். திருமறைக் காட்டில் தோன்றியவர். இது சோழ மண்டலத்தில் உள்ளது. வழி வழிச் சைவர்களாகிய அபிடேகத்தார் மரபில் வந்தவர் வேளாள மரபினர் என்றும் கூறுவர். தந்தையார் பெயர் மீனாட்சி சுந்தரதேசிகர்.

இவர் சிவபெருமான் திருக்கோயில் கொண்டிருக்கும் பல தலங்களுக்குச் சென்று, தரிசித்து மதுரையை அடைந்து, அங்கயற்கண்ணம்மையுடன் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரப் பெருமானைத் தரிசித்து அங்குத் தங்கி இருந்தார். அப்போது மீனாட்சியம்மை தன் கனவில் தோன்றி எம்பெருமானின் திருவிளையாடல்களைப் பாடுவாய்' என்று பணித்தார். அப்பணியைத் தலைமேற்கொண்டு இந்நூலைப் பாடி முடித்தார். சொக்கேசர் சந்நிதியில் அறுகாற் பீடத்திலிருந்து (பாடல் எண் 21). இதனை அடியார்களும் புலவர்களும் கூடி இருப்ப அரங்கேற்றினார் என்பர்.

**இவர் இயற்றிய வேறு நூல்கள் :**

இத்திருவிளையாடற் புராணம் தவிர வேறு சில நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். வேதாரணியப் புராணம் திருவிளையாடற் போற்றிக் கலிவெண்பா மதுரை பதிற்றுப் பத்தந்தாதி போன்றவைகளும் இவர் இயற்றினார்.

**இவரின் காலம் :**

பரஞ்சோதி முனிவரின் காலம் 17ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியும் 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியும் ஆகும். எனவே சற்றேறக்குறைய 250 ஆண்டுகட்கு முன்னர், அதாவது வீரமாமுனிவரின் காலத்திற்கு சற்று முற்பட்டு பரஞ்சோதி முனிவர் வாழ்ந்தவர் எனலாம்.

**மூர்த்திச் சிறப்பு :**

மேருமலை, திருக்கைலாயமலை, மந்தரமலை, திருக்கேதாரம், காசி முதலான இடங்களில் உள்ள சிவமூர்த்திகள் தோன்றுவதற்கு முன்னரே இத்தலத்தின் கடம்ப மரத்தின் அடியில் இச்சிவலிங்கம் தோன்றியுள்ளது. அதனால் இது மூலலிங்கம் என்னும் பெயரைப் பெறும்.

இச் சொக்கலிங்கத்தைத் தரிசித்தவர்களின் பாவங்கள் நெருப்பிற் பட்ட பஞ்சு போல அழியும். இப்பெருமானை விடியற் காலையில் தரிசித்தால் பெரிய பூமியைத் தானம் கொடுத்தலால் உண்டாகும் பலன் வந்து எய்தும், உச்சிக் காலத்தில் வணங்கினால் ஆயிரம் பசுக்களைத் தானம் கொடுத்தலால் உண்டாகும் பலன் கிடைக்கும். மாலையில் வணங்கினால் கோடிப் பசுக்களைத் தானம் கொடுத்தலால் உண்டாகும் பலன் வந்து எய்தும். நடு இரவில் வணங்கப் பெற்றால் பரி வேள்வி (அசுவ மேதயாகம்) செய்தலால் உண்டாகும் பலன் எய்தும். நான்கு யாமங்களிலும் முறையாக வணங்கியோர் எல்லா செல்வ நலன்களும் பெற்று முடிவில் வீடுபேற்றையும் அடைவர்.

இப்பெருமானுக்கு கற்பூர சுந்தரர், கடம்பவன சுந்தரர், கலியாண சுந்தரர், அபிராம சுந்தரர், சண்பக சுந்தரர், கத்தூரி சுந்தரர், பழி அஞ்சிய சுந்தரர், மகுட சுந்தரர், ஆலவாய் சுந்தரர், நான் மாடக்கூடல் நாயகர், மதுரபதி வேந்தர், சமட்டி விச்சாபுர வேந்தர், சிவன் முக்தி புரநாதர், பூலோக சிவலோகதிபர், கன்னி புரேசர், மூலலிங்க நாதர், அட்டாலைச் சேவகன், அடியார்க்கு நல்லான், அதிரவீசி ஆடுவான், அபிடேகச் சொக்கன், பன்னிசைச் சொக்கன், முதலான பெயர்களும் உண்டு. இறைவிக்கு, அபிஷேக வல்லி, அங்கயற்கண்ணி, தமிழ் அறியும் பெருமாட்டி, என்ற பெயர்கள் உண்டு. இன்னும் பல பெயர்களாலும் இவ்விருவர் வழங்கப் பெறுவர்.

## இப்புராணத்தில் இறைவர் தாங்கிய திருவேடங்கள் :

*1. சித்தர் (3, 15, 20, 21, 34, 36, 49) 2. புலவர் (44, 51, 52 ,55) 3. அரசர் (4, 11) 4. வணிகர் (17, 32) 5. வேடர் (22, 26, 37) 6. ஆசிரியர் (27, 33, 58) 7. அந்தணர் (16) 8. முதியவர் (23) 9. பிட்சாடணர் (பெயர் மட்டும்) 10. தவசி (35) 11. சேனைத் தலைவர் (30) 12. குதிரைப்பாகர் (59) 13. வலைஞர் (57) 14. பன்றி (45) 15. மாமன் (39) 16. தொழிலாளி (41, 61)*

இத்துடன் கனவில் தோன்றியும், அசரீரியாகக் கூறியும், இருந்தபடியே அருள் செய்தும், அடியார்க்குக் காட்சியளித்தும் பல கோணங்களில் காப்பிய நாயகரான இறைவர் திருவிளையாடல்கள் புரிகின்றார். பல சமயங்களில் இலிங்கத்திலிருந்து வெளிப்பட்டு மறைகிறார்.

## இப்புராணத்தில் வரும் தேவர்கள் :

*1. இந்திரன், 2. பிரமன், 3. விநாயகர், 4. முருகர், 5. திருமால், 6. திருநந்திதேவர், 7. இடபதேவர், 8. குண்டோதரன், 9. குபேரன், 10. ஐயனார், 11. சத்தமாதர், 12. பத்திரகாளி, 13. வாயுதேவன், 14. அக்னிதேவன், 15. வருணன், 16. இயமன், 17. சங்குகண்ணன்.*

## குரு :

பிரகஸ்பதி, வியாழபகவான்

## முனிவர்கள் :

*1. ததீசி, 2. துருவாசர், 3. பதஞ்சலி, 4. வியாக்கிர பாதர், 5. கௌதமர், 6. அரபத்தர், 7. கண்ணுவர், 8. அகத்தியர் 9. வசிட்டன், 10. அங்கிரசன், 11. காசிபன், 12. புலத்தியன், 13. மார்க்கண்டன், 14. சனகாதி, 15. நாரதர், 16. வியாசர், 17. சுகன்.*

## அசுரர் :

*1. வாலசூரன், 2. வலன், 3. விருத்திராசூரன், 4. விச்சுவஉருவன், 5. துவட்டா.*

## இந்நூலில் இடம் பெற்ற யாகங்கள் :

அசுவமேதம், வாசபேயம், சோடசாகம், அக்கினிட் டோமம், இராசசூயம். அபிசார வேள்வி.

## அட்டமா சித்திகள் :

*1. அணிமா, 2. மகிமா, 3. இலகிமா, 4. கரிமா, 5. பிராந்தி, 6. பிராகாமியம், 7. ஈசத்துவம், 8. வசித்துவம்*

## இதில் சொல்லப்பட்ட விரதங்கள் :

சாந்திராயண விரதம், சோமவாரவிரதம், பௌர்ணமி விரதம்.

**சங்கப் புலவர்கள்:**

*1. இறையனார், 2. இடைக்காடர், 3. உருத்திர சன்மர் (ஊமை), நக்கீரர், கபிலர், பாணரர் பிற புலவர்கள்.*

**இப்புராணத்தில் இடம் பெற்ற பாண்டியர்கள்:**

*இப் புராணத்தில் 22 பாண்டியர்கள் இடம் பெற்றுள்ளனர். 1. குலசேகர பாண்டியன் (3), 2. மலயத்த வசன் (4), 3. சுந்தர பாண்டியன் (5-10), 4. உக்கிர பாண்டியன் (11-15), 5. வீரபாண்டியன் (17), 6. அபிடேக பாண்டியன் (18-21), 7. விக்கிரம பாண்டியன் (22-23), 8. இராச சேகரன் (24), 9. குலோத் துங்கன் (25-27), 10. அனந்த குணபாண்டியன் (28-29), 11. குலபூடணன் (30-34), 12. இராசேந்திர பாண்டியன் (35), 13. இராசசிங்கன் (35), 14. சுந்தரேசபாத சேகரன் (37-39), 15. வரகுணபாண்டியன் (40-43), 16. இராச சேகரன் (44-46), 17. சுகுண பாண்டியன் (47), 18. வங்கிய சேகரபாண்டியன் (49-51), 19. வங்கிய சூடாமணி (52), (சண்பகமாறன் வேறு பெயர்) 20. குலேச பாண்டியன் (56), அரிமர்த்தன பாண்டியன் (58-61), 22. கூன்பாண்டியன் (62-64).*

**இப்புராணத்தில் பெயர் மட்டும் கட்டப்படும் பாண்டியர்கள்:**

*1. இராசேசபாண்டியன், 2. இராசகம்பீரன், 3. பாண்டிவங்கிய தீபன், 4. புரந்தரசித்தன், 5. பாண் டிய வங்கியபாதகன், 6. சிததிரவிரதன், 7. சித்திரபூடணன், 8. சித்திரதுவசன், 9. சித்திரவருமன், 10. சித்திரசேனன். 11. சித்திர விக்கிரமன், 12. இராசமார்த்தாண்டன், 13. இராசசூடாமணி, 14. இராச சார்த்தூலன், 15. துவிசராசகுலோத்தமன், 16. அயோதனப் பிரவீணன், 17. இராசகுஞ்சரன், 18. பரவிரா சபயங்கரன், 19. உக்கிரசேனன், 20. சத்துருஞ்சயன், 21. வீமரதன், 22. வீமபராக்கிரமன், 23. பிரதாம மார்த்தாண்டன், 24. விக்கிரமகஞ்சுகன், 25. சமரகோலாகலன், 26. அதுலவிக்கிரமன், 27. அதுல கீர்த்தி, 28. கீர்த்தி பூடண பாண்டியன் (ஊழிக்காலம் வந்தது), 29. பிரதாப சூரியன், 30. வங்கிசத் துவசனன், 31. இரிபுமருத்தனன், 32. சோழவங்கி சாந்தகன், 33. சேரவங்கி சாந்தகன், 34. பாண்டி வங்கி சேசன், 35. வங்கிசசிரோன்மணி, 36. பாண்டீச்சுரன், 37. குலத்துவசன், 38. வங்கிசபூடணன், 39. சோமசூடாமணி, 40. குலசூடாமணி, 41. இராசசூடாமணி, 42. பூபசூடாமணி, 43. சகநாதன், 44. வீரவாகு, 45. விக்கிரமவாகு, 46. பராக்கிரமவாகு, 47. சுரபிமாறன், 48. குங்குமவழுதி, 49. கருப் பூர பாண்டியன், 50. காருணியவழுதி, 51. புருடோத்தம பாண்டியன், 52. சத்துருசாதன பாண்டியன்.*

**பிற அரசர்கள்:**

*1. சேரப் பெருமான் (42), 2. காடு வெட்டிய சோழன் (35), 3. விக்கிரம சோழன் (50), 4. சோம சேகரன் (12), 5. நகுடன் (1), 6. கரிகாற்பெருவளத்தான் (24)*

**இப்புராணத்தில் இடம் பெற்ற ஆடவர்கள்:**

*1. தனஞ்செயன் (3), 2. விருபாக்கன் (23), 3. வைணவ பிரம்மச்சாரி (23), 4. அந்தணன் (26), 5. அந்தணனின் புதல்வன் (26), 6. வாளாசிரியன் (27), 7. சித்தன் (27), 8. அடியார்க்கு நல்லான் (31) (55), 9. தனபதி (39), 10. தனபதியின் மருமகன் (39), 11. பாணபத்திரன் (41), 12. ஏமநாதன் (41), 13. நக்கிரன் (52), 14. தருமி (52), 15. சிவபக்தர் (47), 16. உருத்திர சன்மன் (55), 17. கபிலர் (55), 18. வாதவூரர் (58-61), 19. பரதவர் தலைவன் (57), 20. குலச் சிறையார் (62), 21. சிதம்பர அந்தணன் (62), 22. திருஞானசம்பந்தர் (62-64), 23. மதுரை வணிகன் (64), 24. பரணன் (55), 25. சேதிராயன் (55-30), 26. சவுந்தர சாமந்தன் (30), 27. சூரசேனன் (4), 28. விச்சுவாவசு (4), 29. சுமதி (5), 30. சுகலன் (45).*

**இப்புராணத்தில் இடம் பெற்ற பெண்கள்:**

*1. தடாதகைப் பிராட்டியார் (5-11), 2. காஞ்சன மாலை (4), 3. காந்திமதி (12), 4. சுபவிரதை (23),*

*5. கௌரி (23), 6. பொன்னனையாள் (36), 7. தரும சீலை (38), 8. சுசீலை (39), 9. தனபதிவனிகரின் தங்கை (39), 10. சரஸ்வதி (51), 11. சாவித்திரி (51), 12. காயத்திரி (51), 13. உமா தேவியார் (57), 14. வந்தி (61), 15. மங்கயற்கரசி (62-63), 16. உலோப முத்திரை (65), 17. வணிகரின் மனைவியர் (64), 18. ஈழப் பாடினி (44), 19. பாணபத்திரன் மனைவி (27), 20. அந்தணர் மனைவி (26), 21. வாளாசிரியன் மனைவி (27), 22. முனிவரின் மனைவியர் (32), 23. இயக்க மாதர் (33), 24. குணசாலினி (55), 25. விச் சாவதி (4), 26. சுகலை (46).*

**மலர்கள் :**

கொன்றை, குருக்கத்தி, பாதிரி, ஆத்தி, வில்வம், மந்தாரம், மல்லிகை, முல்லை, மகிழம்பூ, கோங்கு, கரந்தை, அலரி, நந்தியாவட்டம், செருந்தி, குருந்தகம், புன்னாகம், தாமரை, நீலம், சண்பகம்.

**விலங்கு போன்றவை :**

*1. யானை, 2. பன்றி, 3. பசு, 4. கரிக்குருவி, 5. நாரை, 6. காளை (இடபதேவர்), 7. சுறாமீன் (திருநந்திதேவர்), 8. வெள்ளையானை (காட்டு யானை)*

**பறவைகள் :**

அன்னங்கள், கழுகுகள், பருந்துகள், கருடன், காடை, ஊர்க்குருவி, சிச்சிலி, கிளி, நாகணவாய்ப் புள், காகம்.

**மலைகள் :**

கைலை, இடபமலை, பொதியமலை, பன்றிமலை, விந்தமலை.

**ஆசிரியரின் பல்கலை அறிவுக்குச் சான்று :**

*1. திருமண மண்டப அலங்காரம் (5), 2. பிறநாட்டவர், தேவர்கள் (5), 3. ஆற்று வர்ணனை (8, 60) 4. ஆண்களின் முப்பத்திரண்டு இலட்சணம் (11), 5. பெண்களின் இலக்கணம் (12), 6. சோமவார விரதம் (14), 7. வேதம் (16), 8. ஒன்பான் மணிகள் (17), 9. அட்டமாசித்திகள் (33), 10. போர் வர் ணனை (35), 11. சிவலோகத்தின் வர்ணனை (40), 12. இசை நுணுக்கம் (41), 13. நந்தவனம் - மலர், - வர்ணனை (52), 14. பரி இலக்கணம் (59)*

**இப்புராணக் கதைகளைக் கூறும் பழைய நூல்கள் :**

சங்க இலக்கியங்களில் சிவபெருமான் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றனவே தவிர இக்கதைக் குறிப்புகள் இல்லை. நமக்குக் கிடைத்திருக்கும். பழைய நூல்களில் சிலப்பதிகாரத்தில் இக்கதை நிகழ்ச்சிகள் முதன் முதலில் உள்ளன. ஆயினும் தற்காலத்தில் உள்ள சைவ புராணங்களில் இக்கதைக் குறிப்புகள் மிகப் பலவாய்க் காணப்படுகின்றன.

***(அ) சிலப்பதிகாரம் :*** இதில் மூன்று படலக் கதைகள் மட்டும் குறிப்புகளாய் உள்ளன.

*(1) கடல் கவறவிட்ட கதை (13) சிலம்பு காடுகாண் காதை 11 : 18-22 வரிகளில் உள்ளது.*

*(2) இந்திரன் முடி மேல் வளையெறிந்த கதை (14) சிலம்பு காடுகாண் காதை 11 : 23-29 வரிகளில் உள்ளது.*

***(ஆ) தேவார திருவாசகம் :*** தேவாரத்தில் 17 கதைகளும், திருவாசகத்தில் 20 கதைகளும் இடம் பெற்றுள்ளன.

*(1) தேவாரம் 5, 6, 10, 16, 17, 19, 20, 23, 32, 41, 42, 45, 51. 52. 57, 62, 63 படலக் கதைகள் இடம் பெற்றுள்ளன.*

*(2)* திருவாசகம் *2, 5, 6, 10, 12, 22, 23, 29, 30, 33, 35, 36, 37, 45, 55, 58, 59, 61* படலக் கதைகள் இடம் பெற்றுள்ளன.

**(இ) கல்லாடம் :** இந்நூலில்தான் இறைவனின் திருவிளையாடல்கள் அறுபத்து நான்கென்ற வரையறை காணப்படுகின்றது. கல்லாடர் என்பவரால் செய்யப் பெற்றது. இந்நூலில் 31, திருவிளையாடற் கதைக் குறிப்புகள் காணப்படுகின்றன. *1, 2, 5, 6, 7, 8, 9, 11, 13, 14, 17, 21, 24, 27, 32, 37, 39, 41, 42, 43, 45, 46, 47, 49, 51, 52, 53, 56, 57, 59, 61* படலக் கதைகள் குறிப்புகளாய் உள்ளன.

*3, 4, 15, 18, 25, 26, 28, 31, 34, 38, 40, 44, 48, 50, 54, 60* ஆகிய பதினாறு படலக் கதைக் குறிப்புகள் இம்மூன்று நூல்களிலும் இல்லை.

## தலங்களின் பெருமை (இந்நூலில் இடம் பெற்றவை)

1. திருக்கைலாயம்
2. காசி
3. விருபாக்கம் (ஏமகூடம்)
4. திருப்பருப்பதம் (ஸ்ரீ சைலம்)
5. திருக்கோகரணம்
6. திருவிஞ்சைக்களம்
7. திருக்காளத்தி
8. திருவாலங்காடு
9. காஞ்சிபுரம்
10. திருமாற்பேறு
11. திருக்கழுகுன்றம்
12. திருவோத்தூர்
13. திருவண்ணாமலை
14. திருக்கோவலூர்
15. பழமலை (விருத்தாசலம்)
16. திருவதிகை
17. சிதம்பரம்
18. திருத்தோணிபுரம்
19. புள்ளிருக்கு வேளூர் (வைத்தீஸ்வரன் கோயில்)
20. திருக்குறுக்கை
21. திருவெண்காடு
22. திருமயிலாடுதுறை (மயூரம்)
23. திருப்பறியலூர் (பறசலூர்)
24. திருக்கடவூர்
25. திருவிற்குடி
26. திருசெங்காட்டங்குடி
27. திருக்கோடிக்கா
28. திருவாரூர்
29. திருமறைக்காடு (வேதாரண்யம்)
30. திருவிடை மருதூர்
31. திருப்பனந்தாள்
32. திருச்சய் ஞாலூர்
33. திருக்குடந்தை (கும்பகோணம்)
34. சுவாமி மலை
35. திருப்புறம்பயம்
36. திருவையாறு
37. திருக்கண்டியூர்
38. திருவானைக்கா
39. திருசிராமலை
40. திருநெடுங்குன்றம்
41. திருத்தளிப்புத்தூர் (திருப்பத்தூர்)
42. திருவாடனை
43. திருப்புன்வாயில்
44. திருப்பூவனம்
45. திருக்கானப் பேர்
46. திருச்சுழியில்
47. திரு இராமேச்சுரம்
48. திருநெல்வேலி
49. திருக்குற்றாலம்
50. திருப்பரங்குன்றம்
51. திருவேடகம்
52. திரு ஆப்பனார்.

சைவ சிந்தாந்தக் கருத்துக்கள் ஆங்காங்கே இடம் பெற்றுள்ளன வற்றையும, முழுமுதற் கடவுள் சிவபெருமானே என்று பல இடங்களில் நிறுவுகின்ற திறத்தையும் தோய்ந்து படித்துப் பெருவாழ்வு பெறுவோமாக

# திருத்தொண்டத் தொகையடியார் திருநட்சத்திரங்கள்

| மாதம் | நாயனார் | நட்சத்திரம் |
|---|---|---|
| சித்திரை | தில்லை வாழ்அந்தணர் | ஆண்டு முதல் நாள் |
| | மங்கையர்க் கரசியார் | ரோகணி |
| | விறன்மிண்டர் | திருவாதிரை |
| | இசை ஞானியார் | சித்திரை |
| | திருக்குறிப்புத் தொண்டர் | சுவாதி |
| | திருநாவுக்கரசர் | சதயம் |
| | சிறுத்தொண்டர் | பரணி |
| வைகாசி | சோமாசிமாறர் | ஆயில்யம் |
| | நமிநந்தி அடிகள் | பூசம் |
| | திருஞானசம்பந்தர் | மூலம் |
| | முருக நாயனார் | ,, |
| | திருநீலகண்ட யாழ்ப்பாணர் | ,, |
| | கழற்சிங்கர் | ,, |
| ஆனி | ஏயர்கோன் கலிக்காமர் | ரேவதி |
| | மாணிக்கவாசகர் | மகம் |
| | அமர்நீதி நாயனார் | பூரம் |
| ஆடி | கலிய நாயனார் | கேட்டை |
| | கோட்புலியார் | ,, |
| | மூர்த்தி நாயனார் | கார்த்திகை |
| | புகழ்ச்சோழர் | ,, |
| | கூற்றுவர் | திருவாதிரை |
| | பெருமிழலைக் குறும்பர் | சித்திரை |
| | சுந்தரமூர்த்தி சுவாமிகள் | சுவாதி |
| | கழறிற்றறிவார் (சேரமான் பெருமாள்) | ,, |
| ஆவணி | செருத்துணை நாயனார் | பூசம் |
| | அதிபத்த நாயனார் | ஆயில்யம் |
| | புகழ் துணையார் | ,, |
| | இளையான் குடிமாறர் | மகம் |
| | குலச்சிறையார் | அனுசம் |
| | குங்கிலியக்கலயர் | மூலம் |
| புரட்டாசி | நரசிங்கமுனையரையர் | சதயம் |
| | உருத்திர பசுபதியார் | அசுவதி |
| | திருநாளைப் போவார் | ரோகணி |
| | ஏனாதிநாத நாயனார் | உத்திராடம் |
| ஐப்பசி | திருமூல நாயனார் | அசுவதி |
| | நெடுமாறர் | பரணி |
| | இடங்கழி நாயனார் | கார்த்திகை |
| | சக்தி நாயனார் | பூசம் |
| | பூசலார் நாயனார் | அனுஷம் |
| | ஐயடிகள் காடவர்கோன் | மூலம் |
| கார்த்திகை | கணம்புல்லர் | கார்த்திகை |
| | மெய்ப்பொருள் | உத்திரம் |

| மாதம் | நாயனார் | நட்சத்திரம் |
|---|---|---|
| | ஆனாயர் | அஸ்தம் |
| | மூர்க்க நாயனார் | மூலம் |
| | சிறப்புலி நாயனார் | பூராடம் |
| மார்கழி | சடைய நாயனார் | திருவாதிரை |
| | இயற்பகை நாயனார் | உத்திரம் |
| | மானக்கஞ்சாறர் | சுவாதி |
| | சாக்கிய நாயனார் | பூராடம் |
| | வாயிலார் நாயனார் | ரேவதி |
| தை | கண்ணப்பர் | மிருகசீரிடம் |
| | அரிவாட்டாயர் | திருவாதிரை |
| | சண்டேசுரர் | உத்திரம் |
| | திருநீலகண்டர் | விசாகம் |
| | அப்பூதியடிகள் | சதயம் |
| | கலிக்கம்ப நாயனார் | ரேவதி |
| மாசி | எறிபத்த நாயனார் | அஸ்தம் |
| | காரி நாயனார் | பூராடம் |
| | கோட் செங்கட்சோழர் | சதயம் |
| பங்குனி | காரைக்காலம்மையார் | சுவாதி |
| | தண்டியடிகள் | சதயம் |
| | நேசநாயனார் | ரோகணி |
| | கணநாதர் | திருவாதிரை |
| | முனையடுவர் | பூரம் |
| | தொகையடியார் எண்மர் | ஆண்டு நிறை நாள் |

## திருத்தொண்டத் தொகையடியார்கள் 72

1. காலம்

(அ) தனி அடியார்: 63

| | | |
|---|---|---|
| *1.* | *கி.பி. 600 (சம்பந்தர், அப்பர் இவர்களுக்கு முற்பட்டவர்)* | *- 17* |
| *2.* | *601-680 சம்பந்தர், அப்பர் இருவரின் காலத்தவர்* | *- 11* |
| *3.* | *681-840 (இருவர் காலத்திற்கும் ஆரூரர் காலத்திற்கும் இடைப்பட்டவர்* | *- 22* |
| *4.* | *840க்குப்பின் (ஆரூரர் காலத்தவர்)* | *13* |
| | | *63* |

(ஆ) தொகையடியார் : முற்காலத்தவர் - *9*

| 2. வழிபாட்டு முறை | தனி அடியார் | தொகை அடியார் | மொத்தம் |
|---|---|---|---|
| *1.* சிவலிங்க பக்தி | *36* | *8* | *44* |
| *2.* சங்கம பக்தி | *19* | - | *19* |
| *3.* குரு பக்தி | *8* | - | *8* |
| *4.* முற் பிறவியின் பயன் | - | *1* | *1* |
| | *63* | *9* | *72* |

3. மரபு (அ) தனி அடியார்

| | |
|---|---|
| *1.* வேளாளர் | *13* |
| *2.* மாமறையோர் (அந்தணர்) | *12* |
| *3.* சிவமறையோர் (ஆதிசைவர்) | *4* |
| *4.* முடிமன்னர் | *6* |
| *5.* குறுநில மன்னர் | *5* |
| *6.* வணிகர் | *5* |
| *7.* ஆயர் | *2* |
| *8.* மருத்துவர் (மாமாத்திரர்) | *1* |
| *9.* வேட்கோவர் (குயவர்) | *1* |
| *10.* சான்றார் | *1* |
| *11.* செக்கார் | *1* |
| *12.* சாலியர் | *1* |
| *13.* பாணர் | *1* |
| *14.* ஏகாலியர் | *1* |
| *15.* வேடர் | *1* |
| *16.* பரவர் | *1* |
| *17.* புலையர் | *1* |
| *18.* மரபு தெரியவராதவர் | *6* |
| | *63* |

(ஆ) தொகையடியார்

| | |
|---|---|
| *1.* தில்லைவாழ் அந்தணர் | *1* |
| *2.* சிவமறையோர் | *1* |
| *3.* பலவகை மரபினர் | *7* |
| | *9* |

# நாட்டரசன் கோட்டை - சோழீசரும் கானப்பேர் - காளீசரும்



பேராசிரியர், இராம. சிவசுப்பிரமணியன், குறளகம்
9/6, மூவேந்தர் தெரு, நாட்டரசன் கோட்டை.

## நாட்டரசன் கோட்டை வரலாறு :-

'நாட்டுக்கோட்டை' என்ற நற்பெயரோடு நனிமிகு தொடர்பு உடையது நாட்டரசன் கோட்டை, இங்கே தான் காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து வந்த நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் முதன் முதலில் குடியேறியிருக்க வேண்டும் என்பது வரலாற்று ஆசிரியர்களின் அசைக்க முடியாத நம்பிக்கை. எனவே, நகரத்தார்களின் முதல் ஊர் நாட்டரசன் கோட்டை ஆதல் வேண்டும். இம்முதலாம் ஊரில் முதற்கோயில் இப்போது திருக்குட நன்னீராட்டு விழா நிகழும் அருள்மிகு கரிகால சோழீசர் கோவிலே ஆகும். இது, இங்குப் புகழ்பெற்று விளங்கும் அருள்மிகு கண்ணுடையநாயகி அம்மன் கோவிலுக்கும் முற்பட்டது ஆகும் என்பது, இவ்வூர்க்காரணக்காரர்களுள் ஒருவராகிய வலையரசன் தம் வசம் வைத்திருக்கும் செப்புப் பட்டயச் சான்றால் இனிது விளங்கும். ஊருக்கு அண்மையில் உள்ள பிரண்டைக்குளம் வயல்வெளியிலிருந்து கொண்டுவரப்பட்ட கண்ணுடையவள் சிலை, கரிகால சோழீசர் ஆலயத்தில் அம்மை சிவகாமியின் பக்கத்தே முதலில் பிரதிஷ்டை செய்யப் பெற்றதாகவும், இரு தேவியர்க்கும் ஒத்துக் கொள்ளாததால் அன்னை கண்ணுடையாள் வடக்கு நோக்கித் திரும்பவே, அப்பெருமாட்டிக்குத் தனிக்கோயில் வடக்கு நோக்கித் தனியே நிர்மாணிக்கப் பெற்றதாகவும் இவ்வூர் வரலாற்றுச் செய்தியால் அறியலாம். இதனைக் கட்டுரை ஆசிரியர், தம் ஆய்வு நூலாகிய கண்ணுடையம்மன் பள் - ஓர் ஆய்வு' என்ற நூலில் குறிப்பிட்டிருப்பதும் ஈண்டு உணரத்தக்கது ஆகும்.

## கரிகால சோழீசர் - சிவாலயம் எழுந்த வரலாறு :-

'சிவசக்தியுடன் நிறை சோழீசர்' என்பது கண்ணுடையம்மன் பள்ளுப் பாடிய முத்துக்குட்டிப் புலவர் திருவாக்கு. அவர் ''சிவசக்தியுடன் இவ்வாலயத்தில் எங்ஙனம் நிறைந்தார்'' என்ற இவ்வாலயம் எழுந்த வரலாற்றை, அப்புலவர் பெருமானே தமது பள்ளுநூலில் குறிப்பிடுகின்றார்.

அது வருமாறு

''வெய்ய சாபம் கடம்பவனத்தில் விடும்படிக்கு, ஒருவெள்ளானை பூசை
செய்யவே, திருக்கானை வனம் தேடிச் செல்லும் மார்க்கத்தில் தீர்த்தம் உண்டாய்த்
துய்யதோர் சிவலிங்கம் கரிகால சோழன் கண்டு, இவர் சோழீசர் என்றும்
வைகை நாட்டில் பிரதிஷ்டை செய்த வடகலை வேள்வி நாடு எங்கள் நாடே''

என்பது அத்திருப்பாட்டு. அப்பாடலால் உணரத்தக்கன. சோழர்களில் கரிகாலன் என்ற பெயருடைய ஓர் அரசன். தனக்கு ஏற்பட்ட சாபத்தை விட்டொழிக்கப் பாண்டியநாடு வந்தான். வந்தவன் திருக்கானை வனம் - திருக்கானப்பேர் என்னும் காளையார் கோவிலில், ஒப்பற்ற வெள்ளையானை பூசை செய்ய வரும் வழியில் நமது ஊராம் நாட்டரசன் கோட்டையில் தங்கினான். தங்கியவன் தீர்த்தமாடிச் சிவலிங்க பூசை செய்ய எண்ணினான். இது அவனது நித்தியப்படிக் கடனாகும். மன்னவன் அல்லவா? எனவே, அக்கடனாற்ற ஒரு சிவாலயமும், தீர்த்தக்குளமும் உண்டாக்கினான். கரிகாலன் வழிபட்ட சோழீசர் ஆனதால், பெருமான் 'கரிகால சோழீசர்' ஆனார். மன்னவனோடு வந்த வீரன் கண்ட குளம் ஆனதால், தீர்த்தக்குளம் 'வீரன் கண்டான்' நாளடைவில் 'வீரகண்டான்' ஆயிற்று, நமது ஊர்த் தீர்த்தங்கள் ஏழு என்பர் பள்ளுநூல் ஆசிரியர்.

''விண்தலம் பணிதேவி திருக்குளம், வீரகண்டான், மெய்ச்செங்கமலத்தான்
மண்டலம் பெறு தீத்தார்குளம், நல்லவாத்தியார் ஓடை, நாயமார்வாவி,

எண்டிசைக்கும் உயர் சொக்கனூரணி, ஏழுதீர்த்தமும் சூழும் தடாகம்
கண்டு உளமகிழ் நாட்டரசன்கோட்டை கண்ணுடையவள் ஊர் எங்களூரே''
என்பது தீர்த்தப்பட்டியல்

### திருக்கானப்பேர்ச் சிறப்பு :

இத்துணைச் சிறப்பு மிகுந்த கரிகால சோழீசர் ஆலய நிர்மாணத்திற்குக் காரணம் கரிகாலனின் கானப்பேர்ப் பயணமே. இக்கானப்பேர், தேவாரச் சிறப்புப் பெற்று விளங்குவது, தேவார ஆசிரியர்கள் மூவரில், முதலாமவராகிய சம்பந்தரும், மூன்றாமவராகிய சுந்தரரும் பாடிய சிறப்புடையது இத்திருத்தலம். சுந்தரர் திருச்சுழியலில் இறைவனை வழிபட்டுத் தங்கியபோது அவர் கனவில், கானப்பேர் இறைவன் காளை வடிவில் தோன்றி 'என்னை நீ வணங்க வா' என்று அழைத்தாராம். அச்சிந்தனை ஊற்று கட்டுரை ஆசிரியரின் நினைவில் ஊறவே, கட்டுரை ஆசிரியர், சம்பந்தரும் சுந்தரரும் கானப்பேர் இறைவன் தன்னைப் பாடிய தேவாரப் பாசுரங்களை நினைவு கூர்ந்தார். அந்நினைவின் பிரதிபலிப்பே இக்கட்டுரை. கரிகால சோழீசர் திருக்குட நன்னீராட்டு விழாக் கண்டு மகிழ்ந்த சிவநேசச் செல்வர்களைத் தேவாரத் தீம்பாகு உண்ணத் திருக்கானப் பேருக்குக் கட்டுரை ஆசிரியர் அழைத்துச் செல்கின்றார். கானப்பேர் நாட்டரசன் கோட்டையினும் பழைமை சான்றது. சங்ககாலப் பழைமை உடையது. பாண்டியன் உக்கிரப் பெருவழுதி சங்க காலத்து மன்னன் கானப்பேரில் வேங்கை மார்பன் என்னும் வீரனை வென்று கானப்பேர் எயில் கடந்த உக்கிரப் பெருவழுதி என்ற புகழ்ப் பெயரைப் பெற்றான். இதனால் கானப்பேரின் தொல் பழைமை விளங்குகின்றது.

### கானப்பேர் பற்றிய சம்பந்தர் தேவாரம் :-

தொல்பழைமை மிக்க கானப்பேர் பாண்டி நாட்டுத் தலங்கள் பதினான்கனுள் பத்தாவது திருத்தலம் ஆகும், சம்பந்தரும் சுந்தரரும் தேவாரம் பாடிய திருக்கானப்பேர்த் திருத்தலம், இறைவன் சுந்தரர்க்குக் காளைவடிவில் தோன்றிக் காட்சியளித்த காலம் முதலாகவே, 'காளையார் கோவில்' என வழங்கப்பெற்றது. இத்தலத்தைச் சம்பந்தர் பாடிச் சிறப்பித்த தேவாரப் பாசுரங்கள் தேனினும் இனியன. இவை தேவாரத்துள் மூன்றாம் திருமுறையுள் 284 ஆவது பதிகத்துள் திகழ்கின்றன.

யானைக்கும், கானப்பேருக்கும் மிகுந்த தொடர்பு உண்டு. இதனை இப்பதிகத் தொடக்கப் பாடலாலும், 7ஆம் பாடலாலும் அறிந்து இன்புறலாம். காளையார் கோவிலில் யானைகுளிக்கும் குளப்பகுதி 'யானை மடு' என வழங்கப்படுதலும் நினைவு கொள்ளத் தக்கது. அவ்யானை மடுவில் தான், நம் ஆச்சிமார்களும், அப்பச்சிமார்களும் தீர்த்தம் ஆடுவர். சாபவிமோசனம் பெற வந்த கரிகாலன் வெள்ளையானை பூசை செய்ததும் ஒரு சான்றாகும்.

''பிடிஎலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
விடியலே தடம்மூழ்கி விதியினால் வழிபடும்
கடியுலாம் பூம்பொழில் கானப்பேர் அண்ணலின்
அடியலால், அடைசரண் உடையரோ அடியரே?''

என்பது இப்பதிகத்தின் முதலாவது பாசுரம். இங்கே பெண்யானைகள் பின்னே வருகின்றன. அவற்றின் முன்னே பெரிய துதிக்கைகளை உடைய ஆண்யானைகள் மலர்களைப் பறித்துக் கொண்டு ஏந்திச்செல்கின்றன. யானை மடுவில் வைகறையில் நீராடி, விதிமுறைப்படி காளீசரை - கானப்பேர் அண்ணலை வழிபடுகின்றன. நறுமணம் கமழுகின்ற பூஞ்சோலைகள் சூழ்ந்த கானப்பேரில் அண்ணல் வீற்றிருக்கின்றார். அவ்வீசனின் திருவடியை அன்றி அடியார்கள் அடைக்கலம் புகுதற்கு வேறு இடம் யாது உள்ளது? என்பது இப்பாசுரப் பொருள். கணவனும் மனைவியுமாக யானைமடுவில் விடியலில் நீராடி, விதிப்படி காளீசரை வழிபட்டு அவனுக்கு அடியவர்களாக விளங்குகின்றார்கள் என்பதே இச் செய்யுளால் போந்த பொருள்.

வண்டினங்கள் பகலில் தாமரைத் தடாகங்களில் தங்கித் தேனைப்பருகிச் செம்மாந்து வாழ்கின்றன. அவை இரவில் நீலோற்பல மலர்களில் தங்கி ரீங்காரம் செய்து பண் இசைக்கின்றன. இக்கவின்மிகு வருணனை, இங்கு வாழும் மக்களின் சுகபோகத்தையும் அவர்கள் பண்இசைத்துக் காளீசரைப் பாடிக்களிக்

கும் அருள் திறத்தையும் அங்கை நெல்லி என அழகுறப் புலப்படுத்துகின்றது. ''வாவிவாய்த் தங்கிய நுண்சிறை வண்டினம், காவிவாய்ப் பண் செய்யும் கானப்பேர்'' என்பது ஞானசம்பந்தர் தேவாரம்.

காளீசர் ஈறு இலா ஞானப்பேர் ஆயிரம் உடையவன். அருணகிரியார் ''வெகு கோடிநாம சம்பு குமாரா நமோ நம'' என்பர். இறைவன் பெயர்கள் எண்ணில அத்தனையும் ஞானப் பெயர்கள். வெறும் சும்மா பெயர்கள் இல்லை. இவ்வாயிரம் பெயர்களை உடைய காளீசர் குடிகொண்ட கானப்பேர் ஊரைத்தொழும் காதலார் தீதிலர். அவர் வானப்பேரூராம் அமராவதி புகும் பேறும் பெறுவர். பெருமை மிகு பெண்யானையை அடக்கவல்ல பெரிய ஆண்யானையானது வழிபடும் கானப்பேர் என மீண்டும் யானை காளீசரை வழிபடும் திறத்தைச் சம்பந்தர் சிறப்பித்துக் காட்டுகிறார். இவ்வஃறிணை வழிபாடு உயர்திணை மக்களின் சிவவழிபாட்டை அன்றோ யூகித்துக் காட்டுகின்றது. ஊனமாம் உடம்பினில் உறுபிணி கெட ஞானமாமலர் கொண்டு அர்ச்சித்து ஆண்டவனை வழிபட வேண்டும் என்பது சம்பந்தர் கொள்கை.

பொதுவாகச் சம்பந்தர் தேவாரத்தில், பதிகம் தோறும் 8 ஆவது பாடல், கயிலையை எடுத்த தோள்வலி சான்ற இராவணன் நெடுமுடி தொலைய ஊன்றிய இறைவனது தாளினைச் சிறப்பிப்பது மரபு, அவ்வகையில் இப்பதிக எட்டாம் செய்யுளை நாம் நம் உச்சிமீது வைத்துப் போற்ற வேண்டும். இராவணனை அழுத்திய தாளினான் உறையும் கானப்பேரைத் தலையினால் வணங்குவார், நாளுக்கு நாள் உயர்வடைந்து நன்மைகள் பலவற்றைப் பெறுவர்.

''வாளினான் வேலினான் மால்வரை எடுத்ததிண்
தோளினான், நெடுமுடி தொலையவே ஊன்றிய
தாளினான் - கானப்பேர் தலையினால் வணங்குவார்
நாளுநாள் உயர்வதோர் நன்மையைப் பெறுவரே''

என்பதே அவ்வற்புதத் தேவாரம். ஆண்டவனை, 'வாழ்த்த வாயும், நினைக்க மட நெஞ்சும், தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை' என்ற நாவுக்கரசர் நல்வாக்கும் ஈண்டு நினைவு கூரற்பாலது, இனிச் சுந்தரர் தேவாரச் செய்திகளைக் காண்போம்.

### சுந்தரர் தேவாரச் செய்திகள் :

சுந்தரமூர்த்தி சுவாமிகள் சேரமான் பெருமாள் நாயனாருடன் சென்று திருச்சுழியலைத் தரிசித்துவிட்டு இரவில் அத்தலத்தில் தங்கினார். அவ்விரவில் அவர் கனவில் சிவபெருமான், காளைத்திருவடிவத்தோடு எழுந்தருளி, ''யாம் இருப்பது கானப்பேர்'' என்று சொல்லி மறைந்தார், அவ்வளவில் சுவாமிகள் உடனே துயில் உணர்ந்து, அதிசயித்துக் காளீசர் திருவருளை நினைந்து திருக்கானப்பேருக்குப் புறப்படுவாராகித் திருப்பதிகம் பாடியருளினார். இவர் பாடிய திருக்கானப்பேர்த் தேவாரம் 7ஆம் திருமுறையுள் 84ஆம் பதிகம் ஆகும். இப்பதிகத்தில் பாடல்கள் தோறும், ''கார்வயல்சூழ் கானப்பேருறை காளையையே கண்டு தொழப் பெறுவது என்று கொலோ அடியேன்'' என்றும் ''காதல் உறத்தொழுவது என்று கொலோ அடியேன்'' என்றும் ''கற்றனவும் பரவிக் கைதொழல் என்று கொலோ'' என்றும், ''கண்ணுதலைக் கனியைக் காண்பதும் என்று கொலோ'' என்றும், ''கண்டனை அன்பொடு சென்று எய்துவது என்று கொலோ'' என்றும் பலவாறாகப் பன்னிப்பன்னிப் பாடுகின்றார். ஆழ்வாரும் அரங்கன் மீது அன்பு கொண்டு ''கருமணியைக் கோமளத்தைக் கண்டுகொண்டு என் கண்ணிணைகள் என்று கொலோ களிக்கும் நாளே'' என்று ஏங்குகின்றார். ஆண்டவனை அடைதற்கு அடியார்கள் கொண்ட ஏக்கம், சுந்தரரையும் விட்டு வைக்கவில்லை! இப்பதிகப் பாடல்கள் பத்தும் காளீசர் பெருமையையும், அவரைக் காணவேண்டும் என்ற சுந்தரரது துடிப்பையும் படம்பிடித்துக் காட்டுகின்றன. பானை சோற்றுக்குப் பதம் ஒன்று காண்பது போலச் சான்றாக ஓரிரு பாடல்களின் சிறப்பினைக் காண்போம்.

அடியார் வணங்கும் திருவடியையும், தலைமீது விளங்கும் பிறையையும், உமை கொண்ட இடப்பாகத்தையும், ஒளிரும் செந்தாமரை மேனியையும், தேவர் ஓலம் கண்டு இரங்கிக் கடல் நஞ்சு உண்டு நினைவுக் குறி நீங்காதிருக்கின்ற திருநீல கண்டத்தையும் எட்டுத் தோள்களையும் நறுஞ்சடை வண்ணத்தையும் கண்குளிரக் கண்டு தொழப் பெறுவது என்று கொலோ அடியேன் என்பது சுந்தரரது ஆராக் காதல், அக்காதல் முற்றுப் பெறவேண்டும் என்று ஏங்கி ஏங்கிப் பாடுகின்றார். ''அன்பு பெருத்து அங்கையின் மாமலர்

கொண்டு என்கணது அல்லல் கெடக்காதல் உறத்தொழுவது என்று கொலோ அடியேன் என்பது அடுத்த தொரு ஏங்கல். திருவெண்ணீறு பூசிய மார்பில் மலைமகளாம் உமையம்மை சேர்ந்த சேர்க்கையால் ஏற் பட்ட அடையாள வடுவினைப் புகழ்ந்துபாடத் தான் கற்றன பலவற்றாலும் துதித்துக் கைதொழல் எந் நாளோ? என்பது பிறிதும் ஓர் அவலம் இங்கே அவலத்தில் இன்பத்தைச் சுந்தரர் கொட்டித்தரும் அழகு சுவைத்து இன்புறற் பாலது.

அயலிடத்தே திருச் சுழியலிலே நைந்து வாடுகின்ற, ''என்னை மதித்து உய்யும் வண்ணம் அருளும் கண்ணுதலைக் கனியைக் காண்பதும் என்று கொலோ'' என்று தவியாய்த் தவித்து ஏங்குகின்றார் சுந்தரர் பெருமான் வஞ்சகர் மனத்தே நெஞ்சம் செலுத்தாதவனும், மும் மூர்த்திகட்கும் முழுமுதற்பொருளாய் விளங்குகின்றவனும் விடைப்பாகனும், அன்பர்கட்கு அமுதம் போன்றவனும், பால் நறுநெய், தயிர், கோசலம், கோமயம் என்னும் பஞ்ச கவ்வியத்தில் மூழ்கி இருப்பவனும், மேலோர்க்கு மேலானவனும் ஆகிய கார்வயல் சூழ்கானப் பேருறை காளைவடிவினனாகிய காளீசனைத் தலைவனாகப் பெறுவது எந் நாளோ? என்பது சுந்தரர் ஏக்கத்திலும் ஏக்கம், அடுத்தும் ஒரு பாசுரம், காளீசரை நாய் அடியேன் எய்துவது என்று கொலோ? என்று சுந்தரர் அழுகையை அவலித்துக் காட்டுகின்றது. சுந்தரர் அவலப்பதிகத்தை நாமும் உணர்ந்து உள்ளம் உருகப் பாடினால், அடியார்க்கு அடியவராவோம், இப்பிறவி போய் மறுபிறவி எடுக்கும் போது, மண்டலநாயகராய் மன்னி வாழ்வோம் - என்று சுந்தரர் பெருமானே தம்பதிகத்தை முடித்துக் காட்டுகின்றார்.

### முடிவுரை :

இதுகாறும் கூறிய கருத்துக்களால் நாட்டரசன்கோட்டை, ஆண்டுள்ள சிவாலயம் ஆகியவற்றின் பழை மையும் சிவாலயம் தோன்றிய வரலாறும், கரிகாலசோழீசருக்கும் கானப்பேருக்கும் உள்ள தொடர்பும், கானப்பேர்க் காளீசரை தேவார ஆசிரியர்கள் முன்னவர் சம்பந்தரும், பின்னவர் சுந்தரரும் தேவாரப் பாசுரங் களால் போற்றிய பாங்கும் சிறப்புற எடுத்துக்காட்டப் பெற்றன. கரிகால சோழீசர் திருக்குட நன்னீராட்டுக் கண்டு மகிழ்ந்த மக்கள், இக்கட்டுரைச் செய்திகளை ஓர்ந்து உணர்ந்து ஓதி இன்புற்றுச் சோழீசர் திருவருளும், காளீசர் பேரருளும் பெற்றுத் திகழ்வார்களாக.

## சைவ சித்தாந்த சாத்திர நூல்களின் விளக்கம்

| எண் | நூலின் பெயர் | ஆசிரியரின் பெயர் | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | திருவுந்தியார் | உய்யவந்த தேவநாயனார் | - |
| 2. | திருக்களிற்றுப் படியார் | திருக்கடவூர் உய்யவந்த தேவ நாயனார் | - |
| 3. | சிவஞான போதம் (வார்த்திகப் பொழிப் புரையுடன்) | மெய்கண்ட தேவ நாயனார் | சந்தான குரவரில் முதல்வர் |
| 4. | சிவஞான சித்தியார் | அருணந்தி சிவாச்சாரியார் | மேற்கண்டவரின் சீடர், |
| 5. | இருபா இருபஃது | ஷை | சந்தான குரவரில் இரண்டாமவர் |
| 6. | உண்மை விளக்கம் | திருவதிகை மனவாசகங்கடந்தார் | |
| 7. | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாச்சாரியார் | சந்தான குரவரில் நான்காமவர் |
| 8. | திருவருட்பயன் | | |
| 9. | வினாவெண்பா | | |
| 10. | போற்றிப் பஃறொடை | | |
| 11. | கொடிக்கவி | | |
| 12. | நெஞ்சுவிடுதூது | | |
| 13. | உண்மைநெறி விளக்கம் | | |
| 14. | சங்கற்பநிராகரணம் | | |

# மெய் வழிபாடு

வெற்றியூர் அரு. சுந்தரம் M.A., M.Ed.,

தலைமையாசிரியர்
எஸ்.ஆர்.எம். மேல்நிலைப் பள்ளி
நாட்டரசன் கோட்டை

உலகம் இயங்குவதற்கு அடிப்படைக் காரணம் நம்பிக்கை. நேற்றைக்கு இருந்தவர்கள் இன்றைக்கு இல்லை என்னும் பெருமை உடையது இவ் உலகு என வள்ளுவர் சொன்னாலும் கூட, நாளைக்கு இருப்போம் என்ற நம்பிக்கையில் ஏராளமான ஆசைகளை வளர்த்துக் கொள்கிறோம்.

''கையளவு இதயம் வைத்தான் அதில் கடலளவு ஆசை வைத்தான்''
என்பார் கவியரசர் கண்ணதாசன்

ஆசையின் காரணமாக கணக்கின்றி சொத்துக்களைச் சேர்த்து வைக்கிறோம். பணத்தைப் பதுக்கி வைக்கிறோம்.

''ஆசையே துன்பத்துக்குக் காரணம் எனப் புத்தர் சொன்னாலும், ''கூடு விட்டு ஆவிதான் போன பின்பு யாரே அனுபவிப்பார் பாவிகாள் அந்தப் பணம்'' என்று ஒளவையார் கூறினாலும் அவை எல்லாம் நம் நினைவுக்கு வருவதில்லை.

வேகமான இந்த உலகில் விரைந்து பணக்காரராய் ஆக வேண்டும் என்ற வெறி, போட்டியில் முந்த வேண்டும் என்ற வேகம் நம் கண்ணை மறைத்து விடுகிறது. விளைவைப் பற்றிக் கவலை இல்லை. வெற்றி ஒன்றே குறி எனச் செயல்பட வைக்கிறது.

இப்படிப்பட்ட மனிதனின் வேகத்தை சற்று தடுப்பது கடவுள் நம்பிக்கை

''தப்பு செஞ்சா கண்ணத்தாள் கண்ணைக் கெடுத்திடுவா. பார்வை இல்லாமல் செஞ்சிடுவாள்'' என்ற நம்பிக்கை மனிதனைத் தவறு செய்வதிலிருந்து தடுக்கிறது.

மனிதனை நல்வழிப் படுத்துவதற்குத் தோன்றியவையே மதங்கள்.

மதம் என்றால் கொள்கையில் நிற்றல் என்று பொருள். மதம், நல்லது எது, தீயது எது, எதைச் செய்யலாம், எதைச் செய்யக்கூடாது என வலியுறுத்திக் கூறி வழிகாட்டுகிறது. இருளில் ஒளி விளக்காய் இருப்பது மதமே. மதம் என்பதற்கு ஆணவம் என்ற பொருளும் உண்டு.

மதம் பிடித்த யானையை அடக்க அங்குசம் பயன்படுவதைப் போல, மதம் கொண்ட மனிதனை அடக்க, நல்வழிப்படுத்த பல அருளாளர்கள் பல்வேறு வழிபாட்டு முறைகளைக் கண்டனர். அதனை உலகிற்கு உணர்த்தி உய்யும் வழிதேடச் செய்தனர்.

மதம் என்பதைச் சமயம் என்றும் சொல்வார்கள்.

உணவைச் சமைத்துப் பக்குவப்படுத்தி உண்பதைப் போல, மனத்தைப் பக்குவப்படுத்தி நல்வழி யில் செல்லச் செய்வது மதம்.

இச்சமயம் ஆறு வகைப்படும். இவற்றை சண்மதம் என்பர். அவை சௌரம், சாக்தம், காணாபத்தி யம், கௌமாரம், சைவம், வைணவமாகும்.

இவற்றில் வைணவம் தனிமதமாக நின்று நிலைக்க, கணபதி, முருகன், சூரியன், சக்தி வழிபாடுகள்

எல்லாம் சிவவழிபாடாகிய சைவத்தில் கலந்து, தழைத்து நிலைத்தது.

சைவ சமயத்தை வளர்த்தவர்கள் நாயன்மார்கள் எனப்பட்டனர். அந்நாயன்மார்களின் பெருமையைச் சொல்வது திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணமாகும். அந்நூலின் ஆசிரியர் சேக்கிழார் பெருமான்.

அவரின் வழிநின்று அடியவர் ஒருவரின் வரலாற்றைப் பார்ப்போம். சிவமத வழிபாட்டைச் சாராத ஒருவர் சிவன்பால் ஈர்க்கப்பட்டு முக்தி அடைந்த வரலாற்றைப் பார்ப்போம்.

திருச்சங்க மங்கை என்னும் ஊரில் வேளாளர் குடியில் பிறந்தார் சாக்கியர். இவர் அறுசமயங்களின் மிக்க பொருளை, உட்பொருளைத் தெரிந்துணர விரும்பினார். பல் உயிருக்கும் அருள் உடையாராய் விளங்கினார். நீண்ட காலமாகப் பிறந்து, இறந்து, மீண்டும் பிறந்து, இறந்து உழலும் நிலை ஒழிக்க முயன்றார்.

இதற்காகக் காஞ்சி நகரம் சென்று நல் ஞானம் அடைவதற்குப் பலவழியும் நாடினார்.

அந்நாளில் கல்வியில் சிறந்தது காஞ்சி மாநகரம். இந்நகரைச் சார்ந்த தர்ம பாலர் நாளாந்தா பல்கலைக் கழகததின் துணை வேந்தராய் இருந்தார் எனில், இந்நகரின் கல்விச் சிறப்பை சொல்ல வார்த்தை ஏது?

நகரங்களில் சிறந்தது காஞ்சி என்பர். கல்வி சிறந்த காஞ்சியைக் கலைசிறந்த காஞ்சியாக்கினார்கள் பல்லவ அரசர்கள். இதனைக் ''கல்லிலே கலை வண்ணம் கண்டான்'' எனப் பாடினார் கவியரசர் கண்ணதாசன்.

புத்தமதம் செழித்தோங்கி காஞ்சியிலே வளர்ந்து வந்தது. பல்லவ அரசர்கள் அதற்கு ஆதரவு அளித்து வந்ததால், புத்த மதத்தை எதிர்க்க எச்சமயத்தாலும், யாராலும் முடியவில்லை.

உலகில் மூப்பு, பிணி, சாக்காடு என்ற மூன்றையும் பார்த்த புத்தர், இவற்றிலிருந்து விடுபட வசதி தேடினார். தாம் கண்ட உண்மைகளை மக்களுக்குப் போதித்தார். இதனைப் பரப்ப உண்மையான சீடர்கள் கிடைத்தனர். பிறப்பு, இறப்பிலிருந்து விடுபட வழி சொன்னார்.

எனவே மன்னாத பிறப்பறுக்கும் தத்துவத்தின் வழி உணர புத்தமத நூல்களை ஓதி உணர்ந்தார் சாக்கியர்.

நாட்கள் கழிந்தன. ஆனால் உண்மை நிலையை உணர முடியவில்லை. அந்நூல்களால் உண்மையை உணர்த்தவும் முடியவில்லை.

இந்நிலையில் தன் நிலையும், புறச்சமயச் சார்புகளும் பொருளல்ல என்பது தெளிந்தார். ஈசன் அருள்கூட முடிவில்லாத சிவ நன்னெறியே உண்மைப் பொருள் என உணர்ந்தார். சிவனுக்கு மேல் தெய்வமில்லை என்பர் ஆன்றோர்.

செய்வினையும், செய்வானும், அதன் பயனும், கொடுப்பானும், மெய் வகையில் விதித்த இந் நான்கு பொருளை உணர்த்தும் நெறி சைவ நெறி அல்லது வேறு நெறிக்கு இல்லை. உண்மைப் பொருள் ''சிவனே'' என்று அருளாலே உணர்ந்து அறிந்தார்.

இதனைச் சேக்கிழார் பெருமான்

எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும்
மன்னியசீர்ச் சங்கரன்தாள் மறவாமை பொருள் என்றே
துன்னிய வேடந்தன்னைத் துறவாதே தூயசிவம்
தன்னை மிகும் அன்பினால் மறவாமை தலை நிற்பாம் எனக்கூறுகிறார்.

பொல்லாவேடச் சாக்கியர் எல்லாம் உடைய ஈசனே இறைவன் என அறியார். ஆனால், சாக்கிய கோலத்தைக் களையாமலேயே ஈசன் சிவனை இவர் உணர்ந்தார்.

திருமாலும், நான்முகனும் தேடியும் காணாத அருவினுக்கும், உருவினுக்கும் காரணமாய், நீள் நாகம் அணிந்தவராய், தழற் பிழம்பாய்த் தோன்றிய சிவலிங்கத்தைக் கண்டு தெளிந்தார்.

நாள்தோறும் சிவலிங்கத்தைக் கண்டு வணங்கி உண்பதை வழக்கமாய்க் கொண்டார்.

காஞ்சி மண்ணிலே சிவலிங்கத்தைக் கண்டு, மனம் களி உவகை கொண்டு, செயலறியாது, பக்கத் திலே கிடந்த கல்லை எடுத்து சிவலிங்கத்தின் மீது எறிந்தார்.

இதனை இறைவன் எவ்வாறு ஏற்றுக் கொண்டான் தெரியுமா?

குழந்தை தாயின் மடியிலே அசுத்தம் செய்தாலும் தாய் அக்குழந்தையை வெறுப்பதில்லை. குழந் தையும் தாயை விட்டுப் பிரிவதில்லை. காரணம் பாசப் பிணைப்பு தண்ணீர் அடித்து தண்ணீர்.விலகாத தைப் போலக் குழந்தையும், தாயும் விலகுவதில்லை.

மாறாக குழந்தையின் செயலைப் பார்த்துத் தாய் மகிழ்ச்சி கொள்ளுவாள். இன்னமும் செய்யமாட் டாதா என ஏங்குவாள். குழந்தையின் கன்னத்தில் தாய் கிள்ளுகிறாள். குழந்தை, வலி பொறுக்க மாட்டாமல் அழுவதில்லை. மாறாகச் சிரிக்கும். மீண்டும், மீண்டும் கிள்ளச் சொல்லித் தூண்டும். இதனை இகழ்ச்சியாக இருவருமே நினைப்பதில்லை.

அதுபோல, சாக்கியர்கல் எறிந்ததைச் சடை முடியார் குழந்தையின் செயலாக எண்ணி இகழாமல் அகம் மகிழ்ந்தார். சிவபெருமான் தந்தை மட்டுமல்ல, தாயுமானவன் அல்லவா?

இதனைச் சேக்கிழார் பெருமான்

அகம் நிறைந்த பேருவகை அடங்காத ஆதரவால்
மகவு மகிழ்ந்து வப்பார்கள்; வன்மைபுரி செயலினால்
இகழ்வனவே செய்தாலும் இளம் புதல்வர்க் கின்பமே;.
நிகழுமது போலதற்கு நீள்சடையார்தாம் மகிழ்வார் எனப்பாடி மகிழ்கிறார்

இங்கே தாயாக இறைவனையும் குழந்தையாகச் சாக்கியாரையும், குழந்தையின் செயலாகக் கல் எறிதலையும், கல்லெறிவது மலர்தூவி வழிபடுவதற்கு ஒப்பாகுமா? அன்றித் தப்பாகுமா? என்பதை உணராது அன்பால் செய்வது அனைத்துமே அருச்சனை தான், வழிபாடுதான் என இகழ்ச்சியையும் இளம் புதல்வரின் செயலாகப் புகழ்ச்சியாக இறைவன் ஏற்றுக் கொண்டான் எனக் கூறி நம் சிந்தையை மகிழ்விக்கிறார்.

''பித்தனே! பேயனே! எனத் திட்டிய சுந்தரரின் சொற்களை அர்ச்சனைப் பாட்டாக ஏற்ற சிவன், ஆலகால விஷத்தை அமுதமாக நினைத்து உண்ட சிவன் கல்லெறிந்து வழிபடுதலையும் ஏற்றுக் கொண்டார்.

கல்லெறிந்து சிவனை வழிபடுவது தினந்தோறும் தொடர்ந்தது. தான் செய்வது சரியா? தவறா? என்பதை உணராமல் தினந்தோறும் சிவனைக் கல்லால் எறிந்து வழிபடுவதற்குக் காரணம் அவர் அருளே என உணர்ந்தார். இங்கே அறிவு வேலை செய்யவில்லை அன்பு என்ற உணர்வே மேலோங்கி நின்றது.

''அவனருளாலே அவன் தான் வணங்கி'' என்ற மாணிக்க வாசகர் கூற்று இங்கு ஒப்பு நோக்கத்தக்கது.

துவராடையாகிய செவ்வாடையைக் களையாமலேயே, நாள் தோறும் சிவலிங்கத்தின் மீது கல்லெ றிந்து வழிபட்டு உணவு உண்டு வாழ்ந்து வந்தார்.

காளத்தி வேடராகிய திண்ணனாரைக் குடுமித் தேவர் ஈர்த்து, திண்ணனாரின் அன்பை உலகிற்குக் காட்ட அவர் கண்ணைப் பெற்று திண்ணனார் கண்ணப்பர் ஆனார்ப் போல சாக்கியாருக்குச் சிவன் பால் அன்பு, ஈர்ப்பு ஏற்பட்டது.

எனவே, இருவரின் செயலையும் ஒப்புமை காட்டிச் சேக்கிழார் பெருமான் ஓர் அருமையான செய்தியைப பாடலில் தருகிறார்.

கண்ணப்பர் வேடுவர் குலத்திலே பிறந்தவர். விலங்குகளை வேட்டையாடுவது அவர் தொழில். கருணை, அன்புக்கு அங்கு இடமில்லை. ஆனால், குடுமித் தேவர் அவரை ஈர்த்தார். அவருக்காக இறைச்சியை வேகவைத்து, தான் கடித்துப் பார்த்துப் படைத்தார். வாயில் நீரை அடக்கி வைத்து கொண்டு வந்து மஞ்சன நீராட்டினார். தலையில் பூவைச் சுமந்து வந்து அர்ச்சித்தார்.

குடுமித் தேவர் கண்ணில் ரத்தம் வடிய தன் கண்ணை அப்பினார். மற்றொரு கண்ணிலும் ரத்தம் வடிய தடித்த தோலால் தைத்துத் தான் அணிந்துள்ள செருப்புக் காலைக் குடுமித்தேவர் மீது அடையா ளத்திற்காக மிதித்துக் கொண்டு தன் கண்ணைத் தோண்டப் போகும் போது ''நில் கண்ணப்ப! என்று கூறி, இறைவன் அவர் கையை பிடித்துத் தடுத்து, அவரின் அன்பை சிவகோசாரியாருக்கும், உலகிற்கும் எடுத்துக் காட்டினார்.

அதுபோல, புறசமயத்தவரான சாக்கியர், சிவன்பால் மெய் அன்புடனே சிந்தை செலுத்தி, ஈர்ப்பு டனே கல்லெறிந்து வழிபட்டார்.

அன்புடையவர்கள் கல்லையும் மலராகக் காண்பர். சிவபெருமான் உயிர்களிடத்தில் அன்புடைய வர். எனவே அவர் கல்லையும், செருப்புக் காலையும் மலராகவே பார்த்தார். நல்லவர்கள் செய்கை என மகிழ்ந்தார்.

இறைவன் தீட்சை பெற்றால் முக்தி உண்டு. கண்ணப்பர் செருப்புக் காலால் திருமுடியில் மிதித்த தும் முன்னைச் சார்பு நீங்கி முக்தி கிடைத்தது பாடல் இதோ:

கல்லாலே எறிந்ததுவும் அன்பான படிகாணில்
வில்வேடர் செருப்படியும் திருமுடியின் மேவிற்றால்
நல்லார் மற்றவர் செய்கை அன்பாலே நயந்ததனை
அல்லாதார் கல்லென்பார் அரனார்க்கு அஃது அலராமால்

ஒருநாள் சாக்கியர் உணவு உண்ண அமர்ந்தார். அன்று சிவலிங்கத்தின் மீது கல்லெறியாமல், அதாவது வழிபடாமல் சாப்பிட உட்கார்ந்து விட்டேனே என நினைவுவர எழுந்து பொங்கியதோர் காதலுடன் மிக விரைந்து புறப்பட்டு யானைத் தோலை அணிந்தவர் முன்பு நின்றார்.

கீழே கிடந்த கல்லை எடுத்து சிவலிங்கத்தைக் குறி வைத்து எறிய முயலுகையில் வான் வெளியில் மங்கையொரு பாகர் மனைவியோடு தொண்டர் எதிரில் தோன்றினார். வினை ஒழிந்த சாக்கியர் கண்ணுதலார் கருணை பொழி திருநோக்கால் முக்தி அடைந்தார்.

கண்ணப்பரைத் தடுத்த இறைவன், கல்லெறிந்த சாக்கியரையும் தடுத்து வீடுபேறு அளித்தார் எனில் அவர் கருணைக்கு நிகரேது?

வழிபாட்டிற்குக் கல்லோ, கால் செருப்போ முக்கியமல்ல. மெய் அன்பு ஒன்றே முக்கியம் என்ப தைச் சாக்கிய நாயனார் வரலாறு நமக்கு, உலகிற்கு உணர்த்துகிறது.

மேலும், இறைவனை அடைய சாதியோ, மதமோ தடையில்லை. மெய் அன்பு வழிபாடு ஒன்றே. இறைவனை அடையவழி என்பதை சாக்கிய நாயனார் வரலாறு உணர்த்துகிறது.

# நாயன்மார்களின் நலன்

தொகுத்தவர் : நா.சே. நாராயணன்

## 1. குரு-லிங்க- சங்கமங்களால் முத்தி பெற்றவர்

### குரு அருளால் முத்தி பெற்றவர் பன்னிருவர் :-

சுந்தரமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், குலச்சிறை நாயனார், பெருமிழலைக் குறும்ப நாயனார், அப்பூதியடிகள் நாயனார், திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், திருமூல நாயனார், சோமாசி மாற நாயனார், கணநாத நயானார், நெடுமாற நாயனார், மங்கையர்க்கரசியார், திருநீலகண்டயாழ்ப் பாண நாயனார்.

### சிவலிங்கத்தால் முத்திபெற்றவர் முப்பதின்மர் :-

எறிபத்த நாயனார், கண்ணப்ப நாயனார், குங்குலியக்கலய நாயனார், அரிவாட்டாய நாயனார், ஆனாய நாயனார், மூர்த்தி நாயனார், உருத்திரபசுபதி நாயனார், திருநாளைப் போவார் நாயனார், நமிநந்தி அடிகள் நாயனார், ஏயர்கோன்கலிக்காம நாயனார், தண்டியடிகள் நாயனார், சாக்கிய நாயனார், சிறப் புலி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார், கூற்றுவ நாயனார், அதிபத்த நாயனார், கலிய நாயனார், ஐயடிகள் காடவர்கோன் நாயனார், கணம்புல்ல நாயனார், காரி நாயனார், வாயிலார் நாயனார், கழற் சிங்க நாயனார், செருத்துணை நாயனார், புகழ்த்துணை நாயனார், கோட்புலி நாயனார், பூசலார் நாயனார், கோச்செங்கட்சோழ நாயனார்.

### சிவனடியாரை வழிபட்டு முத்தி பெற்றவர் பத்தொன்பதின்மர் :-

திருநீலகண்ட நாயனார், இயற்பகை நாயனார், இளையான்குடிமாற நாயனார் மெய்ப்பொருள் நாய னார், விறன்மிண்ட நாயனார், அமர்நீதி நாயனார், ஏனாதிநாத நாயனார், மானக்கஞ்சாற நாயனார், திருக்குறிப்புத் தொண்ட நாயனார், காரைக்கால் அம்மையார், மூர்க்க நாயனார், சிறுத்தொண்ட நாய னார், புகழ்ச்சோழ நாயனார், நரசிங்கமுனையரைய நாயனார், கலிக்கம்ப நாயனார், சத்தி நாயனார், முனையடுவார் நாயனார், இடங்கழி நாயனார், நேசநாயனார்.

### சுந்தரரைப் புத்திரராகப் பெற்ற பேற்றினாலேயே முத்தி பெற்றவர் இருவர் :-

சடைய நாயனார், இசைஞானியார்.

## 2. குருபூசை

அறுபத்து மூன்று நாயன்மார்களாலும், மாணிக்கவாசக சுவாமிகளாலும், பெரியபுராணம் செய்தருளிய சேக்கிழார் பெருமானாலும் சைவசித்தாந்த சாத்திர உபதேசம் செய்து அருளிய திருக்கைலாய பரம்பரை சந்தான குரவர்களாகிய மெய்கண்டதேவர், அருணந்தி சிவாச்சாரியார், மறைஞான சம்பந்த சிவாச்சாரி யார், உமாபதி சிவாச்சாரியார் என்னும் நால்வர்களாலும் தமிழ் நாடெங்கும் சைவசமயம் தழைத்தோங் கியது.

ஆதலினாலே சைவ சமயத்தைச் சார்ந்தவர்கள் யாவரும் நாயன்மார்களுக்கு முறைப்படி ஆர்வத் தோடு குருபூசை நடத்த வேண்டும்.

அந் நாயன்மார்கள் எல்லோருக்கும் குருபூசை செய்யச் சக்தி இல்லாதவர்கள் அவர்களுக்குள்ளே சமயகுரவர்களான திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், சுந்தரமூர்த்தி நாயனார், மாணிக்கவாசக சுவாமி

கள் ஆகிய நால்வருக்கும், சேக்கிழார் பெருமானுக்கும் சந்தான குரவர்களான மெய்கண்ட தேவர், அருணந்திசிவாச்சாரியார், மறைஞான சம்பந்த சிவாச்சாரியார், உமாபதி சிவாச்சாரியார் ஆகிய நால்வருக்கும் ஆக இந்த ஒன்பதுபேருக்கு மாத்திரமாயினும் குருபூசை செய்வது முக்கியமாகும்.

### 3. சமயகுரவர் - சேக்கிழார் திருநட்சத்திரம்

''பாடிய சம்பந்தர் வைகாசி மூலம், பயிலும் அப்பர்
நீடிய சித்திரை மாதச் சதயம், நிறைவன்றொண்டவர்
ஆடியில் சோதி, திருவாதவூரர் நல் ஆனி மகம்
தேடிய சேக்கிழார் வைகாசிப் பூசம் சிறந்தனரே.''

### 4. சந்தானகுரவர் திருநட்சத்திரம் (கி.பி. பதிமூன்றாம் நூற்றாண்டு)

''சித்திரை அத்தம் உமாபதி, ஆவணித் திங்கள்தனில்
உத்திரம் சீர்கொள் மறைஞான சம்பந்தர், ஓது கன்னிச்
சுத்த மெய்ப்பூரம் அருணந்தி, ஐப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்டதேவர் சிவகதி மேவினரே''.

### 5. நாயன்மார்களின் காலம்

*1. கி.பி. 600* சம்பந்தர் அப்பர் இவர்களுக்கு முற்பட்டவர் *17*

*2. கி.பி. 601 - கி.பி. 680.* சம்பந்தர் அப்பர் இருவரின் காலத்தவர் *11.*

*3. கி.பி. 681 - கி.பி. 840.* இருவர் காலத்திற்கும் ஆரூரர் காலத்திற்கும் இடைப்பட்டவர் *22*

*4. கி.பி. 840க்குப்பின்* ஆரூரர் காலத்தவர் *13*

### 6. ஆதிசங்கரர் போற்றிய நாயன்மார் ஐவர்

சௌந்தரியலகரியில் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரையும்; சிவானந்தலகரியில் கண்ணப்ப நாயனாரையும், சிவபுசங்கத்தில் இயற்பகை நாயனாரையும், சிறுத்தொண்ட நாயனாரையும், சண்டேசுவர நாயனாரையும் சங்கராச்சாரியார் போற்றிப் பரவுகின்றார்.

### 7. தற்போது உள்ள திருமுறைப் பாடற் பதிகங்களின் விபரம்

| | சம்பந்தர் | அப்பர் | சுந்தரம் | மொத்தம் |
|---|---|---|---|---|
| 1. பாண்டி நாட்டுத் திருமுறைகள் | 24 | 5 | 5 | 34 |
| 2. கொங்கு '' '' | 4 | 1 | 4 | 9 |
| 3. மலை '' '' | - | - | 1 | 1 |
| 4. தொண்டை '' '' | 31 | 24 | 13 | 68 |
| 5. நடு '' '' | 23 | 27 | 12 | 62 |
| 6. சோழ '' '' | 285 | 212 | 58 | 555 |
| 7. ஈழ '' '' | 2 | - | 1 | 3 |
| 8. துளுவ '' '' | 1 | 1 | - | 2 |
| 9. வட '' '' | 6 | 5 | 3 | 14 |
| 10. பொதுப் பதிகங்கள் | 7 | 37 | 4 | 48 |
| ஆக மொத்த திருப்பதிகங்கள் | 383 | 312 | 101 | 796 |
| ஆதியில் இருந்த திருப்பதிகங்கள் | 16,000 | 49,000 | 38,000 | 1,03,000 |

# அள்ளிக் கொடுப்போம் அதையும் அளந்து கொடுப்போம்

தொகுப்பு : நா.சே. நாராயணன், நாட்டரசன்கோட்டை.

இணைந்து தர்மகாரியம் செய்வது நகரத்தாரின் தனித்தன்மையாகும். அதிலும் தன்னால் அதிகம் கொடுக்கமுடியும் என்றாலும், தன்னடக்கத்துடன் அடுத்தவர் கொடுத்த தொகையை அனுசரித்து தர்மம் செய்யும் பாங்கு மேலும் சிறப்புடையதாகும். இதிலிருந்து மாறுபட்டு, தனித்துத் தர்மம் செய்பவர்களும் இருக்கிறார்கள். அவர்களின் கொடை உள்ளத்தைப் போற்றும் வகையிலும் இதுபோல நாமும் செய்ய வேண்டும் என்ற கொடை உள்ளம் மற்றவர்களுக்கும் ஏற்படலாம் என்ற நல்நோக்கோடும், நாட்டரசன் கோட்டையில் தனிப்பட்ட முறையில் செய்த தர்மங்களையும், நகரத்தார் பயன்பெறும் சிலவற்றையும் தொகுத்ததில் ஏதேனும் விடுபட்டிருந்தால் அக்கொடை உள்ளங்கள் பொருத்தருள வேண்டுகிறேன்.

## கல்விக்கூடங்கள்

### 1. ச.இராம. உயர்நிலைப்பள்ளி

1927ல் தொடங்கப்பட்டு, 1944ல் உயர்நிலைப்பள்ளியாகி, 1982ல் மேல்நிலைப்பள்ளியாக உயர்வு பெற்றது. பள்ளி மாணவருக்கென ''அரசு மாணவர் விடுதி'' உள்ளது.

### 2. விசாலாட்சி வித்யாசாலா

1944ல் 1 முதல் 5ம் வகுப்புவரை தொடங்கப்பட்டது. இவ்விரு பள்ளிகளையும் ச.இராம. இராமநாதன் செட்டியார் குடும்பத்தினர் நிருவகித்து வருகின்றனர்.

### 3. குப.இராம. ஆரம்பப்பாடசாலை

10.11.1937ல் 1 முதல் 8ம் வகுப்பு வரையிலும் குப.இராம. பெண்கள் உயர்தர ஆரம்பப் பாடசாலையாகத் தொடங்கப்பட்டு 5.6.50ல் இருந்து 5ம் வகுப்பு வரை மட்டுமே உள்ள ஆரம்ப பாடசாலையாக, குப.ராம. ராமநாதன் செட்டியார் குடும்பத்தாரால் நிருவகிக்கப்பட்டு வருகிறது.

### 4. கானாடுகாத்தான் முத்தையா சுப்பையா செட்டியார் மேல்நிலைப்பள்ளி

நாட்டரசன்கோட்டையில் பிறந்து கானாடுகாத்தானுக்கு சுவீகாரம் சென்ற V.VR. N.M. சுப்பையா செட்டியாரால் 23.7.67ல் நிறுவப்பட்டு, முதல் செயலரான திரு. V.K.N. கண்ணப்ப செட்டியாரின் கட்டிடத்தில் நடைபெற்று வந்தது.

கோளஞ்செட்டியார் குடும்பத்தினரால் நன்கொடையாக வழங்கப்பட்ட 21/2 ஏக்கர் நிலப்பரப்பில் பள்ளியின் புதிய கட்டிடம் கட்டப்பெற்று 3.8.72ல் திறந்து வைக்கப்பட்டது.

1981ல் மேல்நிலைப்பள்ளியாக உயர்த்தப்பட்டதால், மேல்நிலை வகுப்புகள் நடைபெறத் தேவைப்பட்ட கட்டிடத்தை பள்ளியின் முதல் செயலாளரின் நினைவாக, அவரின் குமாரர்கள் நால்வரால் 'V.K.N. கண்ணப்ப செட்டியார் நினைவுக் கட்டிடம்'' கட்டப்பட்டது.

1969ல் தொடங்கப்பட்ட ''அரசு மாணவியர் விடுதி'' யால் வெளியூர் மாணவியர் பயன்பெறுகிறார்கள்.

1982 முதல் 2வது செயலாளரான கண. கண்ணப்பன் அவர்களின் மேற்பார்வையால் நடைபெற்று வருகிறது.

### 5. சிவகாமி டெக்னிக்கல் இன்ஸ்டிடியூட்

ஆங்கிலம், தமிழ் தட்டெழுத்துப் பயிற்சியும், ஆங்கில சுருக்கெழுத்து பயிற்சியும் Y. சத்தியமூர்த்தி குடும்பத்தினரால் பெண்களுக்கு மட்டும் இலவசமாக இப்பள்ளி வளாகத்தில் நடத்தப்படுகிறது.

## 6. சத்தியமூர்த்தி - மோகன் தொழிற்பயிற்சி நிலையம் I.T.I.

1989ல் ஆடிட்டர் Y. சத்தியமூர்த்தி. கண. மோகன் இருவராலும் எலக்ட்ரிஷன், வயர்மென், ப்ளம்பர் ஆகிய பிரிவுகளுடன் தொடங்கப்பெற்று, நன்கொடை வாங்காமல் அவர்களின் நிர்வாகத்தில் நடைபெறுகிறது.

## 7. கண்ணாத்தாள் மெட்ரிகுலேசன் ஆங்கிலப்பள்ளி

திரு.சுப. ராம.மெ. நடராஜன் செட்டியார் தொடங்கியதை திரு. K. பிச்சை அவர்கள் நடத்தி வருகிறார்.

## மீனாட்சி வெள்ளையப்பா தாய்சேய் நலவிடுதி

பிரசவம் மற்றும் பெண்களுக்கு மருத்துவம் கண.உல.வெ.கண. குடும்பத்தார் நடத்தி வருகிறார்கள்.

## நகரத்தார் ஐயாக்கள் மடம்

நகரத்தார் பொதுவாகப் பயன்படுத்த பல நூற்றாண்டுகளுக்கு முன்னர் கட்டப்பட்டு, பயன்படுத்த முடியாத படி பழைமையாய் இருந்ததை, முழுமையாக நீக்கிவிட்டு, பழ.வீர.கண.ச. கண்ணப்ப செட்டியார், க. நாகம்மை ஆச்சி ஆகியோர் புதிய கட்டிடம் கட்டி 25.1.93ல் நகரத்தாரிடம் ஒப்படைத்தார்கள்.

## ஸ்ரீகல்யாணராமர் கோயில்

''கங்கைராமன் செல்லாத இடமில்லை; ஆனால் தெற்கில் சேதுக்குச் செல்கையிலே பாதம் வைத்த நல்லூராம் நாட்டரசன்கோட்டை மண்ணை நற்கம்பன் கண்டதனால் நாடிவந்து'' பள்ளிபடைக்கோயில் கொண்டதனால், பாட்டரசன் கோட்டை என்ற புகழ்ப்பெயரையும் பெற்ற இந்த ஸ்தலத்தில், ''கல்யாண ராமர் கோயில் கட்டுகிறேன்'' என்று திருஉள்ளம் கொண்ட சுப.ராமநாதன் செட்டியார் ரூ. 50,000ஐ திருப்பணிக்காக எடுத்து வைத்தார். அவரின் மூத்தபுதல்வர் மெய்யப்ப செட்டியார், திருக்கோயில் கட்ட இடம் வாங்கியதுடன், சிற்பியிடம் தெய்வச் சிலைகள் செய்ய முன் பணம் கொடுத்தார். இவரின் இரண்டாவது மகன் நடராஜன் செட்டியார் கோயில்கட்டும் திருப்பணியை 1990ல் தொடங்கி, திருப்பணிகள் நிறைவடைந்ததும், சிற்பியின் இல்லத்தில் இருந்த தெய்வச்சிலைகளை ''தன்னடியே பாடியவன் தானிருந்த இடம் தேடிப் பொன்னடிகள் வைத்துப் புறப்பட்டு வந்தனையோ'' என்று பொற்புடன் எடுத்து வந்து, கோயிலில் பிரதிஸ்டை செய்து 26.6.1994ம் நாளன்று திருக்குடநன்னீராட்டு விழாவினைச் சிறப்புறச் செய்தார்.



**பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ள சீதாதேவி, கல்யாணராமர், இலக்குவன், ஆஞ்சனேயரின் திரு உருவங்கள்.**

## சக்கரத்தாழ்வார் கோயில்

பெருமாள் கோயில் வளாகத்தில் சக்கரத்தாழ்வாருக்கெனத் தனியாக கோயிலை புதிதாக கட்டி *31.3.2002*ல் மகா சம்ப்ரோக்ஷணம் செய்தார்கள் மா.கண.க. முத்துமாணிக்கம் செட்டியார் விசாலாட்சி ஆச்சி மக்கள் குடும்பத்தினர்.



**சக்கரத்தாழ்வார் திருக்கோயில்**

## திருமண மண்டபம்

### 1. நகரத்தார் திருமண மண்டபம்

*15.4.1998*ல் நகரத்தார் பொதுநிதியுடன் நன்கொடையும் வாங்கி நகரமாளிகையை ஒட்டிக் கட்டப்பெற்றது. இதுவரை 53 திருமணங்களும் 4 சாந்திகளும் 10 தங்கும் வசதிகளும் நடைபெற்றுள்ளது.

இம்மண்டபத்தில் சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை அன்று ''மகேஸ்வர பூஜை'' பூஜைக்கமிட்டியால் நடத்தப்படுகிறது.

நகரத்தாருக்கே உரித்தான பிள்ளையார் நோன்பு சேவு.சாம. ஆவிச்சி அவர்களால் நடத்தப்பெற்று, பெயர் பதிவு செய்ய வசூலிக்கும் தொகையையும் ஏலத்தால் வரும் தொகையையும், நகரப் பொது இருப்பில் சேர்க்கப்படுகிறது.

செவ்வாய் பொங்களன்று, வெளியூர்களிலிருந்து வரும் நகரத்தாருக்குப் பெரிதும் நலம் பயக்கும் வகையில்; விரும்பிக் கொடுப்பவர்களிடம் நன்கொடை பெற்றுக் கொண்டு, நகரப்பொதுச் செயற்குழு கமிட்டியின் மேற்பார்வையில் பகல் உணவு, இரவு சிற்றுண்டி ஆகியவை சிறப்புடன் வழங்கப்படுகிறது.

### 2. இராமகிருஷ்ணன் செட்டியார் வள்ளியம்மை ஆச்சி திருமண மண்டபம்

பொதுமக்கள் அனைவராலும் பயன்படுத்தப்படுகிறது.

### 3. சத்தியமூர்த்தி திருமண மண்டபம்

வேண்டுபவர்கள் பயன்படுத்த இலவசமாக அனுமதிக்கப்படுகிறார்கள்.

## முடிக்காணிக்கை மண்டபம்

கண்ணுடைய நாயகி அம்மன் கோவிலுக்கு முடிக்காணிக்கை செலுத்தும் மண்டபம் 10.2.98ல் சுப.ராம.மெ. நடராஜன் செட்டியாரால் கட்டப்பெற்றது.

## மயானம் - சொர்க்கரதம்

நகரத்தார் பயன்படுத்தி வரும் மாயனத்தில் நவீனமுறையில் மண்டபம் கட்டியும், இறுதி யாத்திரைக்குப் பயன்படுத்த ''சொர்க்கரதம்'' செய்தும் உள்ளார், சுப.ராம.மெ. நடராஜன் செட்டியார்.

# நிகழ்ச்சி நிரல்

| வருஷம் | மாதம் | தேதி | ஆங்கில வருடம் | கிழமை | நேரம் | நிகழ்ச்சி |
|---|---|---|---|---|---|---|
| சித்ரபானு | ஆவணி | 7 | 23.8.2002 | வெள்ளி | காலை 10 மணிக்கு | அனுக்ஞை, விக்னேஷ்வர பூஜை, கணபதி ஹோமம், நவக்கிரக ஹோமம். |
| | | | | | பகல் 2 மணிக்கு | வாஸ்து சாந்தி, மிருத்சங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரெக்ஷாபந்தனம். |
| | | | | | இரவு 7 மணிக்கு | கடஸ்தாபனம் |
| | | | | | இரவு 8 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | இரவு 10 மணிக்கு | பூர்ணாகுதி |
| | ஆவணி | 8 | 24.8.2002 | சனி | காலை 8 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | பகல் 12 மணிக்கு | பூர்ணாகுதி |
| | | | | | மாலை 6 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | இரவு 9 மணிக்கு | பூர்ணாகுதி |
| | ஆவணி | 9 | 25.8.2002 | ஞாயிறு | காலை 8 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | பகல் 12 மணிக்கு | பூர்ணாகுதி |
| | | | | | மாலை 6 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | இரவு 9 மணிக்கு | பூர்ணாகுதி |
| | ஆவணி | 10 | 26.8.2002 | திங்கள் | காலை 4 மணிக்கு | யாகசாலை பூஜை |
| | | | | | காலை மணி 6.30க்கு மேல் 7.30 மணிக்குள் | கும்பாபிஷேகம், மூலஸ்தானம் மகா கும்பாபிஷேகம். |
| | | | | | மாலை 3 மணிக்கு | மகாபிஷேகம், மண்டலபூஜை ஆரம்பம். |
| | | | | | இரவு 12 மணிக்கு | பஞ்சமூர்த்திகள் திருவீதி உலா. |

நாதசுர இன்னிசையும், தேவார இன்னிசையும், இசையரங்குகளும் சமயச் சொற்பொழிவுகளும் கிராமியக்கலை நிகழ்ச்சிகளும் வாண வேடிக்கைகளும் நடைபெறும்.

உ
சிவமயம்

Book - Post

சிவகங்கை தேவஸ்தானம்

நாட்டரசன்கோட்டை அருள்மிகு சிவகாமி அம்மன்
உடனாய அருள்மிகு கரிகால சோழீஸ்வரர்
திருக்கோயில் கும்பாபிஷேக அழைப்பிதழ்

திரு.................................அவர்கள்

.................................

.................................

.................................

உ
சிவமயம்

    

சிவகங்கை சமஸ்தானம் தேவஸ்தானம் பரம்பரை அறங்காவலர்

மேதகு ராணி D.S.K. மதுராந்தகி நாச்சியார் அவர்களின் ஆளுகைக்கு உட்பட்ட

# நாட்டரசன் கோட்டை அருள்தரு சிவகாமி அம்மன் உடனாய அருள்தரு கரிகால சோழீஸ்வரர் திருக்கோயில்

# அஷ்டபந்தன கும்பாபிஷேக அழைப்பிதழ்

### மஞ்சணத்திப் பிள்ளையார் வணக்கம்

மஞ்சுகள்தோய் மாடங்கள் மலிகின்ற வளநகராம்
எஞ்சலிலா இனியவர்கள் வாழ்கின்ற தென்பனசை
தஞ்சமென வந்தவரைத் தாங்கிக் காத்தளிக்கும்
மஞ்சணத்திப் பிள்ளையார் மலரடிகள் தொழுதிடுவாம்.

### கரிகாலசோழீசர் வணக்கம்

அரிஅயனும் தேவர்களும் அறியான் றன்னை
அந்தணர்கள் நான்மறைக்கு அப்பா லானைக்
கரிகால சோழீசப் பெயரான் றன்னைக்
கருதுவார் உள்ளத்தே புகுவான் றன்னைத்
தெரியாத காலத்தே தென்பனசை நகரதனில்
திருக்குளமாம் வீரக்கண்டான் தென்பா லானைப்
பெரியானைப் பிறையணிந்த சடையான் றன்னைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே.




### சிவகாமியம்மன் வணக்கம்

தவங்கள் பலவியற்றித் தான்காணாத் தளிரடிகள்
தவமுயற்சி யில்லாமல் தந்தளிக்கும் தாயாவாள்
சிவகாமி அன்னையிவள் தென்பனசை நகர்தன்னில்
பவவினைகள் நீங்கப் பல்வளமும் தந்திடுவாள்.

### முருகன் வணக்கம்

முக்கணான் புதல்வா போற்றி! முழுமுதற் பொருளே போற்றி!
பக்கத்தே இருவர் வைத்த பனசைவாழ் மைந்தா போற்றி!
மக்களின் மனத்திருந்து மனமகிழ் செய்வாய் போற்றி!
எக்கணம் நினைத்தா லும்வந் தெமக்கருள் செய்வாய் போற்றி!

எந்நாட்டவர்க்கும் இறைவனாய்த் தென்னாடுடைய அருள்தரு சொக்கனாதப் பெருமான் அரிய திருவிளையாடல்கள் அறுபத்துநான்கினை ஆற்றிய இடனாயும், மண்ணுலகில் மன்னவன் மகளாய் வந்த அங்கயற்கண்ணியாம் அன்னை மீனாட்சி அருளாட்சி செய்த இடனாயுமுள்ள மதுரையைத் தலைநகராகக் கொண்ட தென்பாண்டிநாட்டில், நன் பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்கிழி தருமிக்கருளிய கறை மிடற்றண்ணலால், "சொற்றமிழ் பாடுக" என்று சொல்லப்பெற்ற பெருமையுடையவராம் சுந்தரமூர்த்திக்குக் காளையின் கோலம் காட்டிய அருள்தரு காளீஸ்வரர் அருள்தரு சொர்ணவல்லித் தாயுடன் அமர்ந்த திருக்கானப்பேரென்னும் காளையார் கோயில் தலத்திற்கருகாமையிலுள்ளதாய், கல்லார்க்கும் கற்றார்க்கும் உற்றார்க்கும் மற்றார்க்கும் கண்ணளித்துக் கருணைமழை பொழியும் அருள்தரு கண்ணாத்தாள் கோயில் கொண்ட சிறப்புடையதாய் "கனகவில்லிதன் வில்லைச் சனகன் மகள் பொருட்டாற் காரானைபோல் வளைத்த ஸ்ரீ ராமனார் புனல்சூழிலங்கை சேனை முனைவாளால் அமர்வென்ற புகழைத் தமிழ்க்கடலாய் மகிழச்செய்த மனதுபூரிக்கும் கம்பன்," தேடிவந்து தெய்வத்தன்மை பெற்றதாய்த் திகழும் பாட்டரசன்கோட்டையாம் நாட்டரசன்கோட்டையில், காவிரிக்குக் கரை அமைத்த கரிகால சோழனால் வழிபடப் பெற்ற பெருமையும் பழமையும் உடைய இச்சிவாலயத்தில் வீற்றிருக்கின்ற அருள்தரு சிவகாமி அம்மன் உடனாய அருள்தரு கரிகால சோழீசர்க்கும் மற்றும் பரிவாரதேவதைகளுக்கும், நனவு, கனவு, ஒடுக்கம் என்ற மூன்று வகை துய்ப்பு நிலைகளைக் குறிக்கும் மூன்று வாயில்களைக் கொண்டு புதிதாகக் கட்டப்பட்டுள்ள இராஜகோபுரத்திற்கும் சித்ரபானு ஆண்டு ஆவணித் திங்கள் 10ம் நாளன்று (26-8-2002) திங்கட்கிழமை கிருஷ்ணபட்சமும், திருதியை திதியும், உத்திரட்டாதி நட்சத்திரமும், சிம்ம லக்கினமும், சித்தயோகமும் கூடிய நல்வேளையில் காலை மணி 6.30க்கு மேல் 7.30 மணி அளவில் அஷ்டபந்தன கும்பாபிஷேகம் நடைபெற இருப்பதால் சிவநேசச் செல்வர்கள் சுற்றமும் துணையும் சூழ்தரவந்து கண்டு வணங்கி வழிபட்டு எம்பெருமான் அருளாசியினைப் பெற்றுப் பேரானந்தப் பெருவாழ்வு வாழ வேண்டுகிறோம்.

சித்ரபானு ஆண்டு
ஆனி மீ 31ம் தேதி
15-7-2002

ஆ. சேவற்கொடியான் பி.ஏ.,
தேவஸ்தான கண்காணிப்பாளர்,
சிவகங்கை சரகம்

P.P.V. அண்ணாமலை செட்டியார்
கௌரவ கண்காணிப்பாளர்,
நாட்டரசன்கோட்டை.

இங்ஙனம்
நாட்டரசன்கோட்டை
நகரத்தார்கள்
(திருப்பணிதார்கள்)

திரு.பா. இளங்கோ, B.Com., B.L.,
தேவஸ்தான மேலாளர்,
சிவகங்கை சமஸ்தானம், தேவஸ்தானம்
சிவகங்கை.

ஸ்ரீராம், சிவகாசி.